# தூய சிந்தையாள்

## (கைகேயி)

ஒரு திறனாய்வு




ஆசிரியர் :

டாக்டர். **கு. திருமேனி** எம். ஏ., பி. ஓ. எல்., பி. எச். டி.,

முதுகலைப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,

தேசீயக் கல்லூரி, திருச்சிராப்பள்ளி.



**கோவல நிலையம்**

14, வீரேச்சுரம், திருச்சிராப்பள்ளி – 6,

15-4

# பொருளடக்கம்



## அருஞ்சொற்பொருள்

| | | | பக்கம் |
|---|---|---|---|
| சுதை | — | சுண்ணும்புப் பொம்மை | 1 |
| அவந்தன் | — | ஆதரவற்றவன் | 3 |
| வசை | — | பழி | 4 |
| மம்மர் | — | மயக்கம் | 4 |
| ஊற்றம் | — | அழுத்தம், பிடிப்பு | 4 |
| கரி | — | சாட்சி | 5 |
| மாகயத்தி | — | பெரிய கயமைக்குண முடையவள் | 9 |
| விதந்து | — | மேம்பட்டு | 9 |
| ஏதீடாக்கி | — | காரணமாக்கி | 10 |
| கையாறு | — | துன்பம் | 12 |
| இச்சகம் | — | முகமன் | 12 |
| உறழ்ச்சி | — | ஒப்புமைவழி மேம்பாடு காட்டல் | 20 |
| கொடையிடைப்பட்ட | — | கொடுக்கும்போது தோன்றும் | 24 |
| கையடை | — | அடைக்கலம் | 25 |
| கால்முளை | — | சந்ததி | 26 |
| நொதுமல் | — | நட்பும் பகைமையும் இல்லாமை | 27 |
| பீழை | — | துன்பம் | 30 |
| கோள் | — | கொள்கை | 32 |
| ஐயுறவு | — | சந்தேகம் | 33 |

| | | |
|---|---|---|
| கரவு | — மறைவு | 35 |
| ஏதம் | — துன்பம் | 38 |
| அளறு | — நரகம், சேறு | 40 |
| விஞ்சை | — வித்தை | 56 |
| உழந்திருக்க | — வருந்தியிருக்க | 62 |
| இறை | — கொஞ்சம், அரசன் | 63 |
| நவை | — குற்றம் | 67 |
| துளக்கம் | — அசைவு | 71 |
| கலுழ்ந்தாளா | — அழுதாளா | 73 |
| பூசை | — பூனே | 73 |
| ஓம்படை | — அடைக்கலம் | 76 |
| உறுப்பறை | — உறுப்புக்களே வெட்டிச் சிதைத்தல் | 80 |
| முழுத்தம் | — முகூர்த்தம் | 84 |
| கடைபோயிற்ரு | — நிறைவேறிற்ரு | 86 |
| தகைக்ககில்லாமை | — தடைசெய்ய முடியாமை | 86 |
| வயிர்ப்புடைமை | — நெஞ்சில் வஞ்சம் வைத்திருத்தல் | 98 |
| சூளுறவில் | — சத்தியத்தில் | 105 |
| இரட்ட | — வீச | 123 |



# முன்னுரை

இராம காதையில் இடம் பெற்ற கைகேயியைப் பற்றி அறியாதார், அறியாதாரே. இராமாயணச் சொற் பொழிவுகள் நிகழ்த்தும் பெருமக்கள், தாம் அறிந்த முறையில் தம் பேச்சைக் கேட்கும் கூட்டத்துக்கு ஏற்பப் பாத்திரப் படைப்புகளின் பண் பாட்டினை எடுத்துச் சொல்வதுண்டு. இராமாயணம் படித்த வர்கள் பலர் கைகேயியைப் பற்றி இழிவாகப் பேசக் கண்டு சிலர் அவள் பெருமையைப் பேச முற்பட்டனர். அவருள் எழுத்து வடிவில் ''தயரதன் குறையும் கைகேயி நிறையும்'' என்ற தலைப்பில் பேராசிரியர் நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் அவர்கள் ஒரு நூல் எழுதி வெளியிட்டார்கள். திரு தி. மாணிக்கவாசகம் செட்டியார் என்பவர் பாரதியார் நூலுக்குத் 'தெய்வக் கற்பினள்' என்ற பெயரில் ஒரு மறுப்பு நூல் எழுதி வெளியிட்டுள்ளார்.

நூல் வடிவில் வந்த இவ்விரண்டு நூல்களும் வான்மீகி ராமாயணத்தில் உள்ள கன்யா சுல்க்கத்தை அடிப்படையாகக் கொண்டு தயரதன் கைகேயி என்ற இவர் தம் குறை நிறை களைப் பற்றி ஆய்கின்றன.

பாரதியார் கம்பர் பாட்டு ஒன்றை வான்மீகத்தின் மொழி பெயர்ப்பு என்று காட்டி கன்யா சுல்க்கத்தால் கைகேயிக்கு நிறையுடைமை கற்பிக்கும் செயலை மேற்கொண்டார். திரு வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் அப்பாட்டினை வான் மீகத்தின் மொழி பெயர்ப்பு அன்று என்று மறுத்தாரேயன்றி மறுப்பதால் வரும் பயனைப் பற்றிப் பேசவில்லை.

கம்பருக்கும் வான்மீகருக்கும் உள்ள நெருங்கிய தொடர்புடைமை கண்டு வான்மீகத்தைப் பார்த்துக் கம்பர்

மொழி பெயர்த்தார் என்பார்க்குக் 'கன்யா சுல்க்கக்' கொள்கை ஏற்புடையதாகும். வான்மீகருக்கும் கம்பருக்கும் உள்ள வேறு பாடுகளைக் கொண்டு இருவருக்கும் தொடர்பில்லை என்று கூறும் எனக்கு, கம்பர் கன்யா சுல்க்கத்தைப் பற்றி யாண்டும் பேச வில்லை என்பதே என் கருத்து. கம்பராமாயணத்தில் உள்ள உறுப்பினர்களுக்குக் கம்பர் சொல்லைக் கொண்டு நல்லதும் அல்லதும் பேசத்தான் முடியுமே அன்றி, உலகில் உள்ள இராமாயணங்களை எல்லாம் எடுத்துக் காட்டிக் கூறுவது முறையன்று.

கைகேயி என்பாள் தயரதனோடு 'சேணுலாவிய நாளெலாம் உயிர் ஒன்று போல் வாழ்ந்து' வந்த தெய்வக் கற்பினள் என்று கூறிய கம்பர், அவளையே 'தவ்வை' என்றும் 'மாகயத்தி' என்றும் பேசுகின்றாரே? முற்கூறிய கூற்றிற்கும் பிற்கூறிய கூற்றிற்கும் உள்ள தொடர்பு என்ன? இருவேறு கூற்றுக்களும் மெய்யானவையா? அன்றி முன்பின் முரண்படப் பேசப் பெற்றனவா? இராமன் இறுதி வரை கைகேயியைத் தன் தெய்வம் என்று பேசுகின்றானே? அவள் உண்மையில் தெய்வந் தானா? பரதன் கூற்றுப்படி அவள் பாழ்த்த பாவியா? ஒரு கால் இராமன் போலிமொழி கூறினானா? உண்மை எது என்று காண்பது தான் இங்கு யான் ஆய எடுத்துக் கொண்ட செய்தி. யான் கம்பரை மட்டுமே அடிப்படையாக வைத்துக் கொண்டு கைகேயியின் பண்பாட்டினைப் புலப்படுத்தியுள்ளேன். கன்யா சுல்க்கத்துப் பேச்சை யானும் கம்பரைப் போலவே கனவிலும் கொள்ளவில்லை. இங்கு இவ்வாராய்ச்சியில் கன்யா சுல்க்கம் இல்லையென்றால் வரும் வினாக்கள் பல.

1. தயரதன் பரதனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்பி விட்டு இராமனுக்கு முடிபுனை விழா நடத்தத் துணிந்தது ஏன்?
2. கன்யா சுல்க்கம் இல்லையென்றால் தயரதன் தன் அவையைக் கூட்டி மந்திரம் இருப்பானேன்; பின்னர் இராமனை முடியை ஏற்குமாறு கெஞ்சு வானேன்,

3. அரசர்களைக் கூட்டி அவர் தம் இசைவு பெறுவானேன்?

4. கன்யா சுல்க்கம் இல்லையென்றால் கைகேயி சூழ்ச்சி செய்ய அடிப்படையாக இருந்தது என்ன?

இனி, கன்யாசுல்க்கத்தைப் பற்றிக் கம்பரே பேசியுள்ளார் எனக்கொண்டால் எழுப்பப் பெறும் வினாக்கள் இவை.

1. சம்பரப் போர் வரத்தால் கைகேயி நாடு பெறுவானேன் ?

2. பரதன் நாடாள மறுப்பானேன் ?

3. கன்யா சுல்க்கத்தை இராமன் காட்டில் பரதனிடம் கூறியதை முன்னமே கூறி, அவலத்தைத் தவிர்க்காததேன் ?

4. வரத்தால் நாடு பெற்ற கைகேயி இராமனைக் காட்டிற்கு அனுப்பியதேன் ?

5. பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு இராமன் நாடு பெறுவது எங்ஙனம் ?

இவ்வளவு வினாக்களும் வான்மீகத்தில் கன்யாசுல்க்கம் பேசப் பெற்றமையாலும், அதனை முறைப்படி அந்நூலில் பயன் படுத்தாததாலும் எழுப்பப் பெறுவனவாகும். கன்னியா சுல்க்கம் பேசப் பெறாத கம்பராமாயணத்தில் மேற்குறித்த கேள்விகட்குக் கம்பர் கன்யா சுல்க்கம் இன்றியே காரணங்-களைக் காட்டி இராம காதையை நடத்திச் செல்வதைப் புலப் படுத்துவதே இச்சிறு நூலில்யான் மேற்கொண்ட முயற்சி.

கம்பர் தாம் கூறுகின்ற கூற்றிற்கும் அங்குள்ள உறுப்பினர்கள் கூறுகின்ற கூற்றுகட்கும் இராம காதையில் நிகழ்கின்ற அத்தனை நிகழ்ச்சிகட்கும் இன்னின்ன காரணங்கள் என்றும் மேற்கோள்கள் வழி காரணங் காட்டி மெய்ப்பிக்கின்றேன்.

இந்த நூலைப்படிக்கும் அன்பர்கள் நூல் முழுதும் படித்து முடித்துப்பின் தம் கருத்துக்களை வழங்க வேண்டும் என்று வேண்டுகின்றேன். மறுக்க வேண்டும் என்று கருதி மறுப் பாரையும் காரணங் காட்டி, மறுக்க வேண்டுகின்றேன். அது தவறு, இது தவறு என்று வாய் போன போக்கிற்குப் பேசு வதும், உதட்டைப் பிதுக்குவதும் பெருமைக் குரிய செயல்கள் அல்ல.

யான் இதுகாறும் எழுதிய ஆராய்ச்சி நூல்கள் பத்து. ஒரு நூல் நாடக வடிவில் அமைந்தது அதன் கண்ணும் ஆராய்ச்சியுண்டு. பண்பாடு கணிக்கும் முறையில் ஐந்து நூல் களும், திறனுய்வு முறையில் இரண்டு நூல்களும், ஆராய்ச்சி முறையில் இ ர ண் டு நூல்களும் எழுதியுள்ளேன். இவை அனைத்தும் தமிழ் மக்கட்கு ''நாய் பெற்ற தெங்கம் பழம்'' போலாயிற்றே அன்றிக் கடுவன் பெற்ற கதலியாகவில்லை. இது நாளடைவில் தமிழ்சாதற்குத் தோன்றும் அறிகுறியாக உணர்ந்து, நொந்து குறிப்பிடுகின்றேன்.

இந்த நூல் ஓராண்டிற்கு மு ன் ன மே யே வெளி வந்திருக்கும். அது என் மகள் செல்வி வள்ளி, எம். எஸ்ஸி யால் தடையுற்றது. நான் முன்னர் எழுதிய நூலில் கூனிக் குரிய இடம் கொடுக்கப் பெருமல் கைகேயியின் பண்பே எழுதப் பெற்றிருப்பது கண்டு, கூனியே எல்லா வற்றிற்கும் காரணமாக இருப்ப, எல்லாம் கைகேயியின் பொறுப்பிலேயே நூலியற்றி -யது குறை என்று சுட்டியதாலும், பலதிறப்பட்ட வினுக்களை எழுப்பியதாலும் யான் அவற்றிற்கு விடைகூறி நூல் முடிக்கக் காலம் கடந்து விட்டது. இந்த நூலில் சில சிறப்புகட்குக் காரணமாக இருந்த என் மகளை என் மகள் தானே எ ன் று குறிப்பிடாது போனுல் அறிவுத்துறையில் அது குறையாகும் என்று கருதிக் குறிப்பிட்டேன். இந்த நூல் எழுதத் துணை புரிந்த சீத்தாஇலட்சுமி இராமசாமிக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர் புலவர் *T*. *கமலா*, எம்.ஏ., பி.ஓ.எல். என் மனைவி என்பதால் குறிப்பிடாதிருக்க முடியவில்லை.

என்னுடன் பணியாற்றும் துணைப்பேராசிரியர்கள் திரு வாளர்கள் கு. மாதவன். பி.ஏ., (ஆனர்ஸ்), புலவர் ம. இலக்குமி நாராயணன். எம்.ஏ., பி.டி, ஆகிய இருவரும் கம்ப இராமாயணத்தை நுட்பமாக அறிந்ததோடு குறுக்குக் கேள்விகளைக் குறும்பாகக் கேட்பதிலும் வல்லவர்கள். அவர்கள் என்நூலில் யான் தனித்தனியே பல வினக்கட்கு விடை தந்திருப்பதை வரிசைப் படுத்தி ஒரு துப்பறியும் கதை போல அடுக்கித் தந்து நூலை வெளியிடும் பொறுப்புக்கள் அத்தனையும் மேற் கொண்டு என் தொல்லைகளைப் பகிர்ந்து கொண்டுள்ளார் கள். இவர்கட்கெல்லாம் நான் நன்றி செலுத்துவதை விட வாழ்த்தி என்னைப் போல் நூல் பல எழுத வேண்டு மென்றும் நீண்ட புகழ் பெற்று வாழ வேண்டு மென்றும் வாழ்த்து கின்றேன்.



# 1. கம்ப இராமாயணத்தில் கைகேயி பெற்ற பங்கு

இராம காதையில் இடம் பெற்ற கைகேயி என்பவள் கேகயனுக்கு மகளாய்ப் பிறந்து மகப்பேறில்லாத தயரதனுக்கு இரண்டாம் மனைவியாய் அமைந்தவள். சம்பரன் என்ற அசுரனைக் கொல்லப் போர் மேற்கொண்டபோது தயரதனுக்குத் துணை நின்று அவன் வெற்றிக்குக் காரணமாகி அதுகாலை அவன் தந்த இரு வரங்களைப் பின் பெற்றுக் கொள்வதாகக் கூறி அவனோடு நெடுங்காலம் வாழ்ந்தவள். வாழ்ந்த அத்துணைக் காலமும் அவனுடன் ஒருயிர் வாழ்க்கையளாய்த் திகழ்ந்தவள். நெடுங்காலம் மகப்பேறில்லாத தயரதன் வேள்வி இயற்றி அதுவழி வந்த சுதைநிகர் பிண்டத்தை மனைவியர் மூவர்க்கும் பகிர்ந்து கொடுப்பக் கோசலைக்கு இராமனும், கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலக்குவனும் சத்துருக்கனனும் என்ற நால்வர் மக்களாய்ப் பிறக்கின்றனர்.

கைகேயி தான் ஈன்ற பரதனைக் காட்டிலும் முதன் முதல் கோசலைக்கு மகனாய்ப் பிறந்த இராமன்பால் தயரதன் பேரன்பு காட்டியதால் தானும் அவனையொப்ப அன்பு காட்டிப் பிறர் மகன் என்றில்லாது இராமனைத் தன்மகன் என்றே பாராட்டி வளர்த்தவள்.

மக்கள் நால்வரும் முறைப்பட வளர்ந்து வரு நாளில் கோசிகன் என்ற முனிவன் தோன்றி இராமனைத் தன் வேள்வி காக்க அழைத்துச் செல்கின்றான். இலக்குவனும் உடன் செல்கின்றான். இராமன் ஆண்டு எதிர்ப்பட்ட தாடகை என்ற அரக்கியை முனிவன் ஏவலால் கொன்று பின் அவன் தன்

வேள்வி காப்புழி ஆண்டு வந்த அரக்கர் பலரை அழித்து, அன்னுன் மகிழ்ந்து தந்த தெய்வப் படைக்கலன்கள் பலவற்றைப் பெற்றுக் கொள்கின்ருன். பின்னர் முனிவன் அழைக்க மிதிலே சென்று சனகன் வைத்திருந்த வில்லினே நாண்பூட்டி இறுத்து அதன் வழிச் சீதையை மணக்கின்ருன். இ ர ா ம ன் திருமணத்தின் போதே அவன் தம்பியர் மூவரும் ஜனகன் தம்பி மகளிரை மணம் பெற்று அயோத்தி திரும்புகின்றனர். அப்போது வழியில் குறுக்கிட்ட பரசுராமன் வலியினே ஒடுக்கி, அவன் வரங்களேப் பெற்றுக் கொண்டு அயோத்தி புகுகின்ருன் இராமன். திருமணம் முடிந்த பின்னர் முனிவன் தவமியற்றச் சென்று விடுகின்ருன்.

மணம் புணர்ந்த மக்கள் இன்பமாக அயோத்தியில் வாழ்ந்துவரும் நாளில், தயரதன் பரதனே அழைத்து அவன் பாட்டன் கேகயன் அவனேக் காண விரும்புவதாகவும் அவனே அழைத்துச் செல்ல பரதனின் மாமன் உதாசித்து வந்திருப்ப தாகவும் கூறிக் கேகய நாட்டிற்குப் ப ர த னே அனுப்பி விடுகின்ருன். ப ர த னு ட ன் சத்துருக்கனனும் சென்று விடுகின்ருன். தயரதன் அதுகாலே இராமனுக்கு முடிபுனேயக் கருதி அமைச்சர்களுடைய உடன்பாட்டினேப் பெற்று அதற்கு இராமனேயும் உடன்பட வைத்து முடி சூட்டுதற்குரிய சடங்கு களேச் செய்யப் பணிக்கின்ருன். மேலும் அடுத்திருந்த அரசர் பலரை அழைத்து, இராமனுக்குத் தான் முடிபுனேய இருக்கும் செய்தி கூறி அவர் தம் உடன்பாட்டினேயும் பெற்று மேற் கொண்டு ஆவன இயற்றுவதில் முனேகின்ருன். இச்செய்தியைக் கோசலே சுமித்திரை இராமன் இலக்குவன் முதலியோர் அறிவார்.

கைகேயிக்குத் தோழியாய் அமைந்த மந்தரை என்னும் கூனிக்கு இராமன் முடிபுனேயும் செய்தி தெரிய வந்தது. அப்பொழுது அவள் இராமன் சிறுவஞக இருந்த காலத்து

அவன் தன் கூனைக் குறியாக்கி உண்டை வில் எய்து ஊறு விளைத்த பகைமையை மனத்துட் கொண்டு இராமன் முடி புனையாவகைத் தடை செய்து அவனைக் காட்டிற்கு அனுப்பவும், அம்முடியினைப் பரதன் பெற்று பதினான்கு ஆண்டுகள் அரசேற்று வாழவும் எண்ணமிட்டுக் கைகேயியை இரவிடைச் சென்று துயிலெழுப்புகின்றாள். துயில் ஒழிந்த கைகேயியிடம் அவள் வாழ்வு இழந்ததாகவும், அவளுக்குக் கேடு புகுந்ததாகவும், வீரர் நகைக்க ஆண்மை கேடுறத் தாடகை என்ற பெண்ணை வதைத்த இராமன் முடிபுனையப் போவதாகவும் கூறி அதனால் அவளுக்கு வரும் பல இழப்புக்களையும் சுட்டி முடிக்கின்றாள். இராமன் முடிபுனைகின்றான் என்ற செய்தியைச் செவி மடுத்த கைகேயி அம்மகிழ்ச்சிப் பெருக்கில் பொன்மாலை ஒன்றை அவளுக்குப் பரிசாகக் கொடுக்கின்றாள். கூனி அம்மாலையைத் தரையில் வீசியெறிந்து இராமன் முடி சூடுவதால் கைகேயிக்கு வரும் இழப்புக்கள் பலவற்றை அடுக்கடுக்காகக் கூறுகின்றாள். அது கேட்ட பின்னும் சினங்கொண்ட கைகேயி முறைமை தவிர்ந்து பேசுகின்ற கூனியைக் கடிந்துரைக்கின்றாள். ஆனால் மந்தரை அவளடியில் வீழ்ந்து மீண்டும் தொடர்ந்து பல பேசுகின்றாள்.

இராமன் முடிபுனைவதால் கோசலை வாழ்ந்தாள் என்றும், இன்று கைகேயி பெற்றிருக்கின்ற அரசியின் இடத்தைச் சீதை பெறுவாள் என்றும், அரச பட்டம் இழப்பதால் வேண்டியார்க்கு வேண்டுவ நல்கும் உரிமையைக் கைகேயி இழப்பாள் என்றும், அவள் ஈன்ற மகன் பரதன் அரச இன்பம் இழந்து அவந்தனாய் நிற்பான் என்றும் எடுத்துரைக்கின்றாள். தயரதன் தன் அரசினைத் துறப்ப அவ்வரசினைப் பரதன் பெறாது இராமன் பெறுவதால் கேகயனோடு பகை கொண்டு தயரதனுக்காக வாளாவிருந்த சனகன் இராமன் பட்டம் பெறுவதால் அப்பகை தணித்துக் கொள்ள வாய்ப்பாகித் தந்தைக்குக் கேடிழைக்கும் ஒருத்தியாகவும், பரதன் அரசனாக வருவதற்கிருந்த

வாய்ப்பினைப் பெருதவாறு தடுத்தவளாகவும் ஆவாள் என்றும் கூறுகின்ருள். பின் அவள் கூற்றில் கைகேயியின் மனம் துளக்கமுற்று அவள் தூய சிந்தை முன்னிருந்த நிலையினின்றும் திரிந்து மாற்றம் பெறுகின்றது. அம்மாற்றத்தால் பரதனுக்கு நாடுபெறும் வழியைக் கூனியிடம் கேட்கின்ருள். அப்பொழுது கூனி சம்பரப் போர்க் காலத்தில் தயரதன் கைகேயிக்களித்த வரங்கள் இரண்டில் ஒன்ருல் பரதன் நாடு பெறவும் மற்ருென்ருல் இராமன் பதினுன்கு ஆண்டுகள் காட்டில் திரிந்து வரவும் வரம் பெற வழி சொல்கின்ருள்.

தயரதன் நள்ளிரவில் கைகேயியின் இருக்கை புகுகின்ருன். அப்பொழுது அவள் மங்கலக்கோலம் துறந்து அணி மணி சிதறிப் பொலிவின்றித் தரையில் கிடக்கின்ருள். வந்த தயரதன் அவள் இங்ஙனம் மம்மர் எய்திக் கிடக்கக் காரணம் கேட்ட போது அவள் சம்பரனை வென்ற காலத்து அவன் தனக்குக் கொடுப்பதாக உடன்பட்ட இரண்டு வரங்களை இப்போது தர வேண்டுமென்று கேட்கின்ருள்.

கைகேயியின் கருத்தறியாத தயரதன் வரந்தர உடன் பட்டபோது வரன் ஒன்ருல் பரதன் நாடாளவும் மற்ருென்ருல் இராமன் பதினுன்கு ஆண்டுகள் காடாளவும் வேண்டுமென்று கேட்டு முடிக்கின்ருள். அது கேட்டுப் பொருத தயரதன் பெரிதும் உளைந்து அவ்வரங்களைத் தவிர்ந்து வேறு வரங்களாக மாற்றிக் கொள்ளுமாறு வேண்டுகின்ருன். கைகேயி கொண்ட கொள்கையில் ஊற்றமாக இருப்பக் கண்டு அவள் மகன் பரதனுக்கு நாட்டாட்சி கொடுப்பதாக உடன்பட்டு இராமன் காட்டிற்குச் செல்லுமாறு வேண்டிய வரத்தினைத் தவிருமாறு இரந்து வேண்டுகின்ருன். அதற்கு அவள் அவன் கொடுத்த இரண்டு வரங்களையும் பெற்ருல் வாழ்வதாகவும் அன்றேல் அப்பொழுதே அவன் பால் வசை நிற்க மாய்வதாகவும் கூறுகின்ருள். செய்வகை அறியாத தயரதன் தன் உயிரிற்

சிறந்த இராமன் பிரிவதால் தனக்கு இறப்பு நிகழும் என்பதை அறிந்தும் வாய்மை காக்க வரம் தந்து கைகேயியைத் தாரம் அல்லள் என்றும் பரதன் தன் உரிமைக்கு ஆகான் என்றும் வசிட்டனைக் கரியாக்கிக் கூறிவிட்டுச் சாகக் கிடக்கின்றான். கைகேயி இராமனை அழைத்துத் தான் தயரதனிடம் பெற்ற வரத்தினைக் குறிப்பிடாது அவன் இட்ட கட்டளையாக இராமனைக் காட்டிற்கு அனுப்புகின்றாள்.

காட்டிற்குச் சென்ற அவன் பதினான்கு ஆண்டுகள் தவம் செய்ய வேண்டுமென்றும், புண்ணியத் துறைகள் ஆட வேண்டும் என்றும், பின்னர் மீண்டு வரவேண்டுமென்றும் அரசன் கூறியதாகக் கூறுகின்றாள். இராமனும் அக் கட்டளையைத் தலை மேற்கொண்டு செல்லுகின்றான். இராமன் நாட்டை விட்டுப் போனதால் இறந்த தயரதனுக்கு இறுதிக் கடன் செய்வதற்குப் பாட்டன் கேகயன் நாட்டிற்குச் சென்றிருந்த பரதனை வசிட்ட முனிவன் முதலியோர் ஓலை போக்கி வரவழைக்கின்றனர். வந்தவனைக் கைகேயி எதிர்ப்பட்டு தந்தை இறந்த செய்தியைக் கூறுகின்றாள்.

அவள் கூறிய முறையில் பிழை கண்ட பரதன் அவளைப் பலவாறு கடிந்து விட்டு இராமனைக் காணச் சென்ற போது, அவனும் இலக்குவனும் சீதையும் காட்டிற்குப் போய் விட்டனர் என்று கூறுகின்றாள் கைகேயி. இராமன் காட்டிற்குச் செல்லுமளவிற்கு அவன் செய்த குற்றம் என்ன என்று கேட்டபோது அவள் இன்னன்ன குற்றத்திற்கு அன்று என்று சில குற்றங்களைக் கூறித் தானே வரம் கேட்டுப் பெற்று நாட்டாட்சியைப் பரதனுக்கு அளித்ததாகவும் இராமனைக் காட்டாட்சிக்குப் போக்கியதாகவும் கூறுகின்றாள். அது கேட்டுத் துன்புற்ற பரதன் கோசலையைக் கண்டு துன்பம் பகிர்ந்து கொண்டு இராமனைப் பார்க்கக் காட்டிற்குச் செல்லுகின்றான். அவனோடு அனைவரும் செல்லுகின்றனர். கைகேயியும் உடன் செல்லுகின்றாள்.

பின்னர்க் கங்கைக் கரையில் குகன் என்னும் வேடுவர் தலைவனைக் கண்டு அவன் இராமனால் உறவு கொள்ளப் பெற்றவன் என்பதனை அறிந்து அவனுக்குத் தன் தாயரை அறிமுகம் செய்கின்றான். அப்பொழுது பரதன் குகன் முன்னிலையில் கைகேயியை இழிவாகப் பேசுகின்றான். அதன் பின்னை இராமனைக் காண்கின்றான். அப்போதும் கைகேயி உடன் இருக்கின்றாள். நாட்டாட்சிப் பொறுப்பு யாருக்கு உரியது என்ற பேச்சு நிகழ்கின்றது. இராமன் தான் ஏன்ற வண்ணம் பதினான்கு ஆண்டுகள் காட்டில் இருந்து வந்தபின் அன்றி யார் வேண்டு கோட்கும் இணங்கி நாட்டு உரிமையைப் பெறமாட்டாத தன் நிலைமையைக் குறிப்பிடுகின்றான். பின்னர்ப் பரதன் இராமனுடைய பாதுகையைப் பெற்று அயோத்தியின் புறத்தேயுள்ள நந்தியம்பதியில் தங்கித் தவம் இருக்கின்றான். அதுகாலைக் கைகேயி மற்ற தாயரோடும் சேர்ந்து பரதன் தவத்திற்குத் துணையாக நிற்கின்றாள்.

காட்டிற்குச் சென்ற இராமன் இராவணனை வதைத்துச் சீதையை மீட்டு அவளைத் தீயிலிட்டுச் சோதித்தபோது தெய்வ வடிவோடு தயரதன் வெளிப்பட்டு இராமனுடைய அருஞ் செயல்களைப் பாராட்டுகின்றான். அப்பொழுது அவன் கைகேயி செய்த கொடுமை தன் மனத்தில் நின்றதாகவும் அது இராமனைக் கண்டு தழுவிய அக்காலை அகன்றதாகவும் கூறுகின்றான். தயரதன் மகிழ்ச்சிப் பெருக்கில் இராமனை நோக்கித் தன்னிடம் இரண்டு வரங்கள் கேட்குமாறு பணித்த போது, அன்று மனைவி அல்லள் என்று தயரதன் துறந்த கைகேயி முன்பு போல மனைவியாக வேண்டுமென்றும் பரதன் மகனாக வேண்டுமென்றும் இராமன் இரண்டு வரங்களைக் கேட்டுப் பெறுகின்றான்.

பின்னர் இராமன் பதினான்கு ஆண்டுகள் முடிந்ததைப் பிரமன் உணர்த்த உணர்ந்து அயோத்தி வருகின்றான். நந்தியம்பதியிடைப் பரதனையும் தாயரையும் காணும்போது

இராமன் கைகேயிக்கு முதல் வணக்கம் செலுத்துகின்ருன். பின் அயோத்தி புகுந்து முடிபுனைந்து பரதனுக்கு ஆட்சிப் பொறுப்பைத் தந்து எல்லோரோடும் இன்பமாக வாழ்கின்ருன்.

இங்ஙனம் கைகேயி இராமாயணக் கதையின் தொடக்க முதல் இறுதி வரையில் தயரதன், பரதன், இராமன், மந்தரை, வசிட்டன் என்ற இவர்களோடு பேச்சுத் தொடர்பும் நிகழ்ச்சித் தொடர்பும் கொண்டவள் ஆவள்.

---

## 2. கைகேயி மனம் திறம்பக் கூனி காரணமா?

இதுகாறும் கண்ட இவ்வரலாற்றில் கைகேயி தயரத னுக்கும் இராமனுக்கும் முறையே உற்ற மனைவியாகவும் வாய்த்ததாயாகவும் அமைந்திருந்து பின்னர் உருத மனைவி யாகவும் கொடிய தாயாகவும் ஆகிவிட்டதாகப் பேசப்பெறு கின்றாள். இத்தகைய பெரியமாற்றம் நிகழ்வதற்குக் கூனி என்ற மந்தரை காரணம் ஆவள். மந்தரை இராமன்பால் பகை கொள்ள ஒரு காரணங் கொண்டிருக்கிறாள். இராமன் முடி புனைகின்றான் என்ற செய்தி கேட்டதும் அவன் முடிசூடக் கூடாமைக்குரிய காரணத்தோடு அதைத் தடை செய்யத் தனக்கிருந்த காரணத்தை எண்ணி அதனை நிறைவேற்று கின்றாள். என்றாலும் கைகேயின் தூய மனம் திரிதற்கு ஓர் அடிப்படைக் காரணம் கூற்றில் இருக்கவேண்டும். இவை அல்லாமல் இராம காதையின் பிறப்பிற்குரிய காரணத்தை கம்பர் ஐந்து காரணங்களாகப் பகுத்து இரண்டு பாடல்களில் விளக்கி உரைக்கின்றார்.

1. இமையோர் மாயை.
2. இமையோர்பெற்ற வரம்.
3. அந்தணர் இயற்றிய அறம்.
4. அரக்கர் செய்த பாவம்.
5. உலகவர் செய்த அறம்.

இதனை,

*‘ தீய மந்தரை இவ்வுரை செப்பலும் தேவி*
*தூய சிந்தையும் திரிந்தது சூழ்ச்சியின் இமையோர்*
*மாயையும் அவர்பெற்ற நல்வரம் உடைமையாலும்*
*ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத் தாலும்’’*
*“அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்*
*துறக்க நல்லருள் துறந்தனள் தூ மொழி மடமான்*
*இரக்கம் இன்மை அன்றே இன்று இவ்வுலகங்கள் இராமன்*
*பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றனவே’’*

(அயோத். மந். சூழ். 1572—73)

என்று கூறுவார் கம்பர். கூனி தன் பகைக்குக் கொண்ட காரணம் இராமன் முடிசூடுவதைத் தடுப்பதற்கும் கைகேயி அதனை இறுதி வரை உண்மையான காரணமென்று எத்தனை இழப்புகளுக்கிடையே செயற்படுதற்கும் காரணமாக அமைந்துவிட்டது.

கைகேயி தயரதனோடு சேணுலாவிய நாளெல்லாம் உயிர் ஒன்றுபோல்வன செய்து வாழ்ந்தவள் என்றும் தூய சிந்தை உடையவள் என்றும், தூயமொழிவழங்கும் பெற்றியள் என்றும் மாசறு கேகயன் மாது என்றும், தெய்வக் கற்பினள் என்றும் அழைக்கப்பெற்றவள். இமையோர் மாயையாலும், அவர் பெற்ற வரத்தாலும். அந்தணர் உலகவர் இயற்றிய அறங் களாலும், அரக்கர் பாவத்தாலும் மனம் திரியப்பெற்ற பின்னர் அவளைத் தவ்வை என்றும், தன்னேரில்லாத் தீயள் என்றும், நாகம் எனும் கொடியாள் என்றும், தீயவை யாவையினும் சிறந்த தீயாள் என்றும், தீயடங்கிய சிந்தையாள் என்றும், கொடியள், எரியன்னள், பெண்டிரில் கூற்ற மன்னள், மாகயத்தி, பாவம் முற்றிய பேதை, கள்ளக் கைகேயி, வன்மாயக் கைகேயி, கொள்ளழல் கூற்றம், பெண்டிரிற் கொடுமை பூண்டாள் என்று பழிமொழியும் இழி மொழியும் வன்மொழியும் கம்பர் வழங்கக் காரணமென்ன?

ஒரு நூலில் வருகின்ற உறுப்பினர்களைப் படைப்பவன் புலவன். அவன் நிகழ்ச்சிக்கேற்பப் பண்பாடுகளை அவர்பால் பெய்துவைத்துச் செல்வதும், பயில்வோர் அவ்வுறுப்பினர் செயலுக்கு ஏற்றவாறு விருப்புவெறுப்பினைக் காட்டிப்பேசுதலும் இயற்கை. புலவன் தன் இயல்பில் விதந்து ஒன்று கூறினால் அப்புலவனுக்கு அவ்வாறு கூறுதலுக்குரிய நெறிமுறை ஒன்று வேண்டும்.

கம்பர் குறிப்பிட்டாங்கு மேற்குறித்த ஐந்து காரணங்களால் கைகேயியின் தூய சிந்தை திரிந்தது என்ருல் அது உலகியல் காரணங்களால் ஆனதன்று. கைகேயியின் மனம் திரிதற்கு தெய்வீகம் மட்டும் கொண்டிருந்தால் கம்பர் அவளைப்பற்றிய இழிமொழிகள் வழங்கியிருக்க முடியாது. இம் மொழிகள் அனைத்தும் உலகியலிற் குற்றப்பட்டார்க்கு உரிய பழிமொழிகளே என்பது தெளிவு.

தெய்வீக நிகழ்ச்சி நடப்பதற்குக் கூனி கூற்று கைகேயியின் மனந்திரிய அடிப்படைக் காரணம் உடையது என்ருல் கூனிக்கும் அவ்வாறு ஒரு சூழ்ச்சி செய்ய அடிப்படை யான நல்லதொரு காரணம் வேண்டும். இராமன் சிறுவனுக இருந்த காலத்து கூனியின் கூனைக் குறியாக்கி உண்டைவில் தெறித்ததை ஓர் ஏதீடாக்கி அவள் இராமனுக்குப் பகையாகி அவன் முடிபுனைவதைத் தடுத்ததோடு அம்முடியினைப் பரதனுக்காக்கி இராமனைக்காட்டில் திரியவிட வேண்டுமென்று சூழ்ந்ததுதான் காரணம் என்று கம்பர் கூறுகின்ருர் என்ருல், அது நீடு நினைத்ததற்கு உரியது. இக்காரணத்தைக் கூறிக் கைகேயியின் மனத்தை மாற்றவும் முடியாது; கைகேயி ஏற்கவும் மாட்டாள். கைகேயி மனங்கொளற்குரிய வேறு பல காரணங்கள் வேண்டும்.

மந்தரை இராமன்பால் இளமை தொட்டு ஒரு சிறு நிகழ்ச்சிக்காகப் பெரும் பகை மனத்திற்கொண்டு வயிர்ப் புடையளாய் இருந்தாள் என்பதை நாம் உணர்ந்து கொள்ளுதற்குக் கம்பர் கூறிய இக்கூற்றினை நாம் ஏற்றுக் கொள்ள மறுத்தாலும், இராமன் தான் காடுபுகுவதற்கும் பலவாறு ஆண்டுத் துன்புறுதற்கும் காரணமாக இருந்தவள் கூனி என்பதைக் குறிப்பிடுவதால் அதுவும் ஓர் அடிப்படைக் காரணமென்று நாம் கொள்ள வேண்டியிருக்கின்றது.

அடுத்து, கைகேயியின் மனம் முற்றிலும் மாறுபட்டுக் கூனி சொல்லால் திரிந்தது என்றால் அம்மனமே தயரதன் வேண்டுகோட்கு இரங்கியேனும், அவன் உழக்கும் அல்லல் கண்டேனும் அவன் இறக்குமாறு சோர்ந்து வீழ்ந்து கிடந்த போதேனும் மீண்டும் திரிந்திருக்கவேண்டும். அது அங்ஙனம் திரியாததோடு ஒரு முறை திரிந்த அத்திரிபிலேயே கல்லாகி நிலைபெற்று நின்றுவிட்டது. கம்பர் கைகேயியைப் பற்றி வன் மொழி வழங்கிய இடங்களெல்லாம் அவள் சிந்தை திரிபிற்குப் பிறகு செய்த செயல்களைக் கொண்டேயாம்.

---

# 3. தயரதனின் சூழ்ச்சியா? தனித்த ஒரு காரணமா?

கூனி சூழ்ச்சி புரிதற்கும் கைகேயி மனம் திரிதற்கும் அடிப்படைக் காரணங்கள் பல இருப்பினும் தயரதன் இராமனுக்கு முடிபுனையத் துணிந்து மேற்கொண்ட செயல்களும் காரணங்களாகின்றன. தயரதன் அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்ட பின்னர் முதுமையை உன்னித் துறவு மேற்கொள்வான் வேண்டித் தன் முடியினை இராமனுக்கு வழங்கவிருப்பது ஒரு பெருவிழாவாகும். இது எத்தனையோ ஆயிரம் ஆயிரம் ஆண்டுகட்குப் பின்னர் நிகழ்வது. இந்த விழாவிற்குத் தயரதன் இராமனுடன் பிறந்த பரதனை அன்றியும் நிகழ்த்தத் துணிந்தது ஓர் ஐயப்பாட்டிற்கு உரியது.

தயரதன் பரதனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்பிய பின் முடி புனையத் துணிந்ததைக் கூனியும் தயரதன் செய்கின்ற சூழ்ச்சிக்கு ஒரு எடுத்துக்காட்டாகப் பேசுகின்றாள். தயரதன் தன் முடியினைத் துறப்பதற்கு உரிய பல காரணங்களை எடுத்து விரிவாகப் பேசி, அம் முடிபுனைதற்குரிய

இராமனைப்பற்றி அவையோரிடம் கூறி, அவர் உடன் பாடு பெற்றுக் கோசலை, சுமித்திரை, சீதை முதலியோர் அறிய வாய்ப்பளித்து, அதனைக் கைகேயி அறியாவகையிற் செயல்-களை நிகழ்தியதும் ஓர் ஐயப்பாட்டிற்குரியது.

கைகேயி வரமாகப் பரதனுக்கு நாடு கேட்டபோது தயரதன் சினங்கொண்டு மாறு பேசிக் கடிந்துரைத்துக் கையாறு கொள்ளாதிருந்து அவள் கேட்டவண்ணம் வரத்தைக் கொடுத்துவிட்டு அவ்வறக் கொடையால் வரும் தீங்குகளை அவளிடம் முறையாகக் கூருததும், சினந்து கையாறு கொண்டதும் ஓர் ஐயப்பாட்டிற்குரியது.

மக்கள் நால்வருள் மூத்தவன்பால் பேரன்பு பாராட்டிக் கைகேயி வரம்கேட்ட காரணத்திற்காகப் பரதனை மகன் அல்லன் என்று முற்றத் துறப்பதும் தயரதன்பால் ஓர் ஐயப்பாட்டைப் பிறப்பிக்கின்றது.

முறையாக மூத்தவன் ஏற்கும் அரசினை மூத்தவனுக்கு அளிப்பதில் ஐயப்பாடு கொள்ளவேண்டுவதன்று. தயரதன் இராமனிடம் முடி கொடுப்பதாகக் கூறி அவனைக் கொள் எனப் பணிக்கவேண்டியவன் இராமனிடம் முடியை ஏற்குமாறு இரந்து வரமாகப் பெற்று ஒப்படைக்கின்ருன். இத்தகைய செயல் நிகழ்வது எதற்கு என்னும் ஓர் ஐயப்பாடு பிறக்கின்றது.

அமைச்சரவையில் இராமனுக்கு முடி கொடுப்பது பற்றி முடிவெடுத்தபின் அதுபற்றி இராமனிடம் வேண்டியது ஒரு வேண்டாச் செயல். அதுபோலவே அரசர்களை அழைத்து அவர்களிடம் தயரதன் அவர்கள் இராமன் முடிபுனைவதை உடன்பட்டது பற்றி ஐயுற்ற அது இச்சகத்தால் ஆனதோ? வேறு காரணமோ என்று கேட்டு உறுதிப்படுத்துவதும் வேண்டாச் செயலாகி அவை நிகழ்ந்தது ஏன் என்ற பல ஐயப்பாடுகளைப் பிறப்பிக்கின்றது.

இராமன் கூனியை உண்டைவில்லால் அடித்த பகைமையை அடிப்படையாக்கி வரங்காரணமாக முற்றிலும் நாடுகடத்திவிடாமல் பதினுன்கு ஆண்டுகட்கே அத் தண்டனையை விதிப்பது எதுபற்றி? இளமையிலிருந்த பகை பல ஆண்டுகட்குப்பின் முகிழ்த்தது; பதினுன்கு ஆண்டுகள் கழிந்த பின்றை அது முற்றிலும் அழிந்து ஒழியுமாறு எங்ஙனம்? கூனி பதினுன்கு ஆண்டுகள் என்று சொல்லுவது ஏன் என்பதும் ஓர் ஐயப்பாட்டிற்குரியது.

தயரதனுக்குக் கம்பர் ஓர் உலகியற் காரணம் கண்டார். தயரதன் இளமையில் காட்டில் வேட்டையாடச் சென்ற போது யானை என்று கருதிக் கண்ணிழந்த முதியோன் மகன் ஒருவனைக் கொன்று பெற்ற சாபத்தால் தனக்கு இறுதி வந்ததாகக் கூறுகின்ருன். இந்தச்சாப நிகழ்ச்சியின் கூறுபாட்டின்படி தயரதனுடைய உயிர், அரக்கர்கள் வேள்விக்கு இடையூறு செய்யாவகைச் செருமுகத்துக் காக்க கோசிக முனிவனோடு இராமன் கால எல்லையின்றிச் சென்ற அப்போதே நீங்கியிருக்க வேண்டும். ஆண்டு அம்முனிவன் சாபத்தை நினையாதவன் அது கைகேயி வரங்கொண்டதால் இராமன் காடு புக நேர்ந்த இப்போது வாய்த்ததாகத் தயரதன் கூறிக் கையாறு கொள்வதும் ஓர் ஐயப்பாட்டிற் குரியது.

இத்த ஐயப்பாடுகளை நீக்கி முன்னே விடுத்த பல வினக்கட்கு விடைகண்டாலன்றிக் கைகேயியின் பண்பாட்டினை நாம் தெளிவாக அறுதியிட்டு உரைக்க முடியாது.

---

# 4. கம்பரும் கன்னியா சுல்க்கமும்

கம்பராமாயணத்தில் வால்மீகி ராமாயணத்தில் குறித்ததைப்போலக் கன்னியா சுல்க்கம் என்ற ஒன்றினைக் கொண்டால் கைகேயியின் பண்பாட்டினை நாம் உணர்ந்து கொள்வது எளிது. கன்னியாசுல்க்கம் என்ற ஒன்றினை வைத்துக் கொண்டு வான்மீகர் இராமாயணக் காதையை நடத்திச் செல்வதில் ஒரு சிக்கல் உண்டு.

தயரதன் தனக்கு மகப்பேறில்லை என்று வருந்தினன். அவன் வருந்திய காலத்து அவனுக்கு மனைவியர் மூவர். இந்த மூவருள் யாருக்கு மகப்பேறு வாய்த்திருந்தாலும் அவன் அரசுக்குரியவன். சுமித்திரையாகிய இளைய மனைவிக்குப் பிறந்து, கைகேயியும் கோசலையும் மகப்பேறில்லாது போயிருந்தால் இந்த அரசு யாருடையது என்பது ஒரு வினா. தயரதனுக்கு மனைவியர் மூவரில் யாருக்கு மகப்பேறு இருந்தாலும் அந்த மகன் அரசுக்குரியவனா அன்றி மூத்தவள் ஈன்ற மகனுக்குத்தான் அரசு உரியதா என்றால் மூத்தவளுக்கு மகப்பேறு இல்லாதபோது மூத்தவள் வயிற்றுதித்தவன் தான் அரசன் என்பது எவ்வாறு? யார் வயிற்றில் மகப்பேறு உண்டானாலும் அவன் அவ்வரசுக்கு உரியவன் என்பது தெளிவு.

இங்குத் தயரதன் கோசலையை மணந்தான், பிள்ளை இல்லை. அதனால் கைகேயியை மணந்தான்; அவளுக்கும் பிள்ளை இல்லை. பின்னர் சுமித்திரையை மணந்தான்; அவளுக்கும் பிள்ளை இல்லை. மகப்பேறு எவ்வழியும் இல்லாப்போது மகவேள்வி செய்கின்றான். மூத்தவள் வயிற்றுப் பிறக்கும் பிள்ளைக்குத்தான் அரசு என்றால் வேள்வி வழி கிடைத்த சுதை நிகர் பிண்டத்தை

மூத்தவளே உண்டு கருவுற்றிருக்கவேண்டும், ஆனல் தயரதன் அதனைப் பங்கிட்டு மூன்று மனைவியர்க்கும் தருகின்ருன். பங்கிட்டுத்தரும்போது அதனை ஒரு முறையோடு தரவேண்டும் என்று கோசலை, கைகேயி, சுமித்திரை என்று மூத்தவள், நடுவள், இளையவள் என்ற முறையில் தருகின்ருன். தயரதன் முனிவன் வழிப்படுத்தியதால் மூவர்க்கும் பகிர்ந்துகொடுத்தான் என்ருல், யார் வயிற்றுப் பிறந்தாலும் ஒரு மகப்பேறு வாய்க்க வேண்டுமென்ற நோக்கமே யன்றி, உறுதியாகக் கோசலை முதலில் மகப்பெற இருக்கின்ருள் என்று கருதியன்று. மூவரும் கருவுறுவார் என்ற துணிவும் இல்லை.

சுமித்திரை முதன்முதல் மகப்பெற்றிருந்தால் இந்த அரசு மூத்தவனுக்குரியதா? அன்றி மூத்தவள் வழிப் பின் பிறந்த ஒருவனுக்குரியதா? என்பதும் ஒரு கேள்வியாகும். எவ்வழி நோக்கினுலும் ஒரு சிக்கல் பிறக்கும். இங்கு வந்த சிக்கலும் அதுவே. மூன்று பேருக்கும் மூன்று நாளில் தனித்தனியாக இவ்வமுதினைக் கொடுக்கவில்லை. ஒரு நாளில் ஒரு நேரத்தில் கொடுக்கப்பெற்றது. ஆனல் பிறந்த பிள்ளைகள் ஒவ்வொரு நாள் கழித்துப் பிறந்துள்ளன. புனர்பூசத்தில் கோசலை இராமனையும், பூசத்தில் கைகேயி பரதனையும், ஆயில்யத்தில் சுமித்திரை இலக்குவனையும் சத்துருக்கனனையும் ஈன்றனள்.

இங்கு மூத்தவன் என்பது செய்த வேள்வியால் அன்று. வேள்விவழி வந்த அமுதத்தைக் கொடுத்ததால் அன்று. பிறந்த குழந்தைகளின் முன்பின்னுன நிகழ்ச்சியே. குழந்தைக்குக் காரணமான சுதைநிகர் பிண்டம் உதித்தது ஒரு நாளில்தானே அன்றி, மூன்றுநாள் வேள்வியில் மூன்று மனைவியர்க்கு மூன்றுதரம் சுதைநிகர் பிண்டம் கிடைக்கவில்லை. அதனுல் பிண்டத்தைப் பொறுத்தவரையிலும் கூட மூப்பு, இளமை என்ற பேச்சில்லை. பிரித்துக் கொடுத்த அமுதத்தை மூன்று மனைவியரும் ஒருசேர உண்ணுமல் கொடுத்த முறைப்படி

சற்று முன்பின்னுக ஏற்றுஉண்டனர். உண்டதும்கூட முன்னும் பின்னுமோ அன்றி ஒருசேரவோ இருந்திருக்கலாம். மூவரும் ஒருசேர உண்டிருந்தால் குழந்தைகளும் ஒருசேரப் பிறந்திருக்கும். அப்பொழுதும் அரசு யாருக்கு என்ற போராட்டம் வரும்.

தயரதனுக்கு வாய்த்த மனைவியருள் மூத்தவள், இளையவள் என்ற பேச்சு உண்டு. மகப்பேறு வாய்க்க வேண்டும் என்பதில் மூத்தவள் இளையவள் என்ற வேறுபாடில்லை. அமுதம் கொடுத்ததில்கூடப் பெரிய வேறுபாடில்லை. பிறந்த குழந்தை களிலும் ஒவ்வொரு நாள்தான் வேறுபாடு. இக்குழந்தைகளும் ஒருசேரப் பிறக்கவும் வாய்ப்புண்டு. பட்டத்தரசி என்ற தகுதி பெற்ற மூன்று மனைவியரீன்ற மக்களில் மூப்பிளமை என்ப தில்லை. இங்ஙனம் இருக்கவும் இராமன் ஒருவனே அரசுக்கு உரிமையானவன் என்று கொள்வதில் பொருத்தமில்லை.

இனித் தயரதனுக்கு முதல் மனைவியிருப்ப இரண்டாம் மனைவியாகக் கைகேயியை மணந்தகாலத்து அவன் கன்னியா சுல்க்கம் செய்துகொடுத்தான் என்ருல், மூன்ரும் முறை சுமித்திரையை மகப்பேறு காரணமாக மணந்தது பொருத்த மற்றதாகப் போகின்றது. மூன்ரும் முறை மணந்த சுமித்திரைக்கு மகப்பேறு உண்டாஞல் கன்னியாசுல்க்க வழியாகக் கொடுத்த அரசு யாரைச்சாரும் என்பது ஒரு விஞ? அவ்வரசு மூன்ரும் மனைவிக்குப் பிறந்த மகனுக்குக் கொடுக்கப் படாமல் இரண்டாம் மனைவியான கைகேயிக்குக் கொடுக்கப் பெற்றுக் கேகயன் வழிமுறையினருக்கு அது செல்லும். சூரியகுலத்து வழிவழி வந்த அரசினைத் தயரதன் கன்னியா சுல்க்கமாக யாருக்கும் கொடுக்க முடியாது. கொடுத்தால் அது நிறைவேறும் கொடையாகவும் ஆகாது. சுமித்திரையை மணந்தபோது அவளுக்கு ஏற்படும் மகப்பேற்றிற்கு அவ்வரசு உரித்து என்பதுதான் அத்திருமணத்தின் நோக்கமாகும். அவ்வாறு இல்லையென்ருல் சுமித்திரை காமக்கிழத்தியாக

வரைந்து கொள்ளப்பெற்றவள் என்று ஆகும். பரசுராமனுக்கு அஞ்சி அறுபதினாயிரம் மனைவியரை மணந்தான். அவர்களைப் போல் சுமித்திரையும் ஒருத்தி ஆவாள். அதனால் கன்யா சுல்க்கம் என்ற ஒரு காரணத்தை காட்டுவது பிழைபட்டதாகும். கம்பர் நூலில் அக்காரணம் இல்லை.

பரதன் இராமனை அயோத்திக்குத் திரும்பிவந்து முடிசூடி ஆட்சிப்பணியை மேற்கொள்ளுமாறு வேண்டுகின்றான். அவன் இராமனிடம்,

*''உந்தை தீமையும் உலகு உருதநோய்*
*தந்த தீவினைத் தாய் செய் தீமையும்*
*எந்தை நீங்க மீண்டும் அரசு செய்க.*

(அயோத். திருவடி சூட்டு 2566)

என்கிறான்.

இங்குப் பரதன், இராமனிடம் தன் தாயும் தந்தையும் செய்த தீமை நீங்கவேண்டுமானால் அது இராமன் மீண்டும் அயோத்தி புகுந்து முடிபுனைந்து வாழ்வதால் அமையும் என்கிறான். அதற்கு இராமன் விடை சொல்லும் போது,

*''தாய்வரம் கொளத் தந்தை ஏவலால்*
*மேய நம்குலத் தருமம் மேவினேன்*
*நீவரம் கொளத் தவிர்தல் நீர்மையோ*
*ஆய்வு அரும்புலத்து அறிவு மேவினாய்''*

(2571)

என்று அவனிடம் உலகில் தாய்தந்தையரின் சிறந்த பெரியோர் யாருமில்லை என்றும் அவர் ஆணைவழி நிற்றலிற் சிறந்த பேறு ஒன்றில்லை என்றும் கூறுகின்றான். தந்தையிடம் காடு புகுவதாகக் கூறிப் பின் அவ் அரசு கொண்டு வாழ்வது பொய்யுரைத்தல் ஆகாதா என்று கேட்டு,

*"வரனில் உந்தைசொல் மரபினுல் உடைத்*
*தரணி நின்னதென்று இயைந்த தன்மையால்*
*உரனில் நீபிறந்து உரிமை ஆதலால்*
*அரசு நின்னதே ஆள்க என்னவே"*

(2574)

என்று கூறுகின்ருன்.

இராமன் கன்னியா சுல்க்க நிகழ்ச்சியை எடுத்துக்கூறிப் பரதனிடம் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு செய்த வான்மீகச் செய்தியை இப்பாட்டில் ஏற்றி நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் உரை சொல்வர். இப்பாட்டிற்கு அவர்கள், '' கைகேயிக்குக் கொடுத்த வரத்திலே நிலேத்து நின்ற உன்தந்தை சொன்ன முறைமைப்படி, அவனுடையதான நிலம் உன்னுடையது என்று பொருந்திய தன்மையினுல் நீ அதனே ஆளுதற்கு ஏற்ற வலிமையோடு தோன்றி உரிமை பெற்றவனுதலாலும் இராச்சியம் உன்னுடையதே ஆகும்; அதனே நீ அரசாள்க என்று இராமன் பரதனே நோக்கிச் சொல்லவும்''

என்று சொற்கள் இடைப்பெய்து உரை கூறியதோடு, 'நீ பிறந்து உரிமையாதலால்' என்றது கைகேயியின் மணத்தின் போது அவள் தந்தையிடம் 'இவள் வயிற்றில் பிறக்கும் மகவுக்குப் பட்டம் சூட்டுகிறேன்' என்று வாக்குக் கொடுத்ததாக வான்மீகத்தில் அயோத்தியா காண்டம் சர்க்கம் - 107- இல் காணப்படும் செய்தியை நினேவு படுத்துவர்.

வான்மீகர் கன்னியா சுல்க்க நிகழ்ச்சியைத் தொடக்கத்தில் கூருமல் கதையை நடத்திச்சென்று இராமனுக்கும் பரதனுக்கும் ஏற்பட்ட சொற்போராட்டத்தில் ஏற்பட்ட சிக்கலேத் தவிர்ப்பதற்குக் கன்னியா சுல்க்கத்தைப் பயன்படுத்துகிருர். அவரைப் போலன்றிக் கம்பர் கன்னியா சுல்க்க நிகழ்ச்சிக்கு வேருகத் தெய்வங்களின் அறிவுரையைப் பயன்படுத்துகிருர். பரதனிடம் வெளிப்படையாகக் கூருமல் சொற்கள் பெய்து

கன்னியா சுல்க்க உண்மையைக் கூறுதற்கு அவர் பெறும் பயன் ஒன்று ஆண்டில்லை. இப்பாட்டிற்கு முதன்முதல் உரைகண்ட வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார் அவ்வுரையை மறுக்கின்ருர்.

இங்குத்தாய் பெற்றவரத்தில் உந்தை தயரதன் சொன்ன மரபு காரணமாகத் தரணி நின்னுடையது என்று ஆன தன்மையால் இவ்வரசு நின்னதே ஆகும், ஆள்க என்கின்ருன், இராமன் வரம் பெற்றதால் உரிய அரசு, அறிவுடன் நீ பிறந்து அதன்வழி உரிமை பெற்றதாலும் அரசு நின்னுடையது. நீ பிறந்து உரிமை ஆதலால் என்ற வரி பாட்டில் இடைக்கிடந்து பொருந்தாததாகிப் பொருள் கொள்ளத் தடை செய்கின்றது இவ்வரி பலபாடபேதங்களைக் கொண்டது. 'உரனில் நீ பிறந்து உரிமை ஆதலால்' என்பதற்கு அறிவோடு நீ பிறந்து என்றும் 'வலிமையோடு நீ பிறந்து' என்றும் உரைகொண்டு அது காரணமாக உனக்கு உரிமையுடையது அவ்வரசு என்பது, 'அறிவுடையோன் ஆறுஅரசுஞ்செல்லும்'என்ற கோட்பாட்டில் கூறியதாக உரை கொள்ளலாம். அப்படிக் கொண்டால் இராமன் பரதனை நோக்க அறிவோ வலிமையோ உடையான் அல்லன் என்ருகும்.

இவ்வாறு உரைகொள்வதால் காப்பியத் தலைமகன் தன்னேரில்லாதவனுக அமைதல் வேண்டுமென்ற கொள்கை யோடு முரணுதோ எனில் முரணுது. பரதனை இராமன் 'பங்கமில் குணத்து எம்பி' என்ருன்' கோசலை இராமனிடமே 'நின்னிலும் நல்லனுல் நிறை குணத்தவன்' என்ருள். இராமன் 'செம்மையின் ஆணி' என்ருன். குகன் 'ஆயிரம் இராமர் நின் கேள் ஆவரோ'? என்ருன். கோசலை 'எண்ணில் கோடி இராமர்கள் என்னினும் அண்ணல் நின் அருளுக்கு ஆவரோ'' என்றெல்லாம் கூறிய கூற்றுக்களைக் கொண்டு பரதன் இராமனைவிட மிகச்சிறந்த குணமுடையவனுகப்

பேசுவதைக் காணலாம். ஆனால் இராமன் செப்பருங்குணம் உடையவன். இராமன்தான் எதற்கும் எல்லை யுடையவன். அவனை எல்லையாக்கினாலன்றி பரதன் முதலாயினார்க்கு உறழ்ச்சியோ மேம்பாடோ மொழிதற்கு இயலாது. பரதன் பெருமையெல்லாம் இராமனை வைத்தே யன்றித் தனித்தன்று. ஆனால் இராமன் குணம் வீரம் முதலிய அனைத்துப் பண்புகளும் அவனை வைத்தே அமைவது. அதனால் காப்பியத்தலைமையில் முரணில்லை.

இப்பாட்டிற்குப் பொருள் விளக்கம் தந்த ச. சோ. பாரதியார் ‘ பிறந்துரிமையாதலால் ’ என்பதற்குக் கைகேயிக்குப் புத்திரனாகப் பிறந்தமையாலேயே உனக்கு இவ்வுலகமே உரித்து என்று கூறி, தயரதன் கைகேயியை மணந்த காலத்து இராச்சியத்தைச் சுல்க்கமாகச் சபதம் செய்தான் என்று வால்மீகி இராமாயணத்தில் தயரதன் சம்பரனோடு பொருத காலத்துக் கொடுத்த இரண்டு வரத்தினைக் கூனி நினைவு படுத்த, அவற்றின் துணையால் இராமன் காடாளவும் பரதன் நாடாளவும் செய்கின்றாள், என்பர். கன்னியா சுல்க்க முறைப்படி தயரதன் கைகேயிக்கு நாட்டுரிமையைக் கொடுத்திருந்தால் அதனை அவள் சம்பரப் போரில் தந்த வரத்தின் வழி கேட்டுப் பெற்றிருக்க வேண்டா; சுல்க்கத்தை நினைவு படுத்தித்தான் பெறவேண்டும். சுல்க்கத்தில் தந்த ஒரு நாட்டைசுல்க்கத்தை உரியவர் அதனைப்பிறர்க்கு ஈய உரிமையுண்டு. அந்த சுல்க்க முறைப்படி கைகேயி தனக்குரிமையான அந்நாட்டைப் பரதனுக்குத் தருவதில் மறுப்பொன்று பிறக்காது. தயரதனுக்கு வேள்வி வழி கைகேயி ஒருத்திக்கே மகப்பேறுபெற வழி அமைத்திருக்க வேண்டும். அன்றியும் இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டிய எந்த இன்றியமையாமையும் அவட்கு ஆண்டில்லை. கன்னியா சுல்க்கமாகப் பெற்ற நாட்டைப் பதினான்கு ஆண்டுகட்கு மட்டும் பரதன் ஆள வேண்டுமென்று வரம்

கேட்பதில் பொருளேது? மூத்தோனுக் குரிய நாட்டை வரத் தால் தருவதற்குத் தயரதனுக்கு உரிமையேது? சுல்க்க வரலாற்றை இப்பாட்டிற்கு ஏற்றினுல் இத்தகைய வினுக்கள் எழும். அதனுல் யாண்டும் சுல்க்கம் கூருக் கம்பர்நூலுக்கு சுல்க்கம் இன்றி உரை கூறுவது இயைபுடையது. வான்மீகம் 107-ஆம் சருக்கத்தில் கூறியிருப்பதால், "இராச்சியம் கைகேயியினுடையதே. தயரதன் அதற்கு உரியவன் அல்லன். பெண்ணரசு புரிவதற்குப் பதில் இத்தயரதன் அரசுபுரிந்தான், ஆகவே கைகேயியின் புத்திரனுன பரதனுக்குப் பிறப்புரிமை யாக உள்ளது அரசியல். தயரதன் தன்னுடையது அல்லாத இராச்சியத்தை இராமனுக்கு அக்கிரமமாகக் கொடுக்க தனக்கு உரியது இராச்சியம் என்று மந்தரையால் போதிக்கப்பட்டுத் தன் கணவனே அக்கிரமத்தினின்றும் தடுக்கக் கற்புடைய கைகேயி வர வியாசத்தைக் கொண்டனள்" என்று கூறுவர்.

வான்மீகம் அறிந்ததால் பாரதியார் வலிந்து இப்பாட்டிற்கு அவ்வுரை கொள்ள நேர்ந்தது. வான்மீகம் அறியாதார் உரை சொன்னுல், 'உரனில் நீ பிறந்து உரிமை யாதலால்' என்பதற்கு 'ஆளுகைக்கு வேண்டப்படும் அறிவோடோ அன்றி வலிமையோடோ நீ பிறந்ததால் அரசு உனக்கு உரிமையுடையது' என்றுதான் உரை கொள்ள முடியுமேயன்றி, வேறு உரை கொள்ள முடியாது. வான்மீகத்தை அருகு இருத்திக் கொண்டு படித்தால் தான் தன் இராமாயணம் விளங்கும் என்று ஒரு காவியம் செய்தார் கம்பர் என்ருல் அவர் கல்வியிற் பெரியராதல் எங்ஙனம்? அக்காப்பியம் முழுத்துவம் பெற்றதாதல் எங்ஙனம்? *வரனில்*-கைகேயிக்குக் கொடுத்த வரத்தில், *உந்தை சொல் மரபினுல்*-உன் தந்தை தயரதன் கூறிய சொல்லின் முறைப்படி, *உடைத்தரணி நின்னது* - அவனுக்கு உரிமையாக இருந்த நிலம் உன்னுடையது, என்று *இயைந்த தன்மையால்* - என்று தயரதன் ஒத்துக் கொண்ட முறைமையால், *உரனில் நீ*

*பிறந்து* - வலிமையோடு நீ பிறந்து, *உரிமையாதலால்* - உரிமையுடையவன் ஆ த ல ா ல், *அரசு நின்னதே* - அரசு உன்னுடையதே, *ஆள்க என்னவே* - நீ அதனை ஆள்க என்று பரதனை நோக்கி இராமன் கூறினுன் என்றவாறு; தாய் பெற்ற வரத்தால் என் உடன் பிறந்த பிறப்புரிமை உனக்கே உரித்து ஆதலால் யானில்லாப் போது நீயே ஆள்வதற்கு உரியோன் என்ருன். கம்பர் பாட்டிற்கு இங்கு இவ்வாறு கன்னியா சுல்க்கத்தைக் குறிக்காமல் உரை கொள்ள வேண்டும். வால்மீகி இராமாயணம் அறிந்ததால் தானே நாமெல்லாம் அதனை ம ன த் தி ற் கொ ா ண் டு அதற்கு ஏற்பச் சொற்களைப் பெய்துகொண்டு உ ரை ஊ ட் டு கி ன் ரு ம். வால்மீகி இராமாயணம் அறியாதவர் இப்பாட்டிற்கு உரை கொள்ளு மாறு எங்ஙனம்? வால்மீகி இராமாயணம் படிக்கவில்லை யென்ருல் கம்பராமாயணம் படித்துப் பொருள் கொள்ள முடியாது என்றல்லவா ஆகிவிடுகிறது. அப்படி வான்மீகம் அறியாதார்க்கு ஒரு நூல் உணர்த்த முடியாது போனுர் கம்பர் என்ற குற்றத்தை அவருக்கு ஏற்ற வேண்டா. *கன்னியா சுல்க்கம் பிழைபட்டது என்று கருதிய கம்பர் யாண்டும் அதுபற்றிக் கூறினுர் அல்லர். அவர் இப்பாட்டில் கருதியது உறுதியாக வேறு என்று கொண்டு, அது என்ன என்று காண்பது கம்பர் நூலைப் பயில்வோர் கடனு தம்.*

தயரதன் கன்னியா சுல்க்கத்தை மனத்தில் கொண்டு பரதனைப் புறம் போக்கி இராமனுக்கு முடிபுனைய முனைந்திருந் தால் அது அவன் பண்பாட்டில் ஒரு மாசு படுத்தும் செயலாகும். அவன் கேகயனிடத்துக் கன்னியா சுல்க்கக் காலத்து நாடு கொடுப்பதாகச் சூளிட்டு அதனை இதுகாறும் மறைக்கின்ருன் என்பதும் அவன் பண்பாட்டிற்கு ஏற்றதன்று. அவனுக்கு இராமன்பால், முதன் முதல் பிறந்த மகன் என்பதால் பற்று மிகுதியாக இருந்தாலும் மக்களுள் வேறுபாடு காட்டி வாழ்ந் தான் என்பதும் அவன் பண்பிற்கு இழுக்கு.

''காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழில் உடை ஒருவனை அலது ஓர்
ஆவியும் உடலமும் இலது என அருளின்
மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்''

(பால, திருஅவதாரப் 304)

இவ்வாறு இராமனிடம் பற்றுடையான் என்று கூறி யிருந்தாலும், மற்றவர்பால் வெறுப்புற்று இருந்தான் என்று கொள்ளற்கு இல்லை.

கைகேயி வரங்கேட்ட பின்றை இராமனுக்குக் கொடுக்க இருந்த அரசினைச் சூழ்ச்சி முறையில் பெற்றுவிட்டாள் என்ற காழ்ப்பால் நின்ற வெறுப்பு பரதன்பால் நீண்டுவிட்டது. அதுவன்றி அவன் பரதன்பால் முன்னமேயே வெறுப்புக் கொள்ளக் காரணமில்லை. கூனியோ, கைகேயியோ, தயரதனோ, வசிட்டனோ, அமைச்சர்களோ, அரசர்களோ, கோசலையோ, சுமித்திரையோ வெளிப்படக் கூருது மறைத்த கன்னியா சுல்க்கத்தை இராமன் தொடக்கத்திலேயே சொல்லிக் கைகேயிக்கோ தயரதனுக்கோ வரும் பழிச்சொல்லை தவிர்க்காமல் அவர்களை இத்தனைப் பழிக்குள்ளாக்கி நாட்டையும் அவலப்படுத்திக் காட்டிற் சென்று பரதனிடம் கூறுவதில் பயனென்ன? கேடன்றே? இவ்வாறு கூறுவதால் இராமனுடைய பண்பாடும் மாசுபடுகின்றது. இவற்றை யெல்லாம் வைத்து நோக்கினுல் ஆண்டு வெளிப்படையாகக் கூறமுடியாத-ஆனுல் எல்லோரும் உணர்ந்திருந்த காரணம் ஒன்றுண்டு.



# 5. தயரதன் கொடையிடைப்பட்ட மகிழ்ச்சி.

தயரதன் தன் மனைவியர், மக்கள், முனிவர், தானை முதலிய அனைவரோடும் இராமனுடைய திருமணத்திற்குச் சனகன் அழைக்க மிதிலை செல்கின்றான். தாயர் வணக்கம் நிகழ்ந்த பின்னர் தம்பியர் இராமனை வணங்கி நின்ற காட்சியை,

''கோல்வரும் செம்மையும் கொடைவரும் தன்மையும்
சால்வரும் செல்வம் என்று உணர்பெரும் தாததைதன்
மேல்வரும் தன்மையால் மிகவிளங்கி னர்கள்தாம்
நால்வரும் பொருவில் நான்மறை யெனும் நடையினர்''

(பால. எதிர்கொள் 1141)

என்பர் கம்பர்.

இப் பொருவற்ற நால்வரில் இராமனை நோக்கித் தயரதன் தான் கொண்டுவந்த தன் படைகளை நடத்திச் செல்லுமாறு பணிக்கின்றான். தம்பியரும் உடன் செல்கின்றனர். இதனை,

''காதலோ அறிகிலம் கரிகளைப் பொருவினுர்
தீதிலா உவகையும் சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சிஅக் குமரர் வந்து எய்தலும்
தாதையோடு ஒத்தது அத் தானையின் தன்மையே''

(1143)

என்றும்,

''தொழுது இரண்டு அருகும் அன்புடைய தம்பியர்தொடர்ந்து
அழிவில் சிந்தையின் உகந்து ஆடல்மா மிசை வரத்
தழுவு சங்குடன் நெடும் பணை தழங்கிட எழுந்து
எழுதரும் தகையதோர் தேரின்மேல் ஏகினுன்''

(1144)

என்றும் கூறுவர் கம்பர்.

இங்குக் கம்பர் தயரதனுடைய செயலைக் கூறுமுகத்தான் அவன் மன நிலையை ஒருவாறு புலப்படுத்துகின்றார். மிதிலையில் கோசலை, கைகேயி, வசிட்டன், அமைச்சர்கள், தானைத் தலைவர்கள் அனைவரும் தயரதன் கொடுத்த செல்வத்தைப் பெற்று இராமன் போந்ததைக் கண்டுகளித்த காட்சி இது.

அடுத்துத் திருமண மண்டபத்திற்கு இராமன்தம்பியரோடு செல்கின்றான். இங்கு இராமன் திருமணம் மேற்கொள்ளச் செல்வது போலவே தம்பியரும் சனகன் தம்பி குசத்துவன் மகளிரை மணக்க வேண்டிய தகுதியோடு செல்கின்றனர். இதனையும்,

*" அனையதோர் தேரினில் அருளின் நின்றெனப்*
*பனிவரு மலர்க்கண் நீர் பரதன் கோல்கொளக்*
*குனிசிலைத் தம்பி பின்கூட ஏனையன்*
*இனிய பொற் கவரிகால் இயக்க ஏவினான்''*

(பால-கடிமணப். 1317)

என்பர் கம்பர்,

தயரதன் மிதிலைக்குச் சென்றபோது தான் கொண்டு சென்ற சேனை, குடை, கொடி முதலிய அரசியற் செல்வங்களை இராமனுக்குத் தந்து அவற்றைக் கொண்டு அவன் தேரில் செல்லுமாறு பணித்தவன்; அவனோடு தேரின் இருமருங்கும் தம்பியர் குதிரையிற் செல்லக் கண்டவன்; பின் திருமண மண்டபத்திற்கு இராமனைத் தேரில் இவர்ந்து செல்ல வைத்து அத்தேரினைப் பரதன் இயக்க, இலக்குவன் வில்லேந்திக் காவல் புரிய சத்துருக்கனன் கவரி வீசச் செல்கின்ற காட்சியையும் கண்டு களித்தவன். இக்காட்சியைத் தயரதனைப் போன்றே கைகேயி, கூனி, வசிட்டன், முதல் அமைச்சர்கள், தானைத் தலைவர்கள், தாயர் முதலியோர் மட்டற்ற மகிழ்ச்சி யுடன் கண்டு களிக்கின்றனர்.

மணம் முடிந்த பிறகு அனைவரும் சில நாள் அங்குத் தங்குகின்றனர். இராமனைக் கையடையாக ஏற்று வந்த

விசுவாமித்திர முனிவன் இராமன் முதலியோர்க்கு ஆசி கூறி விட்டு வடதிசை சென்று விடுகின்றான். பின்னர்த் தயரதன் அயோத்திக்குப் புறப்பட்டு வருகின்றான். வரும் வழியில் இருபத்து ஓர் அரசு கால் முளைகளைச் சிதைத்த பரசுராமன் எதிர்ப்படுகின்றான். அவன் கொடுமைக்கு உடைந்து வாழ்ந்தவன் தயரதன். அவன் இராமன்பால் சினந்து வரக் கண்டு அவனிடமே அடைக்கலம் புகுகின்றான். அவன் அவ்வடைக் கலத்தைப் புறக்கணித்து இராமன் பால் செறுத்து எழக்கண்டு தயரதன் சோர்ந்து விடுகின்றான். பின்னர் இராமன் பரசுராமனுடைய வலியை அழித்து வெற்றி கண்டதைக் கண்ட தயரதன் மகனைத் தழுவி உச்சி முகர்ந்து

> ''பொய்மைஇல் சிறுமையில் புரிந்த ஆண்தொழில்
> மும்மையின் உலகினால் முடிக்கல் ஆவதோ
> மெய்ம்மை இச் சிறுவனே வினைசெய்தோர்களுக்கு
> இம்மையும் மறுமையும் ஈயும் ..........''
>
> (பால. பரசுராமப் 1392)

என்று கூறுகின்றான்.

இவ்வாறு இராமனுடைய பேராற்றலைக் கோசிகன் கூற முன்னங் கேட்டு உவந்தவன், அம்மகிழ்ச்சிப் பெருக்கில் தன்னோடு வந்த தானை முதலிய செல்வத்தை அளித்து மிதிலையில் உவகை பூத்தவன், ஈண்டுத் தன் முடிபுனைவதற்கு ஏற்ற ஆற்றலன் இராமன் என்பதைக் கண்டு அவனுக்கு முடி சூட்டத் துணிகின்றான். பின்னர் எல்லோரும் அயோத்தியில் சில காலம் மகிழ்ச்சியாக வாழ்கின்றனர்.

அதுகாலை, கேகயன் பரதனைக் காண விழைந்து உதாசித்து என்பவனைத் தயரதன் பால் போக்கிப் பரதனை அழைத்து வருமாறு வேண்ட, அவ்வேண்டு கோட்கு இணங்கிய தயரதன் பரதனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்புகின்றான். அவனை இணைபிரியா சத்துருக்கனனும் உடன் செல்கின்றான். இராமனைத் தயரதன் பிரியமாட்டாமையாலும், கேகயன் சனகனுக்குப் பகைவன் ஆதலாலும், சனகன் மகளை மணந்த இராமனை ஆண்டு அனுப்ப ஒருப்பட்டிலன். இராமனை இணை பிரியாத இலக்குவனும் அவனுடன் இருந்து விடுகின்றான். கோசலையின் பெற்றோரோ, சுமித்திரையின் பெற்றோரோ இராம இலக்குவர்களை, ஒருமித்தோ தனித்தோ அழைக்கக் காணோம்.

## 6. பரதனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்பியதேன்?

இராமனுடைய திருமணம் தயரதன் தானகத் தேடியது அன்று. தயரதனுக்குப் பின் பெண் கொடுத்த கேகயனுக்குப் பகைவன் சனகன் ஆதலால் அவனிடம் இயல்பாகப் பெண் கேட்டுப் பெறுதற்குத் தயரதன் உரியன் அல்லன். கோசிக முனிவன் தலையீட்டால் வீரம் காட்டும் முறையில் வில்லிறுத்துப் பெற்ற திருமணம் அது. சனகன் வில்லிற்கு நாண் பூட்டுவோன் எவனே அவன்பால் பகை, நட்பு, நொதுமல் என்ற வேறுபாடு கருதாமல் வீரத்திற்கு அறிகுறியாக வைத்த சூள் அது. இது இராமனல் வில்லிறுத்து நிறைவேற்றப் பெற்றமையால் தயரதன் தனக்குப் பெண் உதவிய கேகயனின் பகைவன் சனகன்மகள் மணம் என்று கருதாமல் தன் மகன் தேடிய வீர மணம் என்று கருதி மகிழ்ந்து சென்றன். அதனல் கைகேயியும் தன் தந்தைக்குப் பகைவன் மகள் என்று கருதாது தானும் சென்றள். கூனியும் சென்றள். சென்ற இடத்தில் இலக்குவனும் பரதனும் சத்ருக்கனனும் சனகன் தம்பி மகளிரை மணந்தனர்.

சனகன் இத்திருமணத்திற்குப் பகை காரணமாகக் கேகயனை அழைக்காது போனலும் தயரதனுக்குப் பெண் உதவியவன் என்ற காரணத்தினல் அவனை அழைத்திருக்கலாம். அவனைச் சனகன் அழைத்தானே அழைக்கவில்லையோ மணம் கொண்ட பரதனைக் கண்டு களிக்கும் வேட்கை காரணமாகத் தான் அவன் அழைத்தான். தயரதனும் அவ்வழைப்பிற்கு உடன்பட்டே அனுப்பினன். இங்குப் பரதனுக்குப் பாட்டன் அழைப்பு இல்லாதிருந்தால் தயரதன்

அவனைத் தவிர்த்து இராமனுக்கு முடிபுனைய முனைந்திருக்க மாட்டான். பாட்டன் அழைப்புத்தான் அவனை அனுப்பக் காரணமாயிற்று.

தயரதன் பரதனை நினையாது இராமனுக்கு முடி சூட்டு விழாவை உடனே முடிக்கக் கருதக் காரணம் ஒன்று உண்டு. இளமைக் காலத்து, வேட்டை வேட்கை மிகுந்து காட்டிற்குச் சென்றபோது முனிமகன் ஒருவனைக் கொன்று மகன் பிரிவால் உயிரிழக்குமாறு ஒரு சாபம் பெற்றவன், அவன் மக்கள் நால்வருள் இராமனைத் தன் உயிரெனக் கருதுபவன், கோசிக முனிவன் வேள்வி காக்க, ''கரிய செம்மல் ஒருவனைத் தந்து ஈதி'' என்று கேட்டது, அவனுக்குக் கூற்றுவன் தன் உயிரை இரந்தால் ஒப்ப இருந்தது. அதனால் கோசிகன் இரப்பதைக் கூட தயரதன் மறுக்க முற்பட்டது கண்டதும் வசிட்டன் இராமனுக்கு நன்மைகள் பல மலியும் காலம் அடுத்தது என்று கூறி அதனால் இராமன் பிரிவினைத் தாங்கிக் கொள்வது தான் நல்லது என்று கூறி அனுப்பி வைக்கின்றான்.

இங்குத் தயரதன் முனிவன்சாபத்தால் மகன் தன்னைப் பிரிவதால் இறப்புவரும் என்று அஞ்சினன். ஆயினும் அவ்வச்சம் கோசிக முனிவன் வேண்டுகோட்கிணங்கி அனுப்பாது போயின் ஒரு கால் அம்முனிவன் தன்னையும் தன் மகனையும் சாபத்தால் ஒறுப்பான் என்று அஞ்சி இருதலைக் கொள்ளியுள் எறும்பாகி வசிட்டன் கூற்றுக்கு உடன்பட்டு அனுப்புகின்றான். மகனுக்கு நன்மைகள் பலவரும் என்று வசிட்டன் கூறியதால் மகன் பிரிவை ஆண்டு அவன் பொருட்படுத்தாது மகனுக்கு வரும் பேறுகளை நினைந்து உயிர் தாங்கியிருந்தான். இராமன் வேள்வி காத்து, வில்லிறுத்து மணங்கொள்ள நின்றதைக் கேட்டு, மிதிலை சென்று அவனைக் கண்டபோது பிரிந்திருந்த தன் உயிர் அதுகாலை தன் மாட்டு அணுகியதாக உணர்ந்து உவகை கொள்கின்றான். இதனை,

*''காவியும் குவளையும் கடிகொள் காயாவும் ஒத்து*
*ஓவியம் சுவைகெடப் பொலிவது ஓர் உருவோடே*
*தேவரும் தொழுகழல் சிறுவன் முன்பிரிவதோர்*
*ஆவிவந் தென்ன வந்து அரசன் மாடு அணுகினன்''*

(பால, எதிர்கொள். 1135)

என்பர் கம்பர்.

இந்த உவகை காரணத்தினல்தான் முனிசாபத்தை என்றும் நினைந்த வண்ணம் இருப்பவன் தன் அரசியற் செல்வத்தை மிதிலையில் கொடுத்து மகிழ்ந்தான். மணம் முடித்து வரும் வழியில் பரசுராமன் எதிர்ப்பட்டதும், அவன் அரச வழிமுறைப் பகை கொண்டு தன் மகனை நோக்கிச் செறுத்துச் செல்வதைக் கண்டு அவன் தன் மகனைக் கொன்று விடுவான் என்று கருதித் துணுக்குறுகின்ருன். இராமனுக்கு முடி சூட்டி மகிழும் தன் எண்ணம் முற்றிலும் சிதைய முனிசாபம் முழுமை பெற்றது என்று கருதி உயிர் ஓய்ந்தே போகின்ருன்.

*''சலத்தோ டியைவிலன் என்மகன் அனையான் உயிர்தபுமேல்*
*உலத்தோடு எதிர்தோளாய் எனது உறவோடு உயிர்*
*உகுவேன்*
*நிலத்தோடு உயர்கதிர்வான் உறநெடியாய் உனது அடியேன்*
*குலத்தோடு அறமுடியேல் இது குறைகொண்டனென்*
*என்ருன்''*

(பால. பரசு - 1371)

இராமன் பரசுராமன் வலியொடுக்கிய பின்றை இராமன் உணர்த்த உணர்ந்து தயரதன் சென்ற தன் ஆவியை மீளப் பெறுகின்ருன். இவ்வாறு இறந்து இறந்து பிழைத்த அவன் அயோத்தி சென்றதும் தன் இறப்பை நீடு நினைக்கின்ருன்.

*''இறப்பெனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்*
*மறப்பெனும் அதனின்மேல் கேடு மற்றுண்டோ*
*துறப்பெனும் தெப்பமே துணைசெயாவிடின்*
*பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கல் ஆகுமோ''*

(அயோத்தி-மந்திரப் 1419)

முனிசாபம் ஒருபுடை இருப்பினும் தன் உயிர்க்கு உறுதி தேடி உய்தற்கு விரைந்து வழி தேடப் பார்க்கின்றுன் தயரதன். அது துறவால் அமையும் என்று துணிந்து தன் அரசியற் செல்வங்களை அன்று மிதிலையில் கொடுத்து இராமன் ஏற்க அதற்கு மக்கள் மூவர் துணை நிற்கக் கண்டான். அப்பெற்றியே ஈண்டு முறைமைப்படி தன் முடியினை இராமனுக்குத் தந்து மக்கள் அவனுக்குத் துணையாக நின்று ஆட்சி நடாத்த முடிவெடுக்கின்றுன். இச்சூழ்நிலையில்தான் பரதன் பாட்டன் அழைப்பால் அகல்கின்றுன். பரதன் அகற்சியும் தயரதன் இராமனுக்கு விரைந்து முடி சூட்டக் கருத ஒரு காரணமாயிற்று.

முனிவன் பிரிக்கப் அன்று இராமன் செல்ல இலக்குவனும் உடன் சென்றுன். தயரதன் அக்காலங்களில் பரதனுேடும் சத்துருக்கனனுேடும் இருக்க நேர்ந்தது. இது காலை, கேகயன் அழைப்பால் பரதன் செல்லச் சத்துருக்கனனும் உடன் போக நேர்ந்ததால் ஈண்டும் மக்கள் இருவரைப் பிரிந்து வாழநேர்ந்தது. இவ்வாறு ஒருகாலைக் கொருகால் மக்களைப் பிரிந்து உழக்கும் பீழை பிறப்பதால் தான் கருதியவண்ணம் முடியினைக் கொடுத்து, அதனைக் கண்டு மகிழ்ந்து முனிசாபம் எவ்வடிவில் வந்தாலும் ஏற்கத் துணிகின்றுன். சாப உண்மையைப் பெரிதாகக் கருதியதால் அதனைத் துறவு எனும் தெப்பம் கொண்டு கடந்து உய்யலாம் என்றும் உறுதி கொள்கின்றுன் தயரதன்.

இந்த மனச்சூழலில் தான் அரசவை கூட்டி இராமனுக்கு முடிபுனைவதைப்பற்றி அமைச்சர்களைக் கேட்கின்றுன். கேட்கும் தயரதனும் யாக்கை நிலையாமையை அடிப்படையாகக் கூறி, அவையோரிடம் தான் துறவு கொள்ளப் பூண்ட உறுதியினைக் கூறி, அதுகாலை தன் முடியினைத் தன்மகன் இராமனுக்குக் கொடுப்பதுபற்றிக் கருத்தறிய வினுவுகின்றுன்.

''ஆதலால் இராமனுக்கு அரசைநல்கிஇப்
பேதைமைத்து ஆய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவம் தொடங்கிய வனத்தை நண்ணுவேன்
யாதுநும் கருத்து என இனைய கூறினன்''

(அயோ. மந்திரப். 1429)

தயரதன் தன் செல்வத்தை மிதிலையில் முன்னமே கொடுக்க, இராமன் அதனை ஏற்க, மக்கள் அதற்கு உறுதுணை புரியக் கண்ட அவையோரிடம் தயரதன் முடிகொடுக்கும் செய்தியைக் கூறவேண்டியிருப்பவும் தான் அதுபற்றி இவர் துணையாக ஆய்ந்து அவர் முடிவை எதிர்பார்த்தது எதற்கு? இவனே அரசன்; இவன் தன் அரசுக்கு உரிய வழிமுறையினரைப் பெற்றவன்; அவ்வாறிருந்தும் முறைப்படி மூத்தவனுக்குத் தன் அரசினைத் தந்து, இளையவர் புடைசூழ ஆளப்போகின்றான் இராமன் என்று அவையில் அறிவித்து அதற்கு ஆவன செய்ய வேண்டியிருப்பவும் அவையோரிடம் அதுபற்றிக் கருத்து அவாவி நிற்கின்றான் என்றால் ஆண்டு நின்ற தடை ஒன்று உண்டென்னும் உண்மையினாலேயாம்.

---

# 7. மந்திரம் அகற்றிய அச்சம்

தயரதன் வெற்றிவேல் வேந்தர் பலரை ஓலைபோக்கித் தருவித்து அவர்களிடம் இராமன் முடிபுனையக் கொடுக்கும் செய்தியைக் கூறுகின்றான். அதுகேட்ட அரசபெருமக்கள் ஒருவரின் ஒருவர் தத்தமக்குற்ற அரசெனத் தழைக்கின்ற மனத்தராகி,

''மூவெழு முறமைஎம் குலங்கள் முற்றுறப்
பூவெழு மழுவினுல பொருது போக்கிய
சேவகன் சேவகம் செகுத்த சேவகற்கு
ஆவதிவ் வுலகம் ஈது அறன் ... ...''

(அயோ, மந்திரம். 1475)

என்றனர்.

இவ்வாறு அரசர்கள் பரசுராமன் வலிவாங்கி ஆண்மைத் தொழில் காட்டிய இராமன் முடிபுனேவது பல்லாற்ருலும் ஏற்றது என்கின்றனர். இவர்கள் இங்ஙனம் மகிழ்வதற்குக் காரணம் பரசுராமன் இருபத்தோர் அரச வழிமுறையினரைக் கொன்று குவித்தவன். அவனிடம் தயரதன் உய்யும் பொருட்டு ஆண்டுக் கொருமுறை ஒரு பெண்ணே மணந்து அறுபதினுயிரம் ஆண்டுகள் அஞ்சிக் கிடந்தவன். அவ்வச்சம் தவிர்த்த அப்பெரியோன் இராமன் இதுகாலே முடிபுனேவது தக்கது என்பது அவர் கோள். இங்கும் தயரதன்தான் ஐயுற்று அஞ்சிக் கிடந்த செய்திக்கு அவர்பாலும் தடைபிறக்காமை கண்டு, அவர்கள் கூறிய கூற்றினே உவகை காரணமாகக் கூறியதா? அன்றித் தன் கருத்து அது என்று வழிமொழிந்ததா? அன்றி இராமன் முடிபுனேவதற்குத் தக்கான் என்று கருதியதா? என்று மூன்று வகையாக்கி அவற்றுள் அது எதுபற்றிக் கூறியது என்று கேட்கிருன்.

''மகன்வயின் அன்பினுல் மயங்கி யான் இது
புகல நீர் புகன்றஇப் பொம்மல் வாசகம்
உகவையின் மொழிந்ததோ? உள்ளம் நோக்கியோ
தகவு என நினேந்ததோ? தன்மை என் என்ருன்''

(அயோ, மந்திரம். 1477)

அமைச்சரவையில் உடன்பாடு பெற்று, இராமனிடம் ஆணே வழி இசைவு பெற்றுப் பின் மன்னரிடம் செய்திகூற வேண்டியவன் அவர்களிடமும் இராமன் முடிபுனேவது பற்றி

ஆய்வதால் இராமன் முடிபுனைவதில் தடைவரும் என்று தயரதன் ஐயுற்றுக் கிடந்த கருத்து போதரும், தயரதன் இராமன்பால் அன்பு காரணமாக மயங்கி முடிகொடுக்க உடன்பட்டாலும் தான் கொடுக்கும் முடியினை ஏற்கும் இராமன் தக்கானா என்பதை ஆய்தல் அவர் கடனாகவும், அவர்களும் அமைச்சர்களைப் போல இசைவு தந்ததைக் கண்டு இவர்களும் கடைபோக ஆய்ந்துரைத்தாரல்லர் என்று கருது கின்றான். அதனால்தான் அரசரிடம் இங்ஙனம் எத்திறத்தால் கூறினீர்கள் என்று கேட்கின்றான். முன்பு அமைச்சர்களும் இப்பொழுது அரசர்களும் இராமன்பால் நின்ற நிறைகுறை களைப் பேசி, சீர்தூக்கித் தம் கருத்தினை அறிவிக்காமல், நிறையைப்பற்றி மட்டும் பேசி இராமன் முடிபுனைவது சாலச்சிறந்தது என்று கூறியதனைத் தயரதன் மனம் ஏற்கத் தயங்குகின்றது.

இராமன்பால் நின்ற குறையினைச் சுட்டி, அது இன்ன வகையில் நிறைவாகும் என்று காரணங்காட்டியோ அல்லது நிறைகுறை இரண்டையும் பேசி, அவன்பால் நின்ற குறை யினும் நிறை மிக்கிருப்பதைச் சுட்டிக்காட்டியோ, அதுவழி அவன் முடிபுனைதற்குத் தகுதியுடையவன் என்று கூறி யிருந்தால் தயரதன் மனத்திருந்த ஐயுறவிற்கு ஒரு தெளிவு பிறந்திருக்கும். தயரதன் அரசர்களை நோக்கிக் கேட்ட இக் கேள்வி அவர்கள் தகுதியைத் தாழ்த்துவதும் புண்படுத்துவது மாகும். ஆனால் அவர்கள் அவன் கேட்ட கேள்வியிலுள்ள குறையை உட்கொள்ளாமல், தாம் கூறியது இயற்கையானது என்பதனை,

''ஊருணி நிறையவும் உதவும் மாடுயர்
பார்கெழு பயன்மரம் பழுத்தற் றாகவும்
கார்மழை பொழியவும் கழனி பாய்நதி
வார்புனல் பெருகவும் மறுக்கின்றார் கள்யார்''

(அயோ மந்திரம் 1480)

என்று அவர்களும் மூத்தவன்; வீரன்; எல்லா அருங்குணங்களும் படைத்தவன்; முடிபுனைவதை ஏற்பதன்றி மறுப்பது எங்ஙனம் என்று எதிர்வினு வினவி அமைகின்றனர். அதுகாலைத் தயரதன் இதுகாறும் தன் மனத்திருந்த ஐயுறவு ஒருபுடை நிற்பினும் அதுவழி வருத்திய சுமையும், அது பிறப்பித்த கையாறும் இதுகாலைக் கழிந்தது என்று கருதிக் களிதூங்கு கின்ருன்.

> ***"மொழிந்தது கேட்டலும் மொய்த்து நெஞ்சினைப்***
> ***பொழிந்த பேருவகையான் பொங்கு காதலால்***
> ***கழிந்ததோர் இடரினுன் களிக்கும் சிந்தையான்***
> ***வழிந்தகண் நீரினுன் மன்னன் கூறுவான்"***
>
> (அயோ, மந்திர 1482)

இங்குத் தயரதன் இதுகாறும் தன் மகன் முடிசூடும் விழா விற்கு அரசவையில் தடைவரும் என்று எதிர்பார்த்தான், வசிட்டன் போன்ற முனிவர்கள் இருந்து ஆய்ந்தும் ஆண்டுத் தடைபிறக்கவில்லை, அடுத்து இராமன்பால் முடி ஏற்பதுபற்றிக் கேட்டால் அவன்வழி தடை பிறக்கும் என்றஞ்சி அவனை அதுபற்றிப் பேசவிடாமல், தான் ஒன்று அவன்பால் இரப்பான் போல் இரந்து அரசினை மறுக்கா வகையில் உடன்பாடு பெறுகின்ருன். அடுத்து அரசர்களில் சிலர்வழி அத்தடை பிறக்குமோ என்று அஞ்சினுன். ஆண்டும் அது பிறக்கவில்லை. இதுகாலை அவன் மகிழ்ச்சிக்கடலில் இடர் ஒழிந்தது என்று ஆய்ந்து முடிபுனை நாளைக் குறிப்பிடத் தலைப்படுகின்ருன். இச்சூழ்நிலையில் அவன் பரதன் சத்ருக்னன் போன்ருர் இன்மையை உணர வாய்ப்பில்லை. அவனுக்கு இப்பொழுது யாரும் வேண்டா.

இச்செய்தியினைக் கோசலைக்கு அறிவிக்கச் செய்கின்ருன். அம்மகிழ்ச்சிச் செய்தியினை அவள் சுமித்திரைக்குச் சொல் கின்ருள். இருவரும் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபடு

கின்றனர். பின் தயரதன் வசிட்டனை அழைத்து இராமனுக்கு உறுதிப் பொருள் பல கூறுமாறு வேண்டுகின்ருன். பின்னர் முடிபுனையும் இராமனுக்கு முடிபுனை சடங்குகள் பல செய்கின்றனர். அதுகாலை அரசன் ஆணையால் நகர் அழகுறுத்தப் படுகின்றது. இது கண்ட கூனி காரணமறிந்து கைகேயியிடம் இச்செய்தியைக் கூற விரைகின்ருள்.

இங்கு தயரதன் கோசலைக்குச் செய்தி சொன்னது போலக் கைகேயிக்கும் சொல்லியிருக்க வேண்டும். அவன் அங்ஙனம் சொல்லாது முடிபுனைவதற்குரிய பலவற்றை முடித்துவிட்டு இறுதியில் நள்ளிரவில் கைகேயிபால் வருகின்ருன். தயரதன் தான் இராமனுக்கு முடிபுனைய இருப்பதைக் கைகேயி தடுத்து விடுவாள் என்று அஞ்சி அவள் அறிவதற்கு முன்பே ஆவன இயற்றிவிடவேண்டும் என்று இத்தனைச் செயல்களையும் விரைந்து மேற்கொண்டான் என்பர் வான்மீகம் அறிந்தோர். எல்லாரும் கன்னியாசுல்க்கத்தை மறந்திருக்கும் காலத்தில் இராமனுக்கு முடிசூட்டிவிடத் தயரதன் கருதியதால்தான் கோசலை, இராமன், சுமித்திரை முதலியோர் அறிந்த செய்தி கைகேயி அறியாமல் தடைபடுத்தப்பெற்றது என்பர். ஆனல் கம்பராமாயணத்தில் அத்தகைய கரவு நிகழ்ச்சி எதுவும் தயரதனுக்கு அமையவில்லை.

அவனுக்கு நின்ற ஐயப்பாடும், அதுவழி வருகின்ற தடையும் அமைச்சரவையிலும் அரசர்களவையிலும் பிறக்காத போது தானே தன்மகன் என்று வளர்த்த கைகேயியிடம் பிறக்கும் எனக் கனவிலும் கருதினனல்லன். அவனுக்கு அரசர்கள்வழி இறுதியாக நின்ற இடர் கழியக் கண்டதும் மகிழ்ச்சிப் பெருக்கில் ஒரு கணமும் காலத்தாழ்ச்சி ஆக்காமல் விரைந்து முடி சூட்டிவிட வேண்டும் என்ற கருத்தால் ஆவன இயற்றுவதில் கைகேயிக்குக் கூறக் காலம் தாழ்ந்தது. தன்னேடு வளர்ந்த இராமன், தன்னேடு பிரியாது கைகேயி

வளர்த்த இராமன் முடிபுனையும் செய்தியைக் கோசலைக்குத் தூதுவன் மூலம் சொன்னது போல் சொல்லாமல் அச்செய்தியைத் தானே அவளிடம் கூறி அம்மகிழ்ச்சிப் பெருக்கினை அவளோடு பகிர்ந்து கொள்ளவே பிறர்வழிச்செய்தி போக்கினான் அல்லன். இராமன் தயரதனுக்கு உயிரில் சிறந்தவன். கைகேயியால் தன் மகன் என்றே வளர்க்கப்பெற்றவன். இராமன் முடிசூடும் செய்தியை மகிழ்தற்குரியார் இவரே. இச்செய்தி கைகேயி தயரதனையன்றி யார்வழியாலும் கேட்கப் பெறுது, அவன் மகிழ்ந்து கூற இவள் உவந்து கேட்க இருவரும் இயைந்த இன்பத்தில் திளைத்தற்கு உரியது.

---

# 8. திங்களில் தீத்தோன்றியது.

தயரதன் இராமனுக்கு முடிசூட்டுதற்குரிய அனைத்துச் செயல்களையும் முடித்துவிட்டு அரசர்கள் சூழ்ந்து வாழ்த்தெடுப்பக் கைகேயி கோயிலை நோக்கி வருகின்றான். வந்தவன் ஆங்கே கைகேயியைக் கொடுங்கோலங் கொண்டவளாய்க் காண்கின்றான். அவள் அணிமணி துறந்து திலகமும் அழித்து அமளியில் கிடவாது குழல் விரித்து நிலம்பரப்பித் தரையில் வீழ்ந்து கிடக்கின்றாள்.

அவள் கொண்டகோலத்தைக் கூறப்புகுந்த கம்பர்,

''கூனிபோனபின் குலமலர்க் குப்பை நின்று இழிந்தாள்
சோனை வார்குழல் கற்றையில் சொருகிய மாலை
வான மாமழை நுழைதரு மதி பிதிர்ப்பாள் போல்
தேன் அவாவுறு வண்டினம் அலமரச் சிதைத்தாள்'

''விளையும் தன்புகழ் அல்லியை வேர் அறுத்தென்னக்
கிளைகொள் மேகலை சிந்தினள் கிண்கிணியோடும்
வளை துறந்தனள் மதியினில் மறுத்துடைப்பாள் போல்
அளக வாள்நுதல் அரும் பெறல் திலகமும் அழித்தாள்',

''தாஇல் மாமணிக் கலன் மற்றும் தனித்தனி சிதறி
நாவி ஓதினிய நானிலம் தைவரப் பரப்பிக்
காவிஉண் கண் அஞ்சனம் கான்றிடக் கலுழாப்
பூ உதிர்ந்தது ஓர்கொம்பு எனப் புவிமிசைப்புரண்டாள்

''நவ்வி வீழ்ந்தென நாடக மயில் துயின்றென்னக்
கவ்வை கூர்தரச் சனகி ஆம் கடிகமழ் கமலத்து
அவ்வை நீங்கும் என்று அயோத்தி வந்து அடைந்த
அம்மடந்தை
தவ்வை ஆம் எனக் கிடந்தனள் கேகயன் தனையை'',

(அயோத், கைகேயி சூழ் 1580, 1, 2 3)

என்று கூறுகின்ருர்,

துணுக்குற்ற தயரதன் அவளைத் தூக்கியெடுத்து உற்றது வினவுகின்ருன். அதுகேட்ட அவள் கண்ணீர் உகுத்துத் தன் கண் அவனுக்கு அருளுண்டாமேல் 'பண்டைய இன்று பரிந்து அளித்தி' என்று பழைய வரங்களைத் தருமாறு வேண்ட மன்னனும், ''வள்ளல் இராமன் உன் மைந்தன் ஆணை'' என்று சொல்லி அவ்வாறே தருவதாகக் கூறுகின்ருன், அப்பொழுது அவள்,

''ஏய வரங்கள் இரண்டின் ஒன்றினுல் என்
சேய் அரசாள்வது சீதை கேள்வன் ஒன்ருல்
போய் வனமாள்வது எனப் புகன்று நின்ருள்''

(அயோ, கைகேயி சூழ் 1593)

என்கிருர் கம்பர்,

இது கேட்டதும் கழிந்தது ஓர் இடர் என்று களித்த தயரதனுக்கு எங்கு மகிழ்ச்சி பிறக்கவேண்டுமோ அங்கு அந்தப் பேரிடர் வடிவெடுத்து நிற்பது தெரிகின்றது. தான் இதுகாறும்

செய்தசெயல் அனைத்திற்கும் கொண்ட முடிபு எல்லாவற்றிற்கும் ஏதம் சூழ்வித்தாளே என்ற பேரிடர் ஒருபுடை, மறுபுடை இராமன் வனமாள வேண்டும் என்கின்றாளே, இஃது என்ன கொடுமை என்று நினைந்து கையறவு கொள்கின்றான் தயரதன். அப்பொழுது அவன் பெற்ற மெய்ப்பாடு, உழந்த துன்பம் சொல்லுந் தரத்ததன்று காரணம் கைகேயி கேட்ட வரத்தின் வண்ணம் இராமன் காட்டிற்குச் சென்றால் இலக்குவனும் உடன் செல்வான். முன் பரதனும் சத்துருக்னனும் பிரிந்துள்ளனர். இப்பொழுது இருவரும் பிரிகின்றனர் என்றால் மக்கள் நால்வரையும் ஒருசேரப்பிரிய நேர்ந்து முனிவன் சாபம் முற்றுப் பெறுவதை உணர்கின்றான். இந்த இறப்பு உயிர் ஒன்று போல்வன செய்து சேணுலாவிய நாளெலாம் வாழ்ந்தவள்வழிப் பிறந்தது. சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன் பாம்பகத்துக் கண்டன்ன அஞ்சித் துணுக்குற்று உயிர் கழியக் கிடக்கின்றான். சற்று உணர்வு வரப்பெற்று அவளைக் கொன்றுவிடுவதற்கு உள்ளம் தூண்டு கின்றது. ஆனால் அதே உள்ளம் பெண்ணைக் கோறலால் வரும் பெரும் பழியை நினைவூட்டித் தடையுறுத்துகின்றது, அந்த இருதரப்பட்ட மெய்ப்பாட்டில் உயிர்த்து, அயிர்த்து அவளை நீள நோக்கி உழக்கின்றான். பின்னர்ச் சற்றுத் தெளிவுபெற்று, அவளுக்குப் பொய்க் கூற்றாளர் யாரேனும் ஏதேனும் கூறிச் சூழ்ந்ததுண்டோ என்பதை

> *''... ... ... ... ... ... நீ திகைத்தது உண்டோ*
> *பொய்நிலையோர்கள் புணர்த்த வஞ்சம் உண்டோ*
> *அந்நிலை சொல் எனது ஆணை உண்மை ... ...''*
>
> (அயோ, கைகேயி சூழ் 1601)

என்று கேட்கிறான்.

தன்மகன் இராமன் என்று கொண்டு வளர்த்து, அவன் நலனே தன் நலனாக வாழ்ந்தவள் இன்று அவன் புனைய இருக்கும் முடியை ஆண்டு இல்லாத பரதனுக்கு ஆக்குவதும்

ஈண்டிருந்து முடி சூடற்குரியவனைக் காட்டிற்கு அனுப்புவதும் தவிர்க்காவகை வரத்தின்வழி வேண்டியதும் கண்ட அவன், அவள் பண்டைய கைகேயியாக இருந்து பேசவில்லை என்றும், அவள் அறிவினை யாரோ திரித்துவிட அறிவு திறம்பிய நிலையில் பேசுகின்றுள் என்றும் தெளிந்தே கேட்கின்றுன்.

ஆனுல் கைகேயி அவன் நினைந்தது போலன்றி தான் தன்னுடைய தெளிந்த அறிவினுலேயே பேசுவதாகவும், தீயவர் யாரும் தன்கண் போந்து ஒன்று உரைத்துத் தன் மனத்தை மாற்றவில்லை யென்றும் தான் கேட்ட வண்ணம் வரத்தை தந்தால் வாழ்வது அன்றேல் வீவது என்று தான் கொண்ட முடிவினைக் கூறுகின்றுள்.

*''திசைத்ததுமில்லை எனக்குவந்து தீயோர்*
*இசைத்ததுமில்லை முன்ஈந்த இவ்வரங்கள்*
*குசைப்பரியோய் தரின் இன்று கொள்வென் அன்றேல்*
*வசைத்திறம் நின்வயின் வைத்து மாள்வென்''*

(அயோ. கைகேயி சூழ் (1602

என்கின்றுள். மந்தரை சொல்ல மனமாறிய கைகேயி தீயோர் இசைத்ததும் இல்லை என்று கூறுவது பொய் கூறுவதாகத் தோன்றும். மந்தரை கூறிய கூற்றில் காரண காரியத் தொடர்பும், ஆண்டு நிகழும் நிகழ்ச்சிகளும், அவள் கூற்றிலுள்ள வாய்மையும், பொருத்தமும் கண்டு தெளிந்த கைகேயி மந்தரையைத் தீயோர் வரிசையில் சேர்த்தாள் அல்லள். அவள் தனைஉவந்த பெற்றியையும், தன் மகனுக்கும் நல்லவளாக அமைந்த தன்மையையும் கண்டு நேர்மையாளர் வரிசையில் சேர்க்கிருள். அவள் கூனியைத் தீயோர் வரிசையுட்படுத்தி யிருந்தால் அவள் பொய் சொன்னவளாவள். அங்ஙனம் கொள்ளாமையால் பொய்யள் ஆகாள்.

இங்கு எண்ணிறந்த காலம் உயிர் ஒன்று போல்வன செய்து வாழ்ந்த கைகேயியாக இல்லாமல் தயரதன் பால் பழி நிற்ப வரந் தாராதொழியின் பொன்றுவதாகக் கூறுபவளாக இருக்கின்ருள். அவன் இது காறும் சாவிற் சாகும் அன்புடைய மனைவி என்று கருதி வாழ்ந்து இது காலைக் கொடுங் கூற்ருய் இருந்தது கண்டு சிந்தை திரிந்து, திகைத்து, அயர்ந்து, தள்ளாடி வீழ்கின்ருன்.

*''ஆ கொடியாய் எனும் ஆவிகாலும் அந்தோ*
*ஓகொடிதே அறம் என்னும் உண்மை ஒன்றும்*
*சாக என எழும் மெய் தளாடி வீழும்''*

(அயோ. கைகேயி சூழ் 1604)

தான் முன்னே அவளைப் பெண் என்று கருதிக் கொன்ருல் பழி வரும் என்று அஞ்சியவன் இப்பொழுது பெண் கொலையால் வரும் நரகம் எதுவாயினும் அதில் வீழ்வது என்ற முடிவுக்கு வருகின்ருன்.

*'நாரியர் இல்லை இஞ்ஞாலம் எங்கும் என்னக்*
*கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்*
*பூரியர் எண்ணிடை வீழ்வன் என்று பொங்கும்''*

(அயோ. கைகேயி சூழ் 1605)

இப்பொழுது அவன் நிலை இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பு ஒத்தது. அவளைக் கொல்வதாலும் தனக்கு வருவது ஒரு நரகம்; அன்றி அவள் கேட்ட வரத்தினை அன்று தான் அங்ஙனம் கொடுக்கவில்லை என்று மறுத்துப் பொய் புகல்வதாலும் வருவது ஒரு நிரயம். அதனுல் எவ்வழியும் தனக்கு அளறு வருவதை எண்ணி அவளைக் கொல்வதை விட அவளிடம் இரந்து தான் கேட்ட வரங்களைத் தவிருமாறு வேண்டிப் பெறலாமென்று கருதுகின்ருன்.

கைகேயி கேட்ட வண்ணம் பரதனுக்கு முடி சூட்டலாம் என்ருல் அதனை அவன் ஏற்றுக் கொள்ள மாட்டான். அவ்வாறு அவன் ஏற்றுக் கொண்டாலும் உலகு அதனை ஏற்காது. அதனுல் கைகேயி வரம் கொண்டு பரதன் அரசினை ஏற்ருல் மூத்தவனுக்குரிய அரசினை வரத்தின் வழிப் பறித்தாள் என்ற பழி சாருமன்றி உலகத்தவரெல்லாம் கொள்ள விரும்புகின்ற புகழைக் கொள்ள முடியாது. இவ்வாறு பழி பூணுவதில் வருகின்ற பயன் யாது என்று கேட்கின்ருன்.

இராமனைக் காட்டிற்கு அனுப்புவதையும் இளையவன் முடி புனைவதையும் வானவர்கள் ஏற்கமாட்டார்கள் என்றும். நிலத்தவர்கள் இராமனேடு செல்வார்களேயன்றி முறையிலா முறையில் வந்த அரசினை ஏற்கமாட்டார் என்றும், இராமன் இவ்வரசினை விரும்பாத போதே தானே தன் விருப்பத்தால் தரவும் தன் ஆணையை மறுக்க அஞ்சி அவன் ஏற்றுக் கொண்டான் என்றும் கூறுகின்ருன். அவ்வரசினைப் பரதன் தான் பெற வேண்டுமேயானுல் முன்னர் இராமனுக்குக் கொடுத்து அதனை அவன் தர பரதன் கொண்டால் முறைக் கேடும் அறக்கேடும் தீருமென்று கூறி, மண்ணைக் கொடுப்பதற்குரிய வழியைக் கூறி, அம்மண்ணைத் தான் அம் முறையில் பரதனுக்குக் கொடுப்பதாக உடன்பட்டு இராமனைக் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்று கேட்ட வரத்தினைத் தவிருமாறு வேண்டுகின்ருன். இவ்வாறு இராமனிடம் கொடுத்துப்பின் அதனை இராமன் வழியாக பரதன் பெறலாம் என்று கூறுகின்ருன். அவன் இங்ஙனம் கூறக் காரணம் அமைச்சர் இராமன் அரசர் முதலியவர்களிடம் இராமனுக்கு முடி கொடுப்பதாகக் கூறிய வாய்மைப் பிழைப்பினின்றும் உய்தற்கே.

இது கேட்ட கைகேயி கேட்டதெல்லாம் தருவதாக இராமன் மேல் ஆணையிட்டுத் தன்னிடம் கூறிய அவன்

இப்பொழுது வரத்தினைத் தவிருமாறும் ஒன்று கொண்டு ஒன்று ஒழியுமாறும் கூறுவதில் உள்ள வாய்மைப் பிழைப்பையும், அன்று சம்பரப் போர்க் காலத்தில் கேட்ட வரங்களைத் தருவதாகக் கூறி இன்று அவற்றைத் தவிர்வதால் விளையும் வாய்மைப் பிழைப்பையும்

*''முன்னே தந்தாய் இவ்வரம் நல்காய் முனிவாயேல்*
*என்னே மன்னு யாருளர் வாய்மைக்கு இனி''*

(அயோ, கைகேயி சூழ் 1613)

என்று கேட்டுப் புலப்படுத்துகின்றாள்.

கைகேயிக்கு வரம் தாராதொழிந்தால் முன்னே ஏற்றதும், சற்று முன்னே தந்ததும், தவிர்ந்து பிழைபட்டு வாய்மை யற்றவனாகி விடுகின்றான். இவற்றிற்கு முன்னே அரசவை, அமைச்சவை, இராமன் ஊரவர் இவர்களிடம் இராமன் முடி புனைவதாகக் கூறிய கூற்று மாறுபட நிகழ்வதால் ஆண்டும் வாய்மைப் பிழைப்பு வருகின்றது. எவ்வழியும் குற்றம் புகுவது கண்ட தயரதன் கையாறு கொள்கின்றான்.

இங்கு நாட்டினைப் பரதனுக்குக் கொடுத்து அது வழி வருகின்ற வாய்மைப் பிழைப்பை ஏற்று அதன் துணையால் இராமனைக் காட்டிற்கு அனுப்பாமல் காக்க அவளிடம் மீண்டும் இரந்து வேண்டுகின்றான். அவ்வேண்டு கோளில் தன் மகன் காடு செல்ல நேர்ந்தால் அதன் வழி தனக்கு இறப்பு நேரும் என்ற வினைவிளைவையும் சுட்டி அவளிடம் தன்னைத் தானே அடைக்கலமாக்கியும் வேண்டுகின்றான்.

*''மெய்யே யென்றன் வேரற நூறும் வினை நோக்கி*
*நையா நின்றேன் நாவும் உலர்ந்தேன் நளினம்போல்*
*கையான் இன்றுஎன் கண்எதிர்நின்றும் கழிவானேல்*
*உய்யேன் நங்காய் உன்அபயம் என்உயிர் என்றான்''*

(அயோ கைகேயி சூழ் 1616)

இது கேட்ட கைகேயி தனக்கு அவன் நெடுங்காலத்திற்கு முன்னர் அளித்த வரம் அவன் அதற்குப் பின்னர் இராமன் முதலோர்க்குக் கொடுத்த வாக்கினைத் தவிரச் செய்தால் அது தயரதனுக்குக் குற்றமாகாது என்றும், முன்னர்க் கொடுத்த வரத்தைக் கொடாமைக்குப் பின்னர்க் கொடுத்ததைக் காரணமாக்குதல் தான் அறக்கேடாகும். அதனால், தான் கேட்டபடி தயரதன் கொடுத்த வரத்தினை இல்லை என்னாது கொடுக்க வேண்டுகின்றாள். தயரதன் அரசரிடமும் பிறரிடமும் இராமனுக்கு முடி சூடுவதாகச் சொல்லிப் பின்னர் அதனைப் பரதனுக்கு முடி சூட்டுவதால் ஆண்டு மக்களுக்குள் முடி மாற்றமே அன்றி முடிபுனை விழா நடப்பதில் வாக்குப் பிழைப்பு ஒன்று வந்து விடவில்லை. பரதன் இராமனைப் போல் அருங் குணங்களும் ஆற்றலும் படைத்தவன். பிறப்பு முயற்சியால் இராமனை ஒத்தவனே யாவான். இந்த முடி சூரியகுலம் தவிர்ந்து வேறு குலத்திற்கும் போகவில்லை. தன்னிடம் கொடுத்த வாக்கைத் தவிர்வதால் வாக்குத் தவறாத சூரிய குலத்தில் ஒருவன் கொடுத்த வரத்தினைக் கொடுக்க மறுத்தான் என்றும், அவ்வரமும் மனைவியிடம் கொடுத்து அதனைக் கொடுக்க மறுத்தான் என்றும் குற்றம் பெரிதாகி நின்று நிலவும் என்ற கருத்தில்,

> *''சரம் தாழ் வில்லாய் தந்தவரத்தைத் தவிர் கென்றல்*
> *உரம்தான்அல்லால் நல்லறம் ஆமோ......''*
>
> (அயோ. கைகேயி சூழ் 1617)

என்று கேட்கின்றாள்.

இங்காவது தயரதன் அவையோரிடமும் அரசர்களிடமும் இராமனிடமும் முடி கொடுப்பதாகக் கூறிய வாக்குப் பிழைப்பைக் கூறித் தனக்கு இரு திறமும் வாய்மைப் பிழைப்பு வருவதைக் கூறியிருக்கலாம். கூறியிருந்தால் அவள் கேட்ட வண்ணம் வரம் தருவதால் அதில் அவனுக்கு வாய்மைப் பிழைப்பு நிகழாது என்று கூறியிருப்பாள். ஆனால் அவன் அதற்கு

வேருக இங்கு மீண்டும் தான் பெற்ற சாபத்தினை நினைவு கொள்கின்ருன். இராமன் நீங்கத் தன் உயிர் நீங்குமென்ற உறுதிப் பாட்டில் துயர்க் கடலில் ஆழ்ந்து தன் மனைவி கையால் ஒரு கணவன் இறக்கின்ற செயல் நோக்கிப் பெண்ணி னத்தையே குறை கூறி உயிர் சோரக் கிடக்கின்ருன்.

அதுகாலை அவள் முறையாக அவ்வரத்தைக் ''கொடுத்தேன்'' என்று கூறினுல் தான் வாழ்வதாகவும் அன்றேல் தான் பொன்றுவதாகவும் கூறுகின்ருள். கூறியவள் சிபி மரபில் வந்த தயரதன், கொடுத்த வரத்தைத் தவிர்கின்ற பெற்றியைச் சுட்டிக் காட்டி, 'வாய்மை வளர்ப்பான் வரம் நல்கிப் பரிந்தால் என் ஆம்' என்று கேட்கின்ருள். அது கேட்ட தயரதன்,

> *''ஈந்தேன் ஈந்தேன் இவ்வரம் என்சேய் வனம் ஆள*
> *மாய்ந்தே நான் போய் வானுலகு ஆள்வென் வசை*
> *வெள்ளம்*
> *நீந்தாய் நீந்தாய் நின்மகனேடும் நெடிது*
>
> (அயோ. கைகேயி சூழ் 1627)

என்று கூறி முடிக்கின்ருன்.

இவ்வாறு கூறியவன் வாளேறுண்டவன் போலச் செயல் மறந்து கிடக்கின்ருன். கைகேயி தான் மேற்கொண்ட செயல் முடிந்த மகிழ்ச்சியில் துயில்கின்ருள்.

---

# 9. தயரதனின் தவற்றுணர்வு தந்த அவலம்

பொழுது விடிகின்றது, மக்கள் முடிசூட்டு விழாவினைக் காணக் கோலங்கொண்டு குழுமுகின்றனர். அரசர் அந்தணர்

முதலியோர் முடிசூட்டு விழா மண்டபத்திற்கு வந்து சேர்கின்றனர். வசிட்டன் ஆவன புரிகின்றான். கணித நூல் உணர்ந்த மாந்தர் காலம் வந்து அடுத்ததை எண்ணி இராமனை அழைக்கச் சுமந்திரனை வேண்டுகின்றனர். அது காலைக் கைகேயி சுமந்திரனைக் கண்டு இராமனைத் தன்னிடம் கொண்டு வருமாறு கூறுகின்றாள். இராமனும் அவள் அழைப்பினை ஏற்று வருகின்றான். வந்து தாயை வணங்கி நிற்கின்ற போது,

*''நாயகன் உரையான் வாயால் நான் இது பகர்வேன்''*

(அயோ கைகேயி சூழ் 1686)

என்று கருதி அவனிடம் தான் கூறுவது பொருத்தமென்று இராமன் ஏற்பானானால் தயரதன் அவனுக்குக் கூறவிருப்பதைத் தான் உரைக்கின்றதாகக் கூறுகின்றாள். அப்பொழுது இராமன், தந்தை ஏவலைத் தாய் தன்னுரையாகக் கூறக் கடவது ஒன்று உண்டென்றால் அதனைக் கேட்டுச் செய்ய கடமைப்பட்ட தான் பிறப்பின் பயனைப் பெற்று உய்ந்தவன் என்றும், தன்னிற் சிறப்ப இத்தகைய பேறு பெற்றுப் பிறந்தார் உளரோ என்றும், தான் செய்த தவத்தின் பயன் வந்து கூடிற்று என்றும், தாயும் தந்தையுமாகிய கைகேயியே அதனைக் கூறினால் தான் அதனைத் தலையேற்றுச் செய்து முடிப்பதாகவும் கூறுகின்றான். அப்பொழுது கைகேயி,

*''ஆழி சூழ் உலகமெல்லாம் பரதனே ஆள நீ போய்த்*
*தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கரும்தவ மேற்கொண்டு*
*பூழிவெங்கானம் நண்ணிப் புண்ணியத் துறைகளாடி*
*ஏழிரண்டு ஆண்டில் வாவென்று இயம்பினன் அரசன்''*

(அயோ. கைகேயி சூழ் 1690)

என்று கூறுகின்றாள்.

இது கேட்ட இராமனின் முகம் அப்பொழுது அலர்ந்த செந்தாமரையை ஒத்ததாக இருந்தது என்று கூறுகின்ருர் கம்பர். அவன் மனநிலையை இங்ஙனம் கூறுகின்றவர் அவன் உளநிலையையும்,

*''தெருளுடை மனத்து மன்னன் ஏவலின் திறம்பல் அஞ்சி*
*இருளுடை உலகம் தாங்கும் இன்னலுக்கு இயைந்து நின்ருன்*
*உருளுடைச் சகடம் பூட்ட உடையவன் உய்த்த காரேறு*
*அருளுடை ஒருவன் நீக்க அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்''*

(அயோ. கைகேயி சூழ் 1692)

என்று கூறுகின்ருர். இங்கு நாம் எண்ணிப் பார்க்க வேண்டிய செய்திகள் பல.

கைகேயி தான் பெற்ற வரத்தின் வண்ணம் பரதனுக்கு முடிசூட்டுவதும் இராமனைக் காட்டிற்கு அனுப்புவதும் ஆய செயல்களைப் புரிய வேண்டியவன் தயரதன். அவன் உணர்வு பெற்று அதனை இராமன்பால் கூற முடியாத நிலையினன் என்பதைக் கைகேயியிடம் அவன் வரம் கொடுக்கப்பட்ட பாட்டாலும் பேசிய பேச்சாலும் அறிவாள். ஆண்டு அவன்,

*''...... ........ ... ... நளினம் போல்*
*கையான் இன்று என் கண்ணெதிர் நின்றும் கழிவானேல்*
*உய்யேன் நங்காய் உன் அபயம் என் உயிர்''*

(அயோ. கைகேயி சூழ் 1616)

என்றவன் அங்ஙனமே,

*''முடி சூடாமல் காத்தலும் மொய்கானிடை மெய்யே*
*நெடியான் நீங்க நீங்கும் என் ஆவி...... .''*

(அயோ. கைகேயி சூழ் 1618)

என்று கூறி மண்ணிடை வீழ்ந்தவள். இத்தகையாள் தான் பெற்ற வரச் செய்தியை இராமனிடம் கூறி, இராமன் அதனை ஏற்றுக் கான் போகுழித் தயரதன் உயிர் கழிவதை அவன் காண ஒருப்படாது, 'நாயகன் உரையான் வாயால் நான் இது பகர்வன்' என நினைக்கின்றாள். இங்கு, தயரதன் இராமனைக் காட்டிற்குச் செல் என்று பணிப்பதையும் அப்பணி நின்று அவன் காட்டிற்குச் செல்வதைக் கண்டு உயிர் துறப்பதையும் கைகேயி தகைத்துள்ளாள்.

முடிபுனைய ஆவன இயற்றி ஆசி பெற வந்த இராமனிடம் ஆட்சிப் பொறுப்பைப் பரதன் ஏற்கின்றான் என்றும், இராமன் காட்டிற்குச் சென்று சடை தாங்கி, புண்ணியத் துறை படிந்து, பதினான்கு ஆண்டுகள் கழித்து வருமாறு அரசன் பணித்தான் என்று கூறுகின்றாள் கைகேயி. அவள் தயரதனிடம் கேட்ட வரமும் 'என்சேய் நாடாள்வது சீதை கேள்வன் வனமாள்வது' என்பதேயாகும்- அதன் வண்ணமே இராமனிடமும் பரதன் நாடாள்வான் என்றும் இராமன் காடாள்வான் என்றும் கூற வேண்டியவள் அங்ஙனம் கூறாமல் காட்டாட்சி என்றால் என்ன வென்று இராமனிடம் விளக்குகின்றாள்.

இங்குக் கைகேயி நாட்டாட்சிப் பொறுப்பு என்றுமே பரதனுக்கு வேண்டும் என்று கேட்டாளல்லள். ஆனால் தயரதன் அங்ஙனம் கருதியிருக்கின்றான். அதனால் தான்

*''.................என் சேய் வனமாள*
*மாய்ந்தே நான் போய் வானுலகு ஆள்வென் வசை*
*வெள்ளம்*
*நீந்தாய் நீந்தாய் நின்மகனோடும் நெடிது.........''*

(அயோ. கைகேயி சூழ் 1627)

என்கின்ருன். இங்கு 'நெடிது' என்பதால் அவன் ஈறிலாக் காலம் பரதன் நாடாள்வான் என்றும், அத்துணைக் காலமும் இராமன் காடாள்வான் என்றும் கருதியது போதரும். ஆனல் கைகேயி அங்ஙனம் எல்லையில்லாக் காலத்திற்குப் பரதனுக்கு ஆட்சிப் பொறுப்பை வரத்தின் வழி வேண்டவுமில்லை, இராமன் அங்ஙனம் முடிவில் காலம் கானத்து உறைய வேண்டுமென்று கருதவுமில்லை.

தயரதனிடம் அவள் கேட்ட வரம் என்ன என்பதற்கு இங்கேதான் அவள் விளக்கம் தருகின்ருள் தயரதன் இராமனுக்குத் தரவிருந்த முடியினைக் கைகேயி பரதனுக்கு ஆக்காமல் பதினன்கு ஆண்டுகட்கு ஆட்சிப் பொறுப்பை அவனுக்கு ஆக்குகின்ருள். அங்ஙனம் ஆட்சிப் பொறுப்பை அவன் ஏற்கின்றபோது பதினன்கு ஆண்டுகள் இராமன் பூழி வெங்கானம் போந்து, தாழிரும் சடைகள் தாங்கி, தாங்கரும் தவமேற்கொண்டு, புண்ணியத் துறைகளாடி வரவேண்டு மென்பது அவள் கேட்ட வரமும் இராமனுக்கு அவள் தந்த காட்டாட்சி விளக்கமுமாகும். இதைக் கேட்ட இராமன் முகம் செந்தாமரை மலரை வென்றிருப்பது, அன்று அவ்வன் அவ்வாட்சியினை ஏற்கத் தயங்கி அரசன் ஆணை வழி ஏற்று அது வழிவரும் துன்பத்திற்கு அஞ்சி நின்றது இது காலை விடுபட்டதாலேயாம்.

இத்தகைய முகமலர்ச்சியும், மனமாற்றமும் பெற்ற இராமன் தாய் கைகேயி மாட்டு,

> *''மன்னவன் பணியன்ருகில் நும்பணி மறுப்பனே என்*
> *பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்ருே*
> *என் இனி உறுதி அப்பால் இப்பணி தலைமேற்*
> *கொண்டேன்*
> *மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும்*
> *கொண்டேன்''*
>
> (அயோ. கைகேயி சூழ் 1693).

என்கின்ருன்.

# 10. காரணங் கேளாததேன்?

தயரதன் கைகேயியிடம் இராமன் மூத்தவன், அவன் முடி சூடுவதைத் தவிர்த்தல் அறமன்று, முறையன்று, உலகம் கொள்ளாது என்றெல்லாம் பேசியவன் அவளிடம் இராமனைக் காட்டிற்குச் செல்லுமாறு கூறக் காரணம் என்ன என்றோ, காட்டாட்சி என்றால் என்ன என்றோ கேட்டான் அல்லன். அவன் கேட்டிருந்தால் அவள் இராமனைக் காட்டிற்கு அனுப்புவதற்குரிய காரணத்தைக் கூறியிருப்பாள். அப்பொழுது பதினான்கு ஆண்டுகள்தான் இராமனைக் காட்டிற்கு அனுப்புகின்றாள் என்பதையும், பரதனுக்கு ஆட்சிப் பொறுப்பை அத்துணை ஆண்டுகட்குத்தான் கேட்கின்றாள் என்பதையும் அறிந்துகொண்டிருப்பான். எல்லையில் காலம் இராமனைப், படை யூற்றம் இல்லாத இளமைக்காலத்து அரக்கரிடமிருந்து வேள்விகாக்க அனுப்பிய தயரதனுக்குப் பதினான்கு ஆண்டுகள் என்ற கால எல்லை குறித்திருப்பின் கையறவும் மிகுந்திருக்காது, அதன் வழி அவன் உயிர்க்கு ஏதமும் சூழ்ந்திருக்காது.

தயரதன் அவளிடம் காரணம் கேட்க முடியாததற்குக் காரணம், இராமன் முடிபுனைவதில் தடை வரும் என்று எதிர் பார்த்த அமைச்சர். அரசர் இராமன், முதலியோரிடம் தடையின்றி வீடுபெற்றுத் தடை வராது என்று கருதிய கைகேயியிடம் தடை எழுந்ததோடு ஆட்சித் தடையும் காட்டகத்து அகற்சியும் நிகழ்ந்ததால் அவன் காடு ஏகுவது பற்றிய ஆராய்ச்சியை மேற்கொண்டிலன். அவன் கேட்டிருந்தால் அவள் உறுதியாக அக்காரணத்தைக் கூறியிருப்பாள் தயரதனும் தன் கருத்திடை தடையாக நின்றதும் அது தானே என்று அறிந்திருப்பான். அவன் அவளிடம் காரணம்

கோளாமைக்கு காரணம் அவள் உள்ளத்துத் தயரதனை ஏற்று வேற்றுமை சற்றும் அற்றவளாய் இருந்தவள் என்பதால் ஆம். இதனைக் கம்பர்,

*"வேற்றுமை உற்றிலள் வீரன் தாதைபுக்கு*
*ஏற்றவள் இருதயத்து இருக்கவே கொலாம்"*

(அயோ. மந். சூழ்ச். 1546)

என்பர்.

வேற்றுமை அற்ற கணவன் மனைவி என்றால் ஒருவன் பெற்ற இரண்டு கண்கள் தனித்தன என்றாலும் ஒன்றைக் காணும் போது ஒன்றையே காண்பதைப் போல அவள் மன நிலையும் தன்மனத்தோடு ஒத்திருக்க வேண்டும் என்று கருதினான்.

இராமன் மூத்தவனாகித் தந்தை தர, ஏற்க வேண்டிய முடியினைத் தந்தை ஏற்றுக்கொள்ளத் தன்னை வேண்டியபோது தான் அதில் காதல் உறாமலும் அதனைப் புறக்கணிக்கமாட்டாமலும் அது கடமை என்று தெரிந்துங்கூட, அரசன் ஏவியது இயற்றல் தனக்கு நீதியென்று ஏற்பானேன்? தயரதனும் இராமனிடம்,

*"அனைய தாதலின் அருந்துயர்ப் பெரும் பரம் அரசன்*
*வினையின் என்வயின் வைத்தனன் எனக்கொள வேண்டா*
*புனையும் மாமுடி புனைந்து இந்த நல்லறம் புரக்க*
*நினையல் வேண்டும் யான் நின்வயின் பெறுவது ஈது"*

(அயோ. மந்திரப். 1467)

என்கின்றான்.

இங்கு மூத்தவனாக உள்ள இராமன் தந்தை தந்த அரசை ஏற்றுக் கோடல் கடனாக இருப்பவும், அதில் விருப்பு வெறுப்பின்றி இருந்ததோடு அரசன் ஏவற்கு அஞ்சி ஏற்றான் என்றால் அவன் அம்முடியினை ஏற்க முடியாமைக்குரிய காரணம்

ஒன்றிருக்கவேண்டும். முன்னம் மிதிலையில் அரசன் தந்த செல்வத்தை மகிழ்ந்து ஏற்றுச் சென்றவன் இப்பொழுது விருப்பு வெறுப்புக் கொள்ளவில்லையென்றும் தந்தை ஏவலால் ஏற்றுக்கொள்வதாகவும் கூறுகின்ருன் என்ருல் மிதிலை நிகழ்ச்சிக்கும் அயோத்தி நிகழ்ச்சிக்கும் வேறுபாடு தோன்றக் காரணம் ஒன்று இருத்தல் வேண்டும். மிதிலையில் தயரதன் இராமனுக்கு முடி, கோல், குடை முதலியன தந்தது திருமணத்தின் பொருட்டுச் செய்தகோலம். மற்றைய மக்களும் அவரவர்க்குரிய நிலையில் சிறப்புற்றனர். அயோத்தியில் இராமனுக்குக் கொடுக்கப் பெறும் முடி முதலியன முறையாலும், முடிவானது; சடங்குடையது; ஆனுல் தம்பியர் இல்லாதது; தடையொடு பட்டது. இந்தத்தடை அயோத்திவாழ் மக்கள், இராமன் முனிவனேடு காடு சென்று அயோத்திக்கு மீண்டது வரையிலும் நிகழ்த்திய அரும் பெரும் செயல்களைப் பற்றிப் பேசிய பேச்சில் பிறந்த ஒரு பழியுரையாகும். இதனை இராமன் அறிந்ததால் அது பற்றி நீடு நினைந்து தான் அம்முடி புனைதற்கு தக்கான் அல்லன் என்ற கருத்தில் அச்செல்வத்தில் விருப்பு வெறுப்புகொள்ளாதிருக்கின்ருன். அத்தகைய மனநிலை படைத்தவனைத் தயரதன் அவன் கருத்தறிய முற்பட்டால் புறக்கணிப்பான் என்று கருத்தறிய முற்படாது ஏவல் வழி அச்செயலை முடிக்கின்ருன்.

---

## 11. கோசலை உணர்ந்தாள்.

இராமன் தான் காடு புகுவதைக் கூறவருகின்ருன். கோசலை, முன்னம் அரசன் அறிவித்த வண்ணம் முடிபுனையாமலும், புனைய இருப்பவனுக்குரிய சூழ்நிலைகளைப் பெருமலும் தனியனுய் வரக் கண்டவள் முடிபுனைவதற்கு இடையூறு உண்டோ என்று கேட்கின்ருள். அது கேட்ட இராமன்,

''..................நின் காதல் திருமகன்
பங்கமில் குணத்து எம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின்ருன்......''

(அயோ. நகர்நீங்கு 1697)

என்று கூறுகின்ருன். அதுகேட்ட கோசலே,

''முறைமை அன்றென்பது ஒன்றுண்டு மும்மையின்
நிறைகுணத்தவன் நின்னினும் நல்லனுல்
குறைவிலன்..........''

(அயோ. நகர்நீங்கு 1698)

என்று கூறுகின்ருள். அடுத்து,

''...... மன்னவன் ஏவியது
அன்று எனுமை மகனே உனக்கு அறன்
நன்று நும்பிக்கு நானிலம் நீகொடுத்து
ஒன்றி வாழுதி ஊழி பல..........''

(அயோ நகர்நீங்கு 1699)

என்கின்ருள்.

இங்குக் கோசலே பேசிய பேச்சிலும் உன்னற்குரிய செய்திகள் பல. பரதன் முடிசூடுவதில் அவள் காணுகின்ற குறை மூத்தவன் இருக்க இளேயவன் முடிசூடுவது என்பதே. இந்தக் குறையை அவள் எங்ஙனம் நிறையாகக் காணுகின்ருள் என்ருல், பரதன் மும்மையும் நிறை குணத்தவனுக அமைந்தவன். அஃதாவது என்றும் எல்லாக் குணங்களும் நிரம்பப் பெற்றுக் கறையற்று வாழ்ந்து வருகின்ருன் என்பதால் ஆகும்'

முக்காலத்தும் பரதன் நிறைகுணத்தவன் என்றவள் அடுத்து இராமனிடம் 'நின்னினும் நல்லன்' என்கின்ருள். இங்கு உறழ்ச்சிமுறையில் இராமனேயும் பரதனேயும் சீர்தூக்கிப் பார்க்கின்றபோது 'மும்மை' என்ற ஒன்றில் இராமனுக்குக் குறையிருந்ததை உணர்ந்து 'நின்னினும் நல்லன்' என்றதோடு அமையாது, அவன் எக்குறையும் அற்றவன் என்கின்ருள். இங்கு உறழ்ச்சி முறையில் அவள் கண்ட குறை என்ன?

இவள் கூறியதை இராமன் முன்னமேயே 'பங்கமில் குணத்து எம்பி' என்று கூறி உறுதிப் படுத்தியுள்ளான். இங்கு இராமனிடம் மும்மை ஒன்றில் குணப்பங்கம் நேர்ந் திருப்பது உய்த்துணர வேண்டியது. இதனுல் கோசலை இராமனிடம் அரசப் பொறுப்பு முழுமையும் பரதனிடம் கொடுத்து அவனேடு ஒன்றிவாழ்வது இராமனுக்கு அறம் என்றும் கூறுகின்ருள்.

இங்குக் கோசலை பரதன் குணத்தோடு இராமன் குணத்தினை சீர் தூக்கியாங்கு அமைச்சர்களோ, அரசர்களோ சீர்தூக்கிப் பார்த்திருத்தல் வேண்டும், ஆனுல் அங்கு முடிபுனைவதுபற்றி ஆய்வு மேற்கொண்ட தயரதன், மக்கள் நால்வருள் அரசுக்கு உரியோர் யார் என்று வினவியிருந்தால் அவர்கள் அந்த ஆய்வினை மேற்கொண்டிருப்பர். ஆண்டுத் தயரதன் அங்ஙனம் கூருமல் தான் முடி துறப்பதும், இராமன் அதனை ஏற்பதும் பற்றிக் கேட்டபோது அவர்கள் இராமனை நினைத்து அவன் மூத்தவன் என்பதையும் பெரிய வீரன் என்பதையும் நோக்கி அரசேற்கும் பண்புகள் வாய்க்கப்பெற்றவன் என்பதையும் கொண்டு இசைந்தனர். அதனுல் அவர்கள் தம்மிடம் வைத்த பொருளை அளந்து தம் கணிப்பைக் குறித்தனர்.

மக்களுள் மூத்தவன் அரசாள்வது மரபென்ருல், மூத்தவன் அவ்வரசைத் துறக்க நேரிடும் போது அடுத்த இளையவன் நாட்டையாள்வதில் தடையிருப்பதற்கில்லை. இராமன் காட்டில் வாளாவிருக்கும்போது பரதன் அரசினைப் பெற்று ஆண்டால் அது குறைபாடு உடையதாக ஆகலாம். அண்ணன் இல்லாத போது, அதுவும் துறந்து காட்டிற்குச் சென்ற போது தம்பி ஆள்வதில் குறைகாண வாய்ப்பில்லை. அண்ணன் இருக்கும் போது ஆள்வது குறை.

அண்ணன் திருதராட்டிரன் கண்ணிலாது போனதால் தம்பி பாண்டு அரசேற்று ஆண்டான்,

அண்ணன் சம்பாதி சிறை தீய்ந்து அரசியலுக்கு உரியன் அல்லாப்போது தம்பியாகிய சடாயு அரசினை ஏற்று வாழ்ந்தான் என்றும் காணுகின்றோம்.

அடாது செய்கின்ற இராவணன் வாழும்போதே இலங்கை அரசைத் தம்பி வீடணனுக்காக்கி மகிழ்ந்தவன் இராமன்.

அதனால் நாட்டாட்சிக்கு மூத்தோன்தான் என்பதற்கில்லை. அதுதான் முறை என்றாலும், அம்முறை சில சூழ்நிலைகளில் மாறுபடுவதுண்டு.

*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடையோ னாறு அரசும் செல்லும்* (புறம் 183)

இங்கு முறைபற்றிப் பேச்சில்லை. கைகேயி கேட்டது வரம். அதன்படி இராமன் காடேக, பரதன் நாடாளவேண்டும், அவ்வளவே. இங்கு அண்ணன் தம்பியர் நால்வருள் அரசாள்வது யார் என்ற ஆராய்ச்சி மேற்கொள்ளப்படவில்லை. அத்தகைய ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டிருந்தால், அப் பொழுது மூத்தவனிருக்க இளையவனுக்கு அரசு கேட்பது முறையன்று என்று கூற இடமுண்டு. இங்கு வரமாகப் பெற்றபின் அதுபற்றிப் பேசுவதில் பொருள் இல்லை. வேண்டு மாயின் வரம் கேட்டது முறையற்றது, பொருளற்றது என்று பேசலாம்; அதற்குப் பொருள் கேட்டிருந்தால் கைகேயி கூறியிருப்பாள்.

---

# 12. இராமன் மனநிலை.

கோசலை பரதனோடு இராமனை ஒத்து உறழ்ந்து சீர்தூக்கிப், பரதன் முடிபுனைதற்கும் இராமன் அதனைப் புனையாது போனதற்கும் காரணம் கண்டு அதனை அறிந்த இராமனிடமே குறிப்பாகக் கூறினாள்.

இராமன் தன் தம்பி பரதனுக்கு நாட்டினைத் தந்து ஒன்றி வாழ்வது அவனுக்கு அறம் என்று கூறியபோது, அவன் தனக்கு அறம் என்று அரசன் அளித்த ஆணையைக் குறிப்பிடுகின்றான். அதனை,

*'' நாயகன் எனை நல்நெறி உய்ப்பதற்கு*
*ஏயதுண்டு ஓர் பணி... ... ... ...''*

(அயோ, நகர்நீங்கு. 1700)

என்று குறிப்பிடுகின்றான்.

இராமன் அரசியல் நடாத்துவது ஓர் அறம் என்றாலும், அவ்வறத்தினைத் தனக்கு அளித்ததோடு, தன்னைப் பதினான்கு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று சடைகள் தாங்கித் தவமேற்கொண்டு, புண்ணியத்துறைகள் படிந்து வருமாறு பணித்து அதுவே அவனுக்கு அறம் என்று கூறியுள்ளான் என்கின்றான். அதனை,

*'' ஆண்டோர் ஏழினொடு ஏழகன் கானிடை*
*மாண்ட மாதவரோடு உடன்வைகிப் பின்*
*மீண்டு வரல் வேண்டும் என்றான் ... ... ...''*

(அயோ, நகர்நீங்கு. 1701)

என்று கூறுகின்றான்.

அதுகேட்ட கோசலை, அன்போடு முடியை ஏற்றுக்கொள் என்று கூறிய அரசன் விடிவதற்குள் அது இல்லை என்றதோடு காட்டிற்கு செல் என்கின்றானென்றால், அவ்வாறு அரசன் ஏவ இராமன் செய்த குற்றம் என்னஎன்று அவனையே கேட்கின்றாள். இராமனுக்குத் தயரதன் கொடுத்த முடியை இல்லையென்று கூறுதற்கு இராமன் அவனுக்கு இழைத்த கொடுமை ஒன்று இல்லையேனும், கைகேயி வரத்தால் வந்த விளைவு என்பதை அப்பொழுது அவள் அறியாள்.

கோசலை, பரதன் முடிபுனைகின்றான் என்று அறிந்ததும் தம்பிக்கு அரசைக் கொடுத்து அவனோடு ஒன்றிவாழ்வது

அவனுக்கு அறம் என்றுகூறி, அவ்வாறு முடியில்லாது பல ஊழிக்காலம் இராமன் வாழுமாறு வாழ்த்தியவள். கைகேயி பதினன்கு ஆண்டுகள் பரதன் ஆட்சியும் பின்னர் அது இராமனுக்கு உரியதாவதையும் கருதி வரம் பெற்ருள் என்பதை அவள் அறியாள். அறிந்திருந்தால் 'ஒன்றி வாழுதி ஊழிபல' என்று வாழ்த்தியிருக்கவும் மாட்டாள்; பெரிதாகக் கையாறு கொண்டிருக்கவும் மாட்டாள்.

'ஆண்டோர் ஏழிஞெடு ஏழ் அகன் கானிடை மாண்ட மாதவரோடு வைகிப் பின் மீண்டுவரல் வேண்டும் என்ருன்' என்று இராமன் கூறியிருப்பவும் பதினன்காண்டைய பிரிவே பெரும்பிரிவாகக் கருதி நோகின்ருள். அப்பொழுது இராமன் தயரதனே வாய்மை மன்னனுக்கவே தன் சிறந்த தம்பி பரதன் திரு உறப்பெறுதலேயும் தான் வனத்திடை தவம்புரிதலேயும் செயற்படுத்தப் போந்ததாகக் கூறுகின்ருன்.

பின்னர் இராமன் காலக் குறுக்கத்தைக் சொன்ன தோடமையாமல் தான் கோசிக முனிவனேடு வேள்வி காக்கச் சென்று அவன் அருள்பெற்றுவந்த பெருமையையும், அவன் தரக்கொண்ட விஞ்சைகளேயும், அதன் பிறகு வில்லிறுத்துச் சீதையைப் பெற்ற சிறப்பையும், பரசுராமன் வலியொடுக்கி முகந்த தவவலிமையையும் சுட்டி,

*''முன்னர்க் கோசிகன் என்னும் முனிவரன்*
*தன்னருள் தலே தாங்கிய விஞ்சையும்*
*பின்னர் எய்திய பேறும் பிழைத்தவோ*
*இன்னம் நன்று அவர் ஏயின செய்தலே"*

(அயோ, நகர் நீங்கு. 1716)

என்கின்ருன்.

இங்கு இராமன் தான் முன்னம் காடு சென்று பெற்ற பேறுகளேக் குறித்தவன் 'இன்னம் நன்று அவர் ஏயின செய்தலே' என்கின்ருன். அவர் ஏயின செய்தல் என்பது இங்கு விசுவாமித்திர முனிவனே மட்டுஞ் சுட்டாது. இது, தாய்

தந்தையரோடு தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற்கொள்கின்றபோது பூழிவெங்கானத்துத் தான் காண இருக்கும் முனிவர்களை நினைந்தும் ஆகும்.

விசுவாமித்திர முனிவன் இராமனுக்குத் திருமணமான பின்பு ஆசிகூறிச் சென்றுவிட்டான். ஆனால், அவன் தான் வேள்விக்கு அழைத்துச் சென்ற இராமனைத் தாடகையைக் கொல்வித்து, அவளுக்குப் பரிந்து வந்த சுபாகுவைக் கொல்வித்து, மாரீசனைக் கடற்படுத்தி, உடன்வந்த அரக்கர் பலரின் புறங்காணச் செய்தவன். பின்னர் இராமன், வேள்வி முடித்த விசுவாமித்திரனிடம் 'இன்று யான் செய்யும் பணி என்கொல்? என்று கேட்டபோது முனிவன், பெரிய காரியம் உள அவை முடிப்பது பின்னர் என்று கூறியதை நினைவு கூர்ந்து தான் இதுகாலை காட்டிற்குச் செல்வது அவன் கூறிய பெரிய காரியம் முடிப்பதற்கென்றே உட்கொள்கின்றான்.

அப்பெரிய காரியம் அரக்கரோடு தொடர்புடையது என்பதை முனிவன் தாடகையின் வரலாறு கூறும்போது,

*'' இலங்கை அரசன் பணி அமைந்து ஓர் இடையூரு*
*விலங்கல் வலிகொண்டு எனது வேள்வி நலிகின்றாள்''*
(பால தாடகைவதைப் 385)

என்று இராவணனுடைய ஆணையால் அவள் முனிவர்கள் இயற்றும் வேள்விக்கு இடையூறு செய்கின்றாள் என்று கூறி அவளைக் கொல்வித்துள்ளான் ஆதலின், இனி முனிவர்கள் ஆற்றும் வேள்விக்குத் தடைசெய்யும் மூலகாரணனாகவுள்ள இராவணனை வதைப்பதுதான் பெரிய காரியம் என்பதை இராமன் இதுகாலை நினைவு கொள்கின்றான். தன்னைத் தந்தை தாய்வழி ஆணையிட்டுக் காட்டிற்கு அனுப்பியது, அன்று முற்றுப்பெறாது நின்ற முனிவர் பணியினை, இதுகாலை காட்டிற் குச்சென்று ஆண்டு உறையும் முனிவர்கள் இயற்றும் வேள்வி களைக் காத்து இராவணனைக் கொல்லுதலில்தான் நிறைவு

பெறும் என்று கருதி, மகிழ்ச்சியோடு காட்டிற்குச் செல்ல உடன்பட்டு, அவர்கள் ஆசி முதலியன பெற்று, பதினுன்கு ஆண்டுகள் கழித்துச் செம்மையோடு வந்து அரசாட்சி செய்வது பல்லாற்ருலும் அறம் என்று கருதிக் கூறியதாக உட்கொண்டு,

*'' மாதவர்க்கு வழிபாடு இழைத்து அரும்*
*போதம் முற்றிப் பொருவரு விஞ்சைகள்*
*ஏதம் அற்றன தாங்கி இமையவர்*
*காதல் பெற்றுஇந் நகர்வரக் காண்டியால்''*

(அயோ. நகர் நீங்கு. 1717)

என்று கூறுகின்ருன்.

---

# 13. தந்தையின் பிரிவும் தாயார்தம் பரிவும்

இராமன் பல கூறியும் அதனைக் கொள்ளா மனத்தளாகிய கோசலே, பரதன் நாட்டினைக் கொள்ளட்டும்; ஆனுல் இராமன் காட்டிற்குச் செல்லுதல் வேண்டா என்று கருதி இராமனைக் காடு செல்லாவகை தடுக்கத் தயரதனைக் காணச் செல்கின்ருள், தயரதன் சோர்ந்து இறக்கும் நிலையில் கிடத்தல் கண்டு அதனைப் பொருத கோசலே புலம்புகின்ருள். ஆண்டு வசிட்டன் வருகின்ருன். அங்குத் துயரம் அற்றவளாய் நின்று கொண்டிருந்த கைகேயியிடம் காரணம் கேட்க அவள் இத் துணையும் தன்னுல் நிகழ்ந்தது என்று அனைத்தையும் கூறுகின்ருள்.

அது கேட்ட வசிட்டன் அயர்ந்து கிடக்கும் தயரதனைப் பனிநீர் தெளித்து உணர்வு வரப் பண்ணிக் கைகேயியே இராமனுக்குத் தான் பெற்ற நாட்டினைக் கொடுக்க இராமனே நாடாள்வான் என்று கூறி அவன் அயர்ச்சியை அகற்றுமாறு வேண்டுகின்ருன். அப்பொழுது தயரதன்,

***"..................................நினையா வினையேன் இனியான்***
***பொன்றும் அளவில் அவனைப் புனைமா மகுடம் புனைவித்து***
***ஒன்றும்வனம்என்று உன்னுவண்ணம் செய்து***
***என்னுயிரையும்***
***குன்றும் பழிபூணுமல் காவாய் கோவே........"***

(அயோ. நகர் நீங்கு. 1734)

என்று முனிவனை நோக்கி வேண்டுகின்ருன்.

இங்குத் தயரதன் தன்னை 'நினையா' வினையேன் என்று கூறி முன்னர் தான் பெற்ற முனிவன் சாபத்தை நினைவு கொண்டு அச்சாப வாய்ப்பு இதுகாலை ஏற்பட்டுத் தான் இறக்கப் போவதாகவும், இறக்கும் தருவாயில் தான் இராமனுக்குக் கொடுத்த முடியினைக் கைகேயிக்குக் கொடுத்த வரத்தால் பொய்யனுகி விடாமல் வாங்கி அளிப்பதோடு, தன் மகன் இராமன் காட்டிற்குச் செல்லாவகை காக்க வேண்டுமென்று வேண்டுகின்ருன்.

இங்கு அவனுக்கு வேண்டியது மூன்று காரியங்கள். ஒன்று இராமன் முடிபுனைவது, இரண்டு இராமன் காடு புகாமல் இருப்பது, மூன்று தான் கைகேயிக்குக் கொடுத்த வரம் மறுக்கப் பெற்றது என்றில்லாமல் தன் வாய்மை காக்கப் பெறுவது. இச்செயல்கள் மூன்றும் செம்மையாக நடைபெற வேண்டுமாளுல் கைகேயி வரத்திஞல் பெற்ற நாட்டினை இராமனுக்கு அளித்தல் வேண்டும். அடுத்து இராமனைக் காடேக வேண்டுமென்று கேட்டுப் பெற்ற வரத்தினை இராமனிடம் கூறித் தந்தை அவனை மீண்டு வந்து அரசேற்கச் சொன்ஞன் எனச் சொல்லித் தகைக்கவேண்டும். இவ்வாறு செய்தால் தயரதன் வாய்மை மன்னனுகி விடுவான். இந்த மூன்று செயல்களை நிறைவேற்றுவதற்கு முனிவன் கைகேயியிடம் வேண்டுகின்ருன். அது கேட்டு அவள் விம்மி அழுது,

"...................அரசன் மெய்யில் திரிவான் என்னில்
இம்மாண் உலகத்து உயிரோடு இனிவாழ்வு உகவேன்
என்சொல்
பொய்ம்மாணுமற்கு இன்றே பொன்ருது ஒழியேன்......"

(அயோ, நகர் நீங்கு. 1736)

என்கிருள்.

இங்குக் கைகேயி, தயரதன் தான் சொன்ன உண்மைக்கு மறுதலையாகத் திரிந்து செயற்பட முனைவான் என்ருலும், அவள் கேட்டவண்ணம் வரம் பெருது போனுலும் சொன்ன சொல்லைக் காக்க உயிர் துறப்பதாகக் கூறுகின்ருள்.

பின்னர் வசிட்டன், கணவன் இறப்புக் கண்டும் கலங்காது கண்ணேடாது கைகேயி இருப்பக்கண்டு அவள் கொண்ட கராணத்தை அறியாத வசிட்டன் அவளைப்பெண்ணே, தீயோ, மாயாப் பேயோ கொடியாய் (1738) என்றெல்லாம் கடிந் துரைக்கிருன். அதன் பின் தயரதன் கைகேயியையும் பரதனையும் வன்சொல் வழங்கிப் பலவாறு வைகின்ருன். இறுதியில் கைகேயியை மனைவி அல்லள் என்றும், பரதனை மகன் அல்லன் என்றும், அவன் உரிமைக்கு ஆகான் என்றும் முனிவனைக் கரியாக்கி உறவு அறுத்துக் கொள்கிருன்.

பின்னர் கோசலை, அரசன் கைகேயிடம் வரத்தைக் கொடுத்துவிட்டு அவ்வர விளைவால் மகன் காட்டிற்குச் செல்வது குறித்து இப்போது கையாறு கொள்வதைப் போலத் தானும் கொண்டவளேனும், மகன்பால் வைத்த அன்பிஞல் கொடுத்தவரத்தைத் தவிரச் சொல்வதோ அவ்வரம் பற்றிக் கையறவு கொண்டு வரன் பெற்ருளை இழித்துரைப்பதோ தயரதன் பெருமைக்கு இழுக்கினைத் தரும் என்றும், அவ்வாறு நினைப்பதையும், பேசுவதையும், உயிர் விடுவதையும் உலகு அறம் என்று ஏற்காது என்பதையும் நினைந்து, மகன்பால் வைத்த அன்பைக் குறைத்து வாய்மை வழுவாவகை நின்று

சோர்வு அகற்றிக்கொள்ள வேண்டும் என்கிருள். எனினும், தயரதன் தன் வேண்டுகோட்கிணங்கித் தான் பூண்ட கையற வால் உயிர் ஓயாது ஒழியான் என்று துணிந்த கோசலே தயரதனேக் காட்டிலும் பெரிதாகத் தளர்வுறுகின்ருள்.

இங்குக் கோசலே, தயரதன் வரம் கொடுத்துவிட்டு அக் கொடைக்குக் கையாறு கொள்வதும், வரம் பெற்ருரை நிந்திப்பதும், கொடுத்த வரத்திற்கு மறுதலேயாக இராமன் காடேகாது தவிர்ந்திருப்பதும் அறத்திற்குப் புறன் என்று கருதுவாளேயானுல், இவளும் கைகேயி கொண்ட முடிவிற்கே வந்தது போதரும். கைகேயியும் தயரதனிடம்,

*"சரம் தாழ் வில்லாய் தந்த வரத்தைத் தவிர் கென்றல்*
*உரம் தான் அல்லால் நல்அறம் ஆமோ உரை*

(அயோ. கைகேயி சூழ் 1617)

என்று கேட்டாள்.

இக்கேள்வியையே கோசலேயும் தயரதனேத் தேற்றப் புகுந்த நிலேயில்,

*"தள்ளா நிலேசால் மெய்ம்மை தழுவா வழுவா வகைநின்று*
*எல்லா நிலேகூர் பெருமைக்கு இழிவாம் என்ருல் உறவோய்*
*விள்ளா நிலேசேர் அன்பால் மகன்மேல் மெலியின் உலகம்*
*கொள்ளாது அன்ருே ? ..................."*

(அயோ. நகர்நீங். 1746)

என்று கேட்கின்ருள். வாய்மை அறத்தைத் தழுவி அது வழுப்படாதும் குறை சுட்டாதும் காத்து நின்றவன், மகன் மேல் அன்பு காட்டிப் பரிந்து அழுதால் அது பிழைபட்டதாகி உலகப் பழிப்புக்குள்ளாகும் என்கின்ருள். கைகேயி இங்ஙனம் வரம் கேட்டது வேண்டுமாயின் முறைமைக்குப் புறம்பானது என்ருல், அதனேத் தயரதன் கொடுக்கத் தயங்குவதும், கொடுத்ததை மாற்ற வேண்டுவதும், கொடுத்ததில் மாறுபட்ட

நிகழ்ச்சி இருக்கவேண்டுமென்று கருதுவதும் வாய்மைக்கும் மரபுக்கும் புறம்பானது என்று கோசலை தெளிந்த அளவு வசிட்டன், தயரதன் போன்றவர்கள் தெளிவு கொண்டா ரல்லர். கைகேயி கொடியள், தீயள், பேயள் என்பதெல்லாம் கணவன் வேண்டுகோட்கு இணங்காததையும், அவன் சோர்வு கண்டு துளங்காததையும் அடிப்படையாக்கிப் பேசிய கூற்றுக் களேயன்றி வேறல்ல. வரம் பெற்ற பின் தயரதன் அதனைக் கொடுத்துப் பின் அதனை மாற்றவும், திரிக்கவும், குறைக்கவும், கூட்டவும் பேசுவதும், வீழ்வதும், சோர்வதும், தள்ளாடுவதும், தளர்வதும் காணும்போது தன் உயிரச்சம் காரணமெனினும் அவன் அங்ஙனம் உழந்திருக்க வேண்டாமென்று கொள்ளத் தோன்றுகின்றது. வாய்மை காக்க உயிர் துறத்தல் பெருமை தானே !

ஆனல், அவன் அங்ஙனம் உழப்பதற்கு மகன்மேல் வைத்த மாருக்காதல் ஒரு காரணமேனும், அவையோரிடமும், மகனிடமும், அரசர்களிடமும் இராமனுக்கு, முடி சூட்டப் போவதாகக் கூறி அதனை இல்லையென்றதோடு அவனைக் காட்டிற்கும் அனுப்புவது தான் கொடுத்த வாக்கினைத் தவற விடும் வாய்மைப் பிழைப்பிற்கு அஞ்சியதே. இதனை,

*„உடைமா மகுடம் புனை என்று உரையா உடனே கொடியேன்*
*சடைமா மகுடம் புனையத் தந்தேன் அந்தோ''*

(அயோ. நகர்நீங் 1750)

என்கின்ருன். கைகேயி இவ்வரத்தினைத் தயரதன் முடிசூட்டும் முயற்சி மேற்கொள்ளுமுனபே கேட்டிருந்தால் தயரதன் இத்துணைக் கையாறு கொண்டிருக்கமாட்டாள். அவன் காடேக வேண்டிய காரணம் என்ன வென்றும் கேட்டிருப்பான். அவன் நிலை இருதலைக்கொள்ளி எறும்பாகிவிடுகின்றது. இச் சூழ்நிலையைத் தனக்கு ஆக்கித் தந்த கைகேயியை மனைவி அல்லள் என்றும், அவள் அங்ஙனம் தனக்குக் கேடு செய்யக் காரணமாக இருந்த பரதனையும் மகன் அல்லன் என்றும் துறக்கின்ருன்.

அங்ஙனம் அவர்களைத் துறந்து மேலும் கையாறு மிகுந்து தன்னை மறக்கின்றான். மறந்தவன் சற்று உயிர்ப்புற்றுஇராமன் மீண்டு வருவானோ என்று கேட்டதோடு, கைகேயி தன் மகனுக்குத் தரணி வேண்டியதோடு நில்லாமல் இராமனைக் காடேகு என்று கூறிவிட்டாளே என்று கூறிக் கையாறு கொள்ளுகின்றவன், தான் உறுதியாக இறக்கும் காலம் நேர்ந்துவிட்டதற்குத் தான் முன்னே பெற்ற சாபம் ஒன்றினைக் கோசலையிடம் கூறுகின்றான்; கூறி, இராமன் காடு புகுவதும் தன் உயிர் வீவதும் இறையும் தவறு என்கின்றான்.

இராமன் காட்டிற்குச் செல்லுகிறான் என்ற செய்தியறிந்த பொதுமக்கள் கைகேயியை, கூனியை, தயரதனை, பரதனை எல்லோரையும் குறை கூறுகின்றனர். அதில் அரசன் கைகேயி பால் பெருங்காதல் கொண்டு கருத்தழிந்தான் என்றும், தலை மகனாகிய இராமனுக்கு ஆட்சியை முன்னே கொடுத்து, முறைதிறம்பத் தம்பிக்குப் பின்னே கொடுத்தால் அது மெய் பிழைத்ததாக ஆகாதோ என்றும் பேசுகின்றனர். இதனை,

*''என்னே நிருபன் இயற்கை இருந்தவா*
*தன்னே ரிலாத தலைமகற்குத் தாரணியை*
*முன்னே கொடுத்து முறைதிறம்பத் தம்பிக்குப்*
*பின்னே கொடுத்தால் பிழையாதோ மெய் என்பார்''*

(அயோ நகர்நீங். 1803)

என்பர் கம்பர்.

இவ்வாறு உலகம் தன்மேல் பழிகாணும் என்று அஞ்சியே தயரதன் பெரிதும் உழந்தான். தன்னால் வாய்மையும் காக்க முடியாத மரபையும் காக்க முடியாத சூழ்நிலையில்,இருதலையும் யானையாத்த தேய்புரி பழங்கயிருகித் தன் உயிரை விட்டு விடுகின்றான். இதுவே தயரதன் பெற்ற பெருஞ்சிறப்பு. இச்செயல்,

*'மருந்தோ மற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை*
*பீடழிய வந்த இடத்து''*

(குறள் 968)

என்பது போன்றது.

# 14. முடி இழக்க ஊழ்காரணமா?

இராமன் காடுபுகும் செய்தி அறிந்த இலக்குவன் பரதனையும் கைகேயியையும் இழித்துப் பேசி, இராமனுக்கு ஊறு விளைத்த அனைவரையும் கொன்று அரசு தருவதாகக் கூறுகின்றான். அப்போது இராமன்,

''பின் குற்றம் மன்னும் பயக்கும் அரசு என்றல்பேணேன்
முன் கொற்ற மன்னன் முடிகொள்க எனக் கொள்ள
மூண்டது
என் குற்றம் அன்றோ இகல் மன்னவன் குற்றம் யாதோ''

(அயோ. நகர் நீங்கு. 1823)

என்று கூறுகின்றான்.

இங்கு மூத்தவனாகிய இராமன், வழி வழி வரும் முடியைத் தயரதன் கொடுக்க, கொள்ள வேண்டியவன், முன் ''கொற்ற மன்னன் முடிகொள் எனக் கொள்ள மூண்டது என் குற்றம் அன்றோ'' என்று பேசுவது எதற்கு? மூத்தவனாக இருப்பவன் முறைப்படி வரும் அரசினைப் புறக்கணிப்பது எங்ஙனம்? அரசினைப் புறக்கணிப்பதற்குத் தன்பால் நின்ற காரணம் ஒன்றில்லாது போனால் இராமன் அங்ஙனம் கூறியதிற் பொருள் இல்லை. தான் அவ்வரசினை ஏற்றால் ஏற்ற பின் குற்றம் பயக்கும் என்பது எங்ஙனம்? அக்குற்றமும் அரசினைப் பெறுவதில் நிலைபெறுமாறு எப்படி? அது என்ன என்றும் இராமன் விளக்கிக் கூறினான் அல்லன். அதனை இலக்குவனுக்கு விளக்கும் முறையில், ஆற்றில் நீர் வரவில்லை யென்றால் அது ஆற்றின் குற்றமன்று; அது நீர் பெறுதற்கு அடிப்படையாய மழை பெய்திருக்கவேண்டும். அதுபோலத் தான் அரசு பெறுதற்கு உரிய ஆகூழ் அமைந்திருக்க

வேண்டும். அது தனக்கு இல்லாதபோது தந்தை, தாய் தனயன் என்ற இவர்களைப் பிழை செய்தவராகக் கூறுதல் பிழைபட்டது என்கின்ருன்.

விதி என்னும் முறைமை தன்னைப் பிழைசெய்யப் பணித்த தால் வந்த விளைவு இதுவென்று அவ்விதி முறையால் வந்த பிழை ஒன்றைச் சுட்டி, அப்பிழை புரிந்த தானே குற்ற முடையான் என்றும், பிறரை வெகுள்வது காரணமற்றது என்றும் கூறுகின்ருன். இங்கும் இராமன் விதியின் பிழைக்கு வெளிப்படையான பொருள் கூறினுன் அல்லன்.

பின்னர் இராமன் சுமத்திரையிடம் விடைபெற்றுக் காடு புக நேர்ந்தகாலை, கைகேயி காட்டாட்சிக்கு வேண்டப்படும் மரவுரி முதலியனவற்றைத் தருகின்ருள். காடு புகும் இராமனை நோக்கி வசிட்டன்,

*"வாழ்வினை நுதலிய மங்கலத்து நாள்*
*தாம்வினை அதுவரச் சீரை சாத்தினுன்*
*சூழ்வினை நான்முகத்து ஒருவன் சூழினும்*
*ஊழ்வினை ஒருவரால் ஒழிக்கற் பாலதோ"*

(அயோ. நகர் நீங். 1854)

என்று இராமன் ஊழ்வயம் நினைந்து உளைகின்ருன். இங்கும் வசிட்டன் அவ்வூழ் என்ன என்று விளக்க வில்லை.

இதுகாறும் தயரதனேடு இணைந்து கைகேயியின் வரச்செயலால் விளைந்தது என்று அவளைப் பலவாறு நோவன செய்து நுவன்ற முனிவன் இப்பொழுது அப்பேச்சிற்கு நேர் மாருகக் கைகேயி காரணமாக இச்செயல் நிகழ வில்லை என்றும், அதற்கு வேருேர் காரணம் முன் நிகழ்ந்திருக்க வேண்டும் என்றும், அக்காரணம் பின்னே தெளிவாக அறியப் பெறும் என்றும் கூறுகின்ருன்.

'வெவ்வினை அவள் தர விளைந்ததேயும் அன்று
இவ்வினை இவன்வயின் எய்தற்பாற்றும் அன்று
எவ்வினை நிகழ்ந்ததோ ஏவர் எண்ணமோ
செவ்விதின் ஒருமுறை தெரியும் பின் என்ருன்."

இராமனுக்கு இத்தகைய கேடுவரக் கைகேயி காரண மற்றவள் என்பானேல் கூனியும் காரணமற்றவள் ஆவள். இதே வசிட்டன் முன்பு தயரதனிடம் மகப்பேறிலாப் புன்மை போக்க வழி கூறியபோது,

"அலைகடல் நடுவண் ஓர் அனந்தன் மீமிசை
மலையென விழிதுயில் வளரும் மா முகில்
கொலை தொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென் என்று
உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை
(பால. திருவவதாரப். 185)

மனத்தில் எண்ணியவன். அந்த வாய்மைப்படி அலைகடல் நடுவண் இருந்த திருமால்,

"மசரதம் அனையவர் வரமும் வாழ்வம் ஓர்
நிசரத கணைகளால் நீறு செய்யயாம்
கசரத துரகம் மாக் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதும் தாரணி"
( .................201)

என்று கூறிய வண்ணம் பிறப்பான் என்று தெளிந்தவன். இங்கு இராமனுக்கு வந்த வெவ்வினை எது என்று உன்னி உணர வேண்டியவன். இச் சூழ்நிலையில் தெளிவோடிருந்து அக்காரணங்களை நினைந்து தயரதனுக்கு அமைதி கூற வேண்டியவன். எப்படியோ இதுகாறும் கைகேயி காரணமென்று தயரதனோடு சேர்ந்து பழித்துப் பழிமொழி வழங்கினன். அங்ஙனம் வழங்கியது முக்குணவசத்தால் முறைமறந்தது என்று

கொண்டாலும், இங்குத் தயரதனுக்கு மகனுகப் பிறந்த இராமன் அரக்கர்தம் புன்மை போக்க காடுபுகுகின்ருன் என்று கருதாது 'எவ்வினை நிகழ்ந்ததோ, ஏவர் எண்ணமோ, செவ்விதின் ஒருமுறை தெரியும் பின்' என்று கூறுகின்ருன் என்ருல் இங்கு அவன் அறிந்த அத் தெய்வீகக் காரண மன்றியும் வேறு காரணம் ஒன்றிருக்கவேண்டும். இராமன் காடு புகுதற்கு உரியன் அல்லன் என்றும், இவ்வாறு காடு புகுதற்கு ஓர் காரணம் தெளிவாகத் தெரியும் பின்னே என்றும் கூறு வதை நோக்கும்போது வசிட்டனுக்கு இக்காரணம் பற்றிய ஒரு தெளிவு உறுதியாக இருக்க வேண்டுமென்று உய்த்துணர முடிகின்றது.

இராமன் காடு புகுந்ததை அறிந்த பாரத்துவாசன் இராமனை நோக்கி, மணங்கொண்டபின்னர் அரசேற்று வாழாது தவவேடம் பூணக் காரணம் என்ன என்று கேட்கின்ருன். அவனுக்கு நடந்ததனைத்தையும் இலக்குவன் கூறுகின்ருன். அதனைச் செவி மடுத்த பாரத்துவாசன் 'விதிதரு நவை' என்கின்ருன். இவனும் அன்று இராமன் இலக்குவனிடம் கூறியது போன்றே விதி தந்த குற்றம் என்கின்ருன். அப்படிச் சொன்ன பாரத்துவாசனும் விதி எது என்ருே, அதன்வழி வந்த நவை எது என்ருே விளக்காமல் உலகியல் தத்துவம் கூறுவானைப்போல,

> ''அல்லலும் உள இன்பம் அணுகலும் உள அன்ருே
> நல்லவும் உள செய்யும் நவைகளும் உள அந்தோ
> இல்லை ஓர் பயன் நான் இன்று இடர் உறும் இதின்''
>
> (அயோ. வனம்புகு. 2114)

என்கின்ருன்.

உலகில் வாழ்கின்றவர்கள் உலகிலுள்ள நன்மை தீமைகளைத் தாம் செய்யும் நல்லது அல்லதற்கேற்ப நுகர்வது இயற்கை. நல்லது செய்வதில் அல்லதும் புகுவதுண்டு இராமன்

இன்று இத்தகைய இடர் உறுவதற்கு நல்லது செய்வுழி இயற்றிய நவையால் ஆனமையால் அதற்கு நோதலில் பயன் இல்லை என்று கூறி, இராமனை இனிது தழுவி உடன்கொண்டு தன் உறையுள் புகுகின்றான். பாரத்துவாசன் விதி தரு நவை என்பதைத் தெளிவாக்கினாலும் அது எது என்பதை இவனும் விளக்கி மொழிந்தானல்லன்.

---

## 15. பரதனின் பரிவுஞ் சினமும்

தயரதன் இறந்த பின்னர் பரதனை ஓலைவழித் தருவிக்கின்றனர். அவன் அயோத்தி புகும்போது அயோத்தி பொலிவற்றுக் கிடப்பதைக் கண்டு ஏதோ ஏதம் புகுந்ததாக உணர்ந்து அரண்மனை புகுகின்றான். வந்தவன் தாயை வணங்க, அவள் மகனைத் தழுவி

''*தீதிலர் எந்தை என் ஐயர் எங்கையர்?*''

(அயோ. பள்ளிபடைப் 2232)

என்கின்றாள். அது கேட்ட பரதன் 'ஆம்' என்று ஒரு சொல்லால் விடையளித்து, அரசன் எங்குளான்? என்கின்றான். அதற்கு அவள் அழிவில் சிந்தையளாகி,

''*தானவர் வலிதவ நிமிர்ந்த தானையத்*
*தேனமர் தெரியலான் தேவர் கைதொழ*
*வானகம் எய்தினான் வருந்தல் நீ...*''

(அயோ. பள்ளிபடைப். 2234)

என்று கூறுகின்றாள். தந்தையின் இறப்பிற்கு வருந்தாதே என்கின்றாள்.

அது கேட்டுப் பெருந்துயர் கொண்ட பரதன் தந்தை இறப்பிற்குப் பலவாறு புலம்புகின்றான். அப்புலம்பலில்,

''ஏழ் உயர் மத களிற்று இறைவ ஏகினை
வாழிய கரியவன் வறியன் கையென
பாழியம் புயத்துநின் பணியின் நீங்கலா
ஆழியை இனி அவற்கு அளிக்க எண்ணியோ''

என்றும்,

''பற்றிலை தவத்தினில் பயந்த மைந்தற்கு
முற்றுலகு அளித்து அது முறையின் எய்திய
கொற்றவன் முடிமணக் கோலம் காணவும்
பெற்றிலை போலும் நின் பெரிய கண்களால்

( .......... 2245—46 )

என்றும் பேசுகின்ருன்.

இராமன் முடிபுனைதற்கு உரியன் என்பதும் அன்னுனுக்குத் தான் இறந்தால் தான் முடி உரியதாகும் என்பதும் கருதித் தயரதன் உயிர் துறந்தானே என்றும், இராமனின் முடிபுனை விழாவினைக் காணகில்லாது போய்விட்டானே என்றும் கூறிப் புலம்புகிருன் பரதன்.

இங்கு, இராமனுக்குத் தயரதன் முடிபுனைய முனைந்ததும், அதுவழி நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் அவன் இறந்ததும், இராமன் காடு புக்கதும் அறியாமலேயே பரதன் பேசுகின்ருன். தயரதன் இறந்த பின்னைக் கைகேயி தான் பூண்ட கைம்மைக் கோலத்திற்குத் தன் மகன் பரதனுடன் துன்பம் பரிமாறிக்கொள்ளாமல் 'வருந்தல் நீ' என்றதால் அவளிடம் தன் துன்பத்தைப் பகிர்ந்து கொள்ள முடியாது என்று கருதிய பரதன், அண்ணன் இராமனைக் காணச் செல்கின்ருன். அவ்வாறு செல்ல இருந்தவனிடம் கைகேயி,

''தெவ்வடு சிலையினுய் தேவி தம்பி என்று
இவ்விருவரொடும் கானத்தான்...''

(அயோ. பள்ளிபடைப். 2249)

என்று கூறுகின்ருள். இதுகேட்டு மேலும் சிந்தை யழிந்த பரதன், இராமன் வனம் செல்வதற்கு அவன் செய்த குற்றம் என்ன என்பதை,

*"பூங்கழல் காவலன் வனத்துப் போயது*
*தீங்கிழைத்த அதனினே? தெய்வம் சீறியோ*
*ஓங்கிய விதியினே? யாதினே?......"*

(அயோ. பள்ளிப்படைப். 2251)

என்று பல காரணங்களைக் கூறிக் கேட்டதோடு, இராமன் தீயது புரிந்து காடு புகுந்திருந்தால் அது உலகவர்க்கெல்லாம் எடுத்துக்காட்டத்தக்க குற்றமாகிவிடுமே என்று நொந்து, தந்தை விண்புக்க பின்னரா? அன்றி முன்னரா? இராமன் காடு போயது என்று கேட்கின்ருன்.

அது கேட்ட கைகேயி, இராமன் செய்த குற்றங்கள் இன்னின்ன அல்ல என்று குற்றங்களை அடுக்கிக் கூறுகின்ருள்.

*"குருக்களை இகழ்தலின் அன்று முற்றிய*
*செருக்கினுல் அன்று ஒரு தெய்வத்தாலும் அன்று*
*அருக்கனே அனைய அவ்வரசர் கோமகன்*
*இருக்கவே வனத்து அவன் ஏகினுன்......"*

( ... ... ... 2253)

என்கின்ருள்.

அது கேட்ட பரதன், இராமன் குற்றம் ஒன்றும் இயற்ருது பகையொருவர் இருந்து பகைக்காது, தெய்வம் சீருது தந்தை இருக்கவும் கான் புக்கான் என்ருல் அதற்குரிய காரணத்தைத் தெளிவாக்க வேண்டுகின்ருன். அதற்குக் கைகேயி,

*"வாக்கினுல் வரந்தரக் கொண்டு மைந்தனைப்*
*போக்கினேன் வனத்திடைப் போக்கிப் பார் உனக்கு*
*ஆக்கினேன் அவன் அது பொறுக்க லாமையால்*
*நீக்கினுன் தன் உயிர் நேமி வேந்து ............"*

( ... ... ... 2255 )

என்கின்ருன்.

இங்குக் கைகேயி தான் பெற்ற வரத்தால் இராமனைக் காட்டிற்கு அனுப்பி விட்டுப் பரதனுக்கு நிலத்தைத் தன் வாக்கினால் பெற்று அளித்ததாகவும், அதனைப் பொறுக்க மாட்டாத தயரதன் தன் உயிரைப் போக்கிக் கொண்டு விட்டான் என்பதாகவும் ஒரு சிறு துளக்கமும் கலக்கமும் இன்றிக் கூறுகின்றாள்.

இங்குப் பரதன் தொடர்ந்து கேள்விகளைக் கேட்டுக் கொண்டே வந்ததுபோல வரத்தால் மைந்தனை வனத்திடைப் போக்கற்குக் காரணம் என்ன என்றும், மூத்தவனுக்கு முறைமையாக உரிய பாரினைத் தனக்கு முறைதப்பி ஆக்கக் காரணம் என்ன என்றும் அவளைக் கேட்டிருந்தால், நெடுநாள் பலருக்குப் புரியாத புதிர் போன்ற காரணம் புலப்பட்டிருக்கும். ஆனால், பரதன் கேட்கும் கேள்விகளை நிறுத்திவிட்டுப் பெருஞ் சினம் கொண்டு தாயென்று கூடக் கருதாது அவளைக் கொல்லத் துணிகின்றான். ஆயினும், தான் அவளைக் கொன்று விட்டால் இராமன் அதனை அறிந்து தன்னைக் கடிவான் என்று அஞ்சி வாளா ஒழிவதாகக் கூறுகின்றான்.

பின்னர் பரதன் தன் தாயைப் பலவாறு கடிந்துரைக் கின்றான். அக்கடிந்துரையில் தந்தை ஈந்த வரத்திற்கு மாறுபட நடப்பது இழுக்கென்று இறக்க, தந்தை சொல் போற்றல் அறம் என்று இராமன் அரசு துறக்க, அவனோடு பிறந்த தான் தாய் சூழ்ச்சியால் பெற்ற அரசினை ஏற்று வாழ்வது எங்ஙனம் என்று கேட்டுக் கலங்குகின்றான். கலங்கியவன், தான் அரசேற்றால் அதனைப் பாரோர் கொள்ளார் என்றும், அதுவழி தனக்குப் பழிவரும் என்றும் கருதித் தான் துறவியாகித் தவம் இயற்றப் போவதாகக் கூறிக் கோசலையைக் காணச் செல் கின்றான்.

பரதன் கைகேயி செய்த செயல் வஞ்சம் உடையது என்று துணிந்தானேயன்றி அதற்குரிய காரணத்தை அவளிடம்

கேட்டுத் தெளிந்தானல்லன். இத்தெளிவிலா மனத்தன் கோசலையைக் காணச் செல்கின்ருன். கோசலையும் இவன் நினைத்தது போலக் கைகேயி வஞ்சனை செய்த து பரதனுக்குத் தெரியாதோ என்று கேட்டு அதனை உறுதிப் படுத்தினளேயன்றி அதற்குரிய காரணம் என்னவென்று அவனோடு இணைந்து ஆய்ந்தாளல்லள்.

---

## 16. இடரிலா முகத்தில் ஓரிடர்

தயரதனுக்கு உரித்தாய ஈமக்கடன்கள் நிறைவேறப் பெற்றதும், சுமந்திரன் வசிட்டன் முதலியோர் பரதனைஅரசியற் பொறுப்பை ஏற்று நடாத்துமாறு வேண்டுகின்றனர். அவன் அவர்கள் கூற்றைப் புறக்கணித்து, இராமனை அழைத்து வரக் காட்டிற்குச் செல்லப் போவதாகக் கூறுகின்ருன். தன் அண்ணன் இராமனைப் போன்றே பரதனும் சீரை அணிந்து தேர் இவர்ந்து புறப்பட்டுச் செல்லுங்காலே, கூட்டத்தினரி டையே கூனியைக் கண்ட சத்துருக்கனன் அவளைக் கொல்ல முற்பட, பரதன் அவனைத் தடுத்து நிறுத்துகின்ருன். எல்லோரும் கங்கைக் கரையை அடைகின்றனர்.

கங்கைக் கரையில் பரதன் குகனுக்குத் தன் தாயரை அறிமுகம் செய்கின்ருன். அப்பொழுது அவன், கைகேயிபால் நின்ற சினம் அடங்காதவனுய் அவள் கொடுமை செய்து விட்டாள், அதன் விளைவால் வந்த துன்பங்கள் இவையெல்லாம் என்று கருதி,

"படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்கும்
  செவிலியைத் தன் பாழ்த்த பாவிக்
குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கும்
  உயிர்ப்பாரக் குறைந்து தேய
உடரெலாம் உயிரிலா எனத்தோன்றும்
  உலகத்தே ஒருத்தி அன்றே
இடரிலா முகத்தாளை அறிந்திலேயேல்
  இங்நின்ருள் என்னை ஈன்ருள்"

(அயோ, குகப், 2459)

என்று கூறுகின்ருன்.

இங்குக் கைகேயி இடரிலா முகத்தளாக இருப்பதைச் சுட்டிக் காட்டுகின்ருன் பரதன். கணவன் இறந்த செய்தியைக் கூறியபோது பரதனிடம் 'வருந்தல் நீ' என்றவள் ஆண்டும் வருந்தாதிருக்கக் கண்டவன் அதே வருத்தமிலாக் காட்சியை ஈண்டும் காணுகின்ருன். இராமனுக்கு இருந்த ஆட்சியைத் தன் மகன் பரதனுக்கு ஆக்கிவிட்டோம் என்ற கருத்தில் மகிழ்ந்தாளா என்ருல் ஆண்டு மகிழ்ச்சியையும் காணேம். அங்ஙனமே மாற்றவள் ஈன்ற மகனை வனம் போக்கிய செயல் கண்டாயினும் மகிழ்ந்தாளா என்ருல் அதுவும் இல்லை. தன் தந்தைக்குப் பகைவனுக இராமன் முடி சூட இருந்ததைத் தவிர்த்த செயலுக்காயினும் மகிழ்ந்தாளா என்ருல் அவ்வாறு மகிழவுமில்லை. தான் நினைத்ததை நிறைவேற்றிவிட்டோம் என்று களித்தாளா என்ருல் அதுவுமில்லை. கணவன் இறந்தானே என்று கையற்ருளா அன்றிக் கலுழ்ந்தாளா என்ருல் அதுவும் இல்லை. பரதன் நாட்டாட்சியைப் புறக் கணித்தது கண்டு கவன்ருளா என்ருல் அதுவும் இல்லை.

பரதனேடு கோசலை முதலிய தயரதன் மனைவியர் அறுபதினுயிரவரோடு ஊரழுது, உலகழுது, பூசையழுது, கிள்ளையழுது, ஆவழுது, கன்றழுது உருவறியாப் பிள்ளையும் அழுது, அரற்றிப் புலம்பிப் பொருமி விம்மி வெய்துற்று நிற்கக்

கண்டும் கைகேயி கையாறு கொண்டு கண்ணீர் உகுத்தாளா என்ருல் முற்றிலும் இல்லே. முடி சூடவேண்டிய பரதன் தன்னேக் கடிந்துரைத்ததற்கு அழுங்கிஞளுமல்லள். பரதன் விரத வேடம் பூண்டு இராமனே அழைக்கச் சென்றபோது அதுபற்றி ஓர் அவலம் பட்டு ஓர் இடருடை முகத்தளாக இருந்தாளா என்ருல் அதுவுமில்லே. இவ்வாறு ஒருத்தித் துன்புற வேண்டியதற்குத் துன்புருமலும், இன்புற வேண்டிய தற்கு இன்புருமலும் இருதிறமும் அகன்ற ஒரு நிலேயினேக் கொள்ளுவாளேயாஞல் அதற்கு உரிய அடிப்படைக் காரணத்தை ஆய்ந்தாலன்றி அவள் பண்பினே முடிவுறக் கூறவொண்ணுது.

கைகேயியை இடரிலா முகத்தளாகக் கண்ட பரதனுவது அவள் அவ்வாறு இருக்கக் காரணம் என்னவென்று ஆய்ந் திருக்கவேண்டும். அவன் ஆயவில்லே என்ருலும் குகனுவது அவனேக் காரணம் கேட்டிருக்கலாம். அவனும் வாளாவிருந்து விடுகின்ருன்.

பின்னர் இராமனேக் காணப் பரதன் வருகின்ருன். அவன் படையோடு வருவதைக் கண்ட இலக்குவன் விரதம் பூண்ட பின்னும் இராமனுக்குக் கொடுமை செய்ய அவன் வருவதாகச் சினக்கின்ருன். இங்கு இலக்குவன் கைகேயியை மீண்டும் இழிவாகப் பேசுகின்ருன். அப்பேச்சில்,

''வையகம் துறந்து வந்து அடவி வைகுதல்
எய்தியது உனக்கு என நின்னே ஈன்றவள்
நைதல் கண்டு உவந்தவள் நவையின் ஓங்கிய
கைகயன் மகள் ... ... ... ... ... ... ... ...

(அயோ. திருவடிசூட்டு 2503)

என்று அன்று இராமன் காட்டிற்குச் செல்வது குறித்துக் கவன்று கோசலே அழுததைக் கண்டு உவந்தவள் இக்கைகேயி என்கின்ருன்.

இலக்குவன் இயல்பில் காழ்த்த சினங்கொண்டவன். இராமன்பால் அவன் கொண்ட முதிர்ந்த அன்பால் கைகேயி விருப்பு வெறுப்பற்றிருந்த ஒரு நிலையைத் தெளிவாக அறிந்து உரைத்தான் என்று கோடற்கில்லை. இராமன் காட்டிற்குச் செல்ல, அதுபற்றிக் கலுழ்ந்த கோசலையைக் கண்டு கைகேயி உவந்தாள் என்றால், அவள் உவந்த நேரத்து அவளும் கணவனை இழந்த ஓர் அவல நிலைக்கு உள்ளானவள் என்பதை மறத்தற்கில்லை. தயரதன் இறப்பிற்கும் அழாதவள் இராமன் மேற்கொண்ட செலவிற்கும் அழாதவளாகின்றாள். இந்த நடுநிலைச் சுவை தாங்கிய கைகேயியோடும் மற்றைய தாயரோடும் சென்று இராமனைக் காணுகின்றான் பரதன்.

ஆண்டுத் தந்தை இறந்த செய்தியைக் கேட்டு இராமன் அரற்றித் தந்தைக்கு நீர்க்கடன் செய்து தாயரை வந்து வணங்குகின்றான். வணங்கியவன் தாயரை நோக்கி 'எந்தை யாண்டையான் இயம்புவீர்' என்று கேட்டுத் தாயர்தம் திருவடியில் கண்ணீர் உகுத்தபோது தாயர் அனைவரும் அவனைத் தழுவிக்கொண்டு அழுகின்றனர். அவ்வாறு அழுதாருள் கைகேயியும் ஒருத்தியே.

*''தாயரும் தலைப்பெய்து தாம் தழீஇ*
*ஒய்வு இல் துன்பினால் உரறல் ஓங்கினார்*
*ஆய சேனையும் அணங்கு அனார்களும்*
*தீயில் வீழ்ந்து தீ மெழுகின் தேம்பினார்''*

(அயோ. திருவடிசூட்டு 2554)

இதுகாறும் அழாத கைகேயி இங்கு இராமனைக்கண்டு அழுகின்றாள் என்றால் இவ்வழுகையிடத்து நின்ற பொருள் ஒன்று உண்டு. அது தயரதன் இறப்பிற்கு இராமனோடு தான் துன்பம் பகிர்ந்து கொண்டு அழமாட்டாமை நோக்கி அழுதது.

# 17. இராமனுக்குத் தந்த காட்டாட்சி

காட்டாட்சிப் பணியைத் தலைமேற்கொண்டு காடு புகுந்த இராமனிடம் முனிவர்கள் அரக்கர்கள் செய்யும் கொடுமைகளைக் கூறுகின்றனர். அதன் விளைவாகத் தாங்கள் அறநெறியும் தவநெறியும் ஒழுக்கநெறியும் பேண முடியாததை விளக்குகின்றனர். தங்களைக் காத்தற்குரிய இந்திரன் கூட அரக்கர்கள் ஏயினவற்றைச் சிந்தையில், செய்கையில் கொள்ளும் இயல்பினன் என்று கூறி உலகை ஓம்பிய தயரதன் புதல்வர் களாகிய அவர்களிடம் அடைக்கலம் புகுகின்றனர். அப்பொழுது இராமன்,

''புகல் புகுந்திலரேல் புறத்து அண்டத்தின்
அகல்வரேனும் என் அம்பொடு வீழ்வரால்
தகவுஇல் துன்பம் தவிருதிர் நீர்........"

(ஆர. அகத். 2738)

என்று கூறி அவர்களுக்கு ஓம்படை தந்ததோடு,

''வேந்தன் வீயவும் யாய் துயர் மேவவும்
ஏந்தல் எம்பி வருந்தவும் என்னகர்
மாந்தர் வன்துயர் கூரவும் யான் வனம்
போந்தது என்னுடைப் புண்ணியத்தால்...."

(.....2739)

என்கின்றான்.

இங்கு இராமன், தந்தை இறந்ததும் தாய் கைகேயி பெருந்துயர் கொண்டிருப்பதும் தம்பி பரதன் துன்பத்து உழப்பதும் செய்யத், தான் வனம் புக நேர்ந்தது தான் செய்த புண்ணியம் காரணமாக என்று கூறிக் களி கூர்கின்றான். இங்குத் தாயும் தந்தையும் ஏவிய ஏவல், அன்று கோசிக முனிவன் பின்

தயரதன் ஏவப் போந்து, அரக்கர்களைக் கொன்று வேள்வி காத்து முனிவனுடைய ஆசியையும் படைக்கலம் முதலிய வற்றையும் பெற்றதைப் போன்று இன் று முனிவர்கள் அடைக்கலம் புக அவர்கட்கு உதவுவதாகக் கூறி ஏன்ற தொழிலில் வரும் இன்பம் நினைத்து இதுவும், தான் செய்த புண்ணியப் பேற்றின் காரணமாகக் கிடைத்தது என்று களி கொள்கின்றான். தா ய் , தந்தை, தம்பி, ஊரவர், அத்துணையோரும் துன்பத்தை ஏற்றுக்கொண்டு தனக்குப் புண்ணியப் பேறடைய வழிவகுத்ததை நினைத்து இறும்பூ தடைகின்றான்.

*''சூர் அறுத்தவனும் சுடர் நேமியும்*
*ஊர் அறுத்த ஒருவனும் ஓம்பினும்*
*ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர்*
*வேர் அறுப்பென் வெருவன்மின் நீர் என்றான்''*

(ஆர. அகத். 2743)

இவ்வாறு பத்து ஆண்டுகள் அவர்கள் இன்னல் காத்து மாதவர் பாதம் தொழுது அருளாட்சி புரிகின்றான். இவ்வாட்சி தவவேடத்தில் நடக்கின்றது. இதுதான் தாங்கரும் தவம்.

*'' இந்திரன் எனில் அவன் அரக்கர் ஏயின*
*சிந்தையில் சென்னியில் கொள்ளும் செய்கையான்*
*எந்தை, மற்று யாருளர் இடுக்கண் நீக்குவார்''*

(ஆர அகத். 2736)

என்று அஞ்சிக்கிடந்து காப்பு வேண்டிய முனிவர்களைப் பத்து ஆண்டுகள் தன் தவத்தோடு அவர் தவமும் தடை படாவகை தன் தகுதியால் காத்தது உணரலாம்.

இவ்வருளாட்சி இதோடு முற்றுப் பெறவில்லை என்று கருதிய முனிவர்கள் இ ரா ம னை அகத்தியன்பால் உய்க் கின்றனர். அகத்தியனை நோக்கிச் செல்லும் இராமனைக் கண்ட சுதீக்கணமுனிவன்,

"அவமிலா விருந்தாகி என்ஞல் அமை
தவமெலாம் கொள்க தக்கனையாய்"

(ஆர. அகத், 2752)

என்கின்ருன். இங்கு இராமன் தாயிடம், கோசிகமுனிவனுக்குத் தொண்டு செய்து விஞ்சையும் ஆசியும் பெற்றதோடன்றி,

"மாதவர்க்கு வழிபாடிழைத்து அரும்
போதம் முற்றிப் பொருவரு விஞ்சைகள்
ஏதம் அற்றன தாங்கி இமையவர்
காதல் பெற்று இந்நகர் வரக் காண்டியால்"

[அயோ. ந. நீ. 1717)

என்று கூறியதில் முனிவர்கள் ஆசியும் சுதீக்கண முனிவன் தவமும் பெற்ற அளவில் கைகேயி இட்ட பணியில் ஒரு பகுதி முடிவு பெறுவதைக் காணலாம்.

அடுத்து அகத்தியனைக் காண்கின்ருன் இராமன். அப்பொழுது அகத்தியன் இராமன் புரிகின்ற அருளாட்சியைச் சுட்டி,

"இருந்தவம் இழைத்த எனது இல்லிடையின் வந்து என்
அருந்தவம் முடித்தனை அருட்கு அரச ... ... ..."

(ஆர. அகத். 2770)

என்று இராமனை விளிப்பதைக் கொண்டறியலாம். இராமன் வந்த காரியம் தாங்கரும் தவமேற்கொள்ள என்பதை அகத்தியன் உணர்வான். அதனுல் அவன் இராமனிடம்,

"ஈண்டுறைதி ஐய இனி இவ்வயின் இருந்தால்
வேண்டியன மாதவம் விரும்பினை முடிப்பாய்
தூண்டு சின வாழ்நிருதர் தோன்றியுளர் என்ருல்
மாண்டு உக மலைந்து எமர் மனத்துயர் துடைப்பாய்"

(ஆர. அகத். 2773)

என்கின்ருன். இங்கு அகத்தியன் இராமன் புரியும் தவமும் அருளாட்சியும் இன்னது என்று விளக்கிக் கூறுகின்ருன். முனிவன் புரிகின்ற வேள்வி நலிவிப்பதோ வேறுள தீமைகள் புரிவதோ அரக்கர் செய்யின் தான் அருளாட்சி புரிந்து காக்க இருப்பதை இராமனும்,

"செருக்கு அடை'அரக்கர்புரி தீமை சிதைவெய்தத்
தருக்கு அழிதரக் கடிது கொல்வது சமைந்தேன்
வருக்க மறையோய் அவர் வரும் திசையில் முந்துற்று
இருக்கை நலம் நிற்கு அருள்..........."

(ஆர அகத். 2775)

என்று இராமன் கேட்கின்றான். அகத்தியனுக்குத் தான் புரிய வேண்டிய அருளாட்சி இதற்கு மேல் ஏதேனும் உண்டாயின் கூறுக என்கின்றான். அது கேட்ட அகத்தியன்,

"விழுமியது சொற்றனை இவ்வில் இது இவண் மேல்நாள்
முழு முதல்வன்வைத்துளது மூவுலகும் யானும்
வழிபட இருப்பது இது தன்னை வடிவாளிக்
குழுவழுவில் புட்டிலொடு கோடி"

(ஆர. அகத். 2776)

என்று கொடுத்து சிவன் முப்புரம் எரித்த தனி மொய்க்கணையும் தந்து அருளாட்சி புரிய அனுப்புகின்றான். இங்கு இனிச் செய்ய வேண்டிய அருளாட்சிக்கு வேண்டப்படும் கருவி கரணங்கள் எவை என்பது போதரும்.

இவற்றோடு வந்த இராமன் சடாயுவைக் காண்கின்றான். அவனிடம் உறவு கொண்டாடித் தாம் அகத்தியன் கூறிய இடத்திற்குப் போவதைக் குறிப்பிடும்போது,

"பெரிதும் நன்று அப்பெருந்துறைவைகி நீர்
புரிதிர் மாதவம் போதுமின் யானது
தெரிவுறுத்துவென்............."

(ஆர. சடாயு காண். 2826)

என்று கூறிப் போகின்றான். இந்தச் சடாயு கூறியவண்ணம் இராம இலக்குவர்கள் அருளாட்சியில் தலைப்பட்டு அரக்கரை எதிர் நோக்குவதும் தாம் மேற்கொண்ட தவமியற்றுவதும் காணலாம்.

பஞ்சவடியில் தங்கியிருக்கும்போது அங்கு வந்த சூர்ப்பணகை இராமனைக் கண்டு அவன் அழகில் ஈடுபட்டுக் காமுற்றுத் தானும் அழகிய கோலங் கொண்டு அவன் முன் வருகின்றாள். இராமன் அவளோடு உரையாடிக்கொண்டிருக் கையில் அங்கு வந்த சீதையைக் காண்கின்றாள் சூர்ப்பணகை. தன்னின் அழகுடைய அவள்ஆண்டிருந்தால் இராமன் தன்னைக் காமுறான் என்று கருதிச் சீதையை இராமன் இல்லாதபோது கவர்ந்து செல்ல முனைந்தகாலை அங்கே இலக்குவன் தலைப் பட்டு சூர்ப்பணகையினை உறுப்பறை கொள்ளுகின்றான். சூர்ப்பணகை இராமனிடம் சென்று முறையிட அவன் நடத்தது கேட்டு அவளிடம்,

*'நாடறியாத் துயர் இழைத்த நவை அரக்கி*
*நின் அன்னை தன்னை நல்கும்*
**தாடகை உயிர் கவர்ந்த சரம் இருந்தது**
**அன்றியும் நான் தவம் மேற்கொண்டு**
**தோள் தகைய துறுமலர்த்தார் இகல் அரக்கர்**
**குலம் தொலைப்பான் தோன்றி நின்றேன்**
**போடகலப்புல் ஒழுக்கை வல் அரக்கி ...........''**

(ஆர. சூர்ப்பணகை. 2963)

என்று வெகுண்டுரைக்கின்றான்.

முன்பு கோசிக முனிவன் பணியினால் தாடகையை வதைத்தவனுக்கு இங்கு அகத்தியன் முதலிய முனிவர்கள் வேண்டுகோளால் அரக்கரை எதிர்நோக்கி நிற்கும்போது முதலில் எதிர்ப்பட்டவளும்ஒரு பெண்ணே. அன்று தாடகை வன்மை விளைத்து வெளிப்பட்டாள். ஆனால் இங்கு இவள் மென்மை விளைத்து வெளிப்படுகின்றாள். இங்கு இராமனுக்கு இவள்பால் சினஞ்சிறக்கவில்லை. அவள் சீதையைக் கவர முற்பட்டதால் ஆண்டு இலக்குவனுக்குச் சீற்றம் சிறந்தது. ஆனாலும் அவன் அவளைக் கொன்றானல்லன். அவள் உறுப்பு களைச் சிதைத்ததோடு விட்டான்.

இங்கு இராமன் தான் அரக்கர் குலம் தொலேக்க அன்று முற்பட்டுத் தாடகை முதலியவரைக் கொன்ற அம்பு கையில் இருப்பதால் இவள், மேலும் நின்று சொல்வழிப் போகாது ஊறு விளைப்பாளேயானுல் இவளேயும் கொன்று விடுவதாகவும் தான் அதற்கென்றே தவமேற்கொண்டு வந்ததாகவும் கூறுகின்ருன். இராமன் காடு புகுந்தது தவம் செய்தற்கும் அரக்கர்களேத் தொலேத்தற்கும் என்பது இங்கு வெளியாகும் செய்தி. இராமனுக்குக் கைகேயி வாயால் இட்ட பணியாகக் காட்டாட்சி அமைகின்றது. அக்காட்டாட்சி அவன் அரக்கர்களே அழித்து முனிவர் முதலியோரை அறநெறி நிறுத்தத் துணே புரியும் அருளாட்சியாகத் திகழ்ந்தது.

இவற்றையெல்லாம் நுணுகி நோக்கிஞல் கைகேயி இராமனேக் காடாள வேண்டுமென்று வரமாகக் கேட்ட நுட்பம் புரியும். அயோத்தியில் வாழ்ந்த தயரதன் முதல் பரதன் ஈருகக் கைகேயி கொடுமை செய்ததாகக் கடிந்துரைத்து இகழ, இராமன் அவள் கூற்றைத் தான் பெற்ற பேருக நினேந்ததும் அதனேத் துண்டமதி வைத்தவனே ஒத்த அகத்தியன் ஈருக அனேத்து முனிவர்களும் போற்றியதையும் காணும்போது கைகேயியின் பண்பாட்டை அளப்பது மனிதத் தரத்தில் உள்ளாராலும், உலகியலாரோடு தலேப்பட்ட வசிட்டன் போன்ற முனிவர் தரத்தில் உள்ளாராலும் கணித்தற்கியலாது என்பது போதரும். ஆனுல் உலகியற் பற்றற்ற முனிவர்களே அறிகின்றனர்.

இங்கு இராமனேக் காடாள அனுப்பிய கைகேயியின் செயல் எல்லேப்பட்ட அறிவுடைய உலகியலார்க்கும், அவரோடு இயைந்து வாழும் இருடிகள் முதலாயினுர்க்கும் குறையுடைய தாகவும் கேடு சூழ்ந்ததாகவும் தோன்றுவது இயற்கை. ஆனுல், மனித இயல்பை மெய்யுணர்வால் மாற்றிய பெரியார்கட்கு

அரிய செயலாகவும் நிறையுடைச் செயலாகவும் தோன்றும்.

ஒரு செயலின் நன்மை தீமைகள் அவற்றை இயற்றும் முறையையும் வழியையும் கொண்டு கூறுவதினும் இறுதிப் பயன் கண்டு கூறுவதே நெறி.

*'பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரை தீர்ந்த*
*நன்மை பயக்கு மெனின்'*

என்பது போல் கைகேயி நாடாள இருந்த இராமனைக் காடாளச் செய்து விட்டாளே என்று அவள் மேல் பழி சுமத்தினலும் இறுதியில் அவள் மேற்கொண்ட செயல் பழி பூண்டு புகழ் விளைத்ததாகின்றது.

சேரலாதன் அவையில் சோதிடன் மூத்தவன் செங்குட்டு வனைவிட இளையவன் இளங்கோவிற்குத் திருப்பொறி உண்டென்பதைக் கேட்டு இளங்கோ துணுக்குற்ருர். சோதிடன் கூற்று அவையோர்க்கு மருட்கையும் வெறுப்பும் தந்தது. செங்குட்டுவனுக்குச் சினத்தை மூட்டியது. ஆனல் அம்மொழி ஒருவாறு மெய் மொழியாகிப் பெரும் பயன் விளைத் ததைக் காணலாம். சேரலாதன் சோதிடன் பேச்சிற் கிணங்கி இளங்கோவை அரசனுக்கியிருந்தால் அவர் இளங்கோவடி களாகியிருக்க முடியாது. அவரும் சோதிடன் கூற்றை மெய்யாக்கு முறையில் சற்று மேம்பட்டுச்,

*''சிந்தை செல்லா சேணெடுந்தூரத்து*
*அந்தமில் இன்பத்து அரசாள் வேந்து''*

ஆக விளங்கி இருக்கமுடியாது. இளங்கோவடிகட்கு இருந்த பெருமையை முன்னறிந்துரைத்தான் கணி. இங்குக் கைகேயி கொண்ட உணர்வும் அதன் வழிப் பிறந்த பிடிவாதமும்

கணியன் போன்று கணித்துக் கொண்டதே. இறுதியில் பரத்துவாச முனிவன் இராமன் காடாண்டு நடத்திய அருளாட்சியைக் குறிப்பிடும்போது,

*“விராதனும் கரனும் மானும் விறல் கெழு கவந்தன் தானும்*
*மராமரம் ஏழும் வாலி மார்பமும் மகர நீரும்*
*இராவணன் உரமும் கும்பகருணனது ஏற்றம்தானும்*
*அராவரும் பகழியொன்றால் அழித்து உலகளித்தாய் ஐய”*

(யுத். மீட்சிப். 10286)

என்று அழித்து வீடளித்த செய்தியைக் குறிப்பிடுகின்றான். இங்கு இராமன் புரிந்த அருளாட்சியில் கருணை மறம் காட்டி வீடளித்த பெற்றியைக் காணலாம்.

தீயோரை அழித்து நல்லோரைக் காத்தல் என்பது ஒரு புடை அரக்கர் தீயோர்தம் அழிப்பும், முனிவர் இந்திரன் முதலியோர் காப்பும் ஆகும் என்றாலும் மேற் குறித்த விராதன் முதல் இராவணன் வரையிலுள்ள சாபக் கேடும் வரச்செருக்கும் படைத்த அனைவர்க்கும் மறக்கருணை புரிந்ததை நோக்கும் போது கைகேயி தயரதன்பால் கேட்ட வரத்தால் இராமனைக் காடாளச் செய்தது அருளாட்சியின் திறத்தாலாகுமேயன்றி எல்லைப்பட்ட அறிவுடைய உலகத்தார் வழங்கும் பழியால் ஆனதன்று. கைகேயியை உள்ளவாறு உணர்ந்தவன் இராமன். அவள் தனக்குப் பணித்த காட்டாட்சியில் பெரும் பொருள் உண்டென்பதைக் கூறுமுன் உணர்ந்து கொள்கின்றான். தாய் சொல்லாகட்டும் தந்தை ஆணையாகட்டும் இருவரும் தனக்கு நன்மையே புரிகின்றனர் என்ற கருத்தில் அவன் மாறுபட்டதில்லை.

---

# 18. இராமன் அஞ்சியது

இராமன் கூறிய வண்ணம் சூர்ப்பனகை அவ்விடத்தினின்றும் அகன்று சென்று கரன் முதலிய வீரர்களை இராமன் பால் போருக்கு ஏவுகின்றாள். இராமன் அவர்களை முழுத்தம் ஒன்றில் முடிக்கின்றான். இதன் பிறகு அரக்கர் குலம் வேரறுப்பான் என்ற இராமனுக்கு, அப்பணியில் அவனுக்கு ஒருவாறு உறுதுணை புரியும் முறையில் கருவியாகின்றாள் சூர்ப்பனகை. இராவணன் திசை வெற்றி மேற்கொண்ட காலத்து அவன் தன் கணவனைக்கொன்றுவிட்ட பகைமையை உன்னித் தானும் இராவணன் முதலிய அரக்கர் குலத்தாரை முற்றிலும் முடிக்க முடிவெடுக்கின்றாள். அதனால்,

''ஆக்கினேன் மனத்து ஆசை அவ் ஆசை என்
மூக்கினோடு முடிய முடித்திலேன்
வாக்கினால் உங்கள் வாழ்வையும் நாளையும்
போக்கினேன் கொடியேன் ... ... ...''

(ஆர. கரன்வதைப் 3162)

என்று சூளுரைத்துவிட்டு இலங்கைக்கு ஏகுகின்றாள்.

இங்குக் கைகேயி இராமனைக் காட்டிற்கு அனுப்பிய காரணத்தின் செயற்பாடு தொடங்கத் தலைப்பட்டதைக் காணலாம். சூர்ப்பனகை இலங்கைக்குக் கடிது ஓடி, இராவணனிடம் சீதையைப் பற்றிக் கூறி அவளை அவன் காணுமுன்னம் காமுறச் செய்து அவன் இதயச் சிறையில் அடைத்து வைத்தற்குரிய எல்லாம் செய்து விடுகின்றாள். அதனைக் கம்பர்,

''மயிலுடைச் சாயலாளை வஞ்சியாமுன்னம் நீண்ட
எயிலுடை இலங்கை நாதன் இதயமாம் சிறையில்
வைத்தான்''

(ஆர. மாரீசன் வதைப் 3248)

என்பர்.

இதன் விளைவாக மாரீசன் மானுக மாயம் செய்ய, இராவணன் சீதையை நிலத்தோடு பெயர்த்துத் தன் தேரிடை வைத்து இலங்கைக்குச் செல்லுகின்ருன்.

பின்னர் இருவரும் சீதையைத் தேடி வருகின்றனர். அவர்கள் கவந்தன், சபரி என்ற இருவரால் வழிப்படுத்தப் பெற்றுச் சுக்கிரீவனேடு நட்புக் கொண்டு, வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசியலேத் தந்து அறிவுரை கூறிய பின்னர், சுக்கிரீவன் அவ்விருவரையும் கிட்கிந்தைக்கு வந்து தங்குமாறு அழைக்கின்ருன். அப்பொழுது இராமன்,

''வேந்தமை இருக்கை எம்போல் விரதியர் விழைதற்
கொவ்வா''

(கிட். அரசியற் 4238)

என்று கூறி,

''ஏழிரண்டு ஆண்டு யான் போந்து எரிவனத்து இருக்க
ஏன்றேன்"
வாழியாய் அரசர் வைகும் வளநகர் வைகல்ஒல்லேன்"

(கிட். அரசியற் 4239)

என்று தன்னிடம் தயரதன் கூறியதாகக் கைகேயி கூறிய வண்ணம் பூழி வெங்கானத்து ஏழிரண்டு ஆண்டுகள் இருக்க வந்ததை நினைவு படுத்துகின்ருன்.

அதுகாலே தான் ஏற்க இருந்த முடிதுறந்து பதினுன்கு ஆண்டுகள் எரிவனத்து இருக்கத் தான் முன் செய்த பழவினையை நினைக்கின்ருன். அப்பழவினை என்பது யாது?

சீதையை மணந்து அயோத்தி போந்த பின்னர் மணந்தவர் இயற்றும் இல்லறம் செய்ய முடிந்ததா என்ருல் அது கடை போகவில்லே. சீதையோடு வனத்து வைகித் துறவியாக இருந்த காலத்து என்றும் துறவியாகும் இயல்பில் எல்லாம் துறந்தான என்ருல் பதினன்கு ஆண்டுகட்கு மட்டுமே ஒரு துறவுக் கோலம். காட்டில் சீதையோடு வந்தபின் மேற் கொண்ட பதினன்கு ஆண்டைய துறவறம் கடைபோயிற்ரு என்ருல், அதுவும் சீதையை இழந்ததால் நிறைவேறவுமில்லே,

இராமன் வனத்து வந்தபோது அகத்திய முனிவனிடம் அரக்கர்களே ஒழித்து முனிவர்களேக் காப்பதாக அவர்கள் வரும் வழியில்தான் காத்திருக்கப் போவதாகக் கூறி அவனிடம் வில் முதலியனவற்றைப் பெற்றுக்கொண்டவன், தன்னுரிமையாய்த் தன்னேடு போந்த தன் மனேவியை அரக்கன் கவர்வதிலிருந்து தகைக்ககில்லாமையை உன்னி உளேகின்ருன். இல்லறத்தானு மின்றி இல்லறம் துறந்த துறவறத்தாலுமின்றி வாழும் அவல நிலேயைப் பெரிதும் எண்ணுகின்ருன்.

இராம இலக்குவர்கள் சீதையைக் காணுது தேடி வரும் போது இலக்குவன் நீர் வேட்கை தவிர்த்தற் பொருட்டு நீர் தேடிச் சென்ற போது அயோமுகி என்ற அரக்கி இலக்குவனே எதிர்ப்பட்டுக் காமுற்று அவனேத் தன் முழையிடை உய்க்க எடுத்துச் செல்ல, இலக்குவன் அவள் உறுப்பு முதலியவற்றை அறுத்து அச்சுறுத்தித் துரத்திவிட்டு அண்ணனே வந்து காணுகின்ருன். அப்பொழுது இராமன் இலக்குவனே உட் படுத்தி, தீவினேப் பட்ட தாங்கள் அவ்வினே வயம் நேரும் போது துளங்கல் கூடாது என்பதை,

*''ஆய்வுறு பெருங்கடல் அகத்துள் ஏயவன்*
*பாய்திரை வருதொறும் பரியற் பாலனே*
*தீவினேப் பிறவி வெஞ்சிறையிற் பட்ட யாம்*
*நோய் உறு துயர் என நுடங்கல் நோன்மையோ''*

(ஆரண். அயோமுகிப் 3728)

என்கின்ருன்.

இவ்வாறு இராமன் தனக்குற்ற தீவினையை நினைந்து நோவு கொண்டதோடு அதனைத் தாங்கும் உரமும் பெற்று இலக்குவனை நோக்கி அவனை எடுத்துச் சென்ற அரக்கியை அவன் கொன்று விட்டானோ என்று அஞ்சி அவனிடம்,

*''வன்தொழில் வீர போர்வலி அரக்கியை*
*வென்று போர் மீண்டனன் எனவிளம்பினாய்*
*பொன்தொழில் அனையவள் புகன்ற சீற்றத்தால்*
*கொன்றிலை போலுமால் கூறுவாய் ... ... ...''*

(ஆரண். அயோமுகிப் 3731)

என்கின்றான்.

இங்கு இராமன் இலக்குவன் தன்னைப் பிரிந்ததை ஊன்றி எண்ணியபோது தான் செய்த தீவினை அயோத்தியில் தந்தையைப் பிரித்தது; தாயைப் பிரித்தது; தம்பியை பிரித்தது; பின்னர் உற்றார் உறவினர் அனைவரையும் பிரித்தது; காட்டில் புகுந்தபோது மனைவியையும் பிரித்தது; அதன்பின் தம்பியையும் பிரித்தது. இவ்வாறு வினை செய்த செயலைக் கண்டு அதனைத் தாங்குதற்குரிய வன்மை தன் தம்பி மீண்டு வந்துற்றதால் வந்தது என்று கருதியவன்,

*''பிரிபவர் யாவரும் பிரிக பேரிடர்*
*வருவன யாவையும் வருக வார்கழல்*
*செருவலி வீர நின் தீரும் அல்லது*
*பருவரல் என்வயின் பயிலற்பாலதோ''*

( ... ... ... ... ... 3730)

என்று துணிவு கொண்ட இராமன், அயோமுகியை இலக்குவன் கொன்றிருப்பானோ என்று அஞ்சிக் கேட்கின்றான். ஏனெனில், இலக்குவன் சீற்றங் காரணமாக அன்று அயோத்தியில் தாய் தந்தையரைக் கொன்று தனக்கு அரசு அளிப்பதாகச் சினந்தவன். அங்ஙனமே இங்குச் சீதையைப் பிரிந்த அவல

நிலையில் அயோமுகி விளைத்த இழி செயலால் சினந்து அவளைக் கொன்றிருக்கக் கூடுமென்று அஞ்சியே, 'கொன்றிலைபோலு மால்' என்று கேட்கின்றான்.

அப்பொழுது இலக்குவன் அவள் உறுப்புக்களைச் சிதைக்க அது ஆற்றாத அவள் அலறி ஓடியதைக் கூறவும் கொன்றான் என்று அஞ்சித் துளக்கமுற்ற இராமன், இலக்குவன் செயலை வியந்து பாராட்டி மகிழ் மீக்கூர்ந்த போதே துன்புறுகின்றான்.

''தொல் இருள் தனைக் கொலத் தொடர்கின்றாளையும்
கொல்லலை நாசியைக் கொய்து நீக்கினாய்
வல்லை நீ மனுமுதல் மரபினோய் எனப்
புல்லினன் உவகையின் பொருமி விம்முவான்''

(ஆர. அயோமுகிப். 3733)

இங்குத் தனக்குத் தீங்கிழைத்த அயோமுகியைக் கொல்லாது விடுத்த செயலைப் பாராட்டி இலக்குவனை 'வல்லைநீ' என்றும் அவனை விளிக்கின்றான் என்றால், இங்கு இலக்குவன் செயலை இராமன் வியத்தற்கும் புகழ்தற்கும் பாராட்டியதற்கும் உரிய அடிப்படைக்கராணம் ஒன்று இருத்தல் வேண்டும். இலக்குவனை உவகையோடு புல்லிய பின்னை இராமன் பொருமலும் விம்மலும் கொள்ளுகின்றான். மகிழ்ச்சிக்குரிய செயல் விளைத்தஇலக்குவனை மகிழ்ச்சியில் புல்லியதற்குக் காரணமுண்டு; ஆனால் ஆண்டு இராமன் அவலத்திற்குரிய பொருமலும் விம்மலும் கொண்ட தற்குக் காரணம்வேண்டும். இதில் ஆழ்ந்ததோர் அடிப்படைக் காரணம் உண்டு என்பது மட்டும் தெளிவு.

இராமன் இதுகாறும் செய்த போர்கள் இரண்டு. ஒன்று தாடகையோடு இயற்றியது; மற்றது கரனோடு கொண்டது. வாலியோடு நேர்ந்தது போர் அன்று. அது அவனை மறைந்து நின்று கொன்றது. இருவர்க்கும் போர் என்று ஒன்று நிகழ வில்லை. ஆதலால் வாலிவதையைப் போர் என்று கோடற்கில்லை

முன்னே குறித்த இரண்டு போரில் கரனேடு களம் குறித்துச் செய்த போர் இருவரும் எதிர் எதிர் நின்று மாறுவிளைத்த போராகும். இங்கே இராமன் தன் வில்லறத்தைத் துறந்த தாகக் காணேம். தாடகையோடு நிகழ்ந்த போர் கன்னிப்போர். அவள் இராமனேடு செருத்தொழில் தொடங்கிய போர்.

தாடகை இராமனேடு செறுத்து வேல் ஓச்சுவதாக அழன்று கூறியபோது, அவள் பெண் என்று மனத்திடை நினைத்து அவளோடு போர் செய்வதையும் அவள் மீது கணை தொடுப்பதையும் தவிர்த்திருந்தான். அது காலை கோசிக முனிவன் அவள் வலிமை, ஆற்றல், வீரம், இயற்றும் கொடுமை இத்தனையும் கூறி, அவளைப் பெண் என்று கருதி இராமன் அவளோடு போர் செய்ய முனையாதிருப்பது அறனழி செயல் என்றும், அவளைக் கோறலே அறம் என்றும் கூறிக் கொல்லப் பணிக்கின்றுன்.

*"ஈறில் நல்லறம் பார்த்து இசைத்தேன் இவள்*
*சீறி நின்று இது செப்புகின்றேன் அலேன்*
*ஆறி நின்றது அறன் அன்று அரக்கியைக்*
*கோறி ... ..................."*

(பால. தாடகைவதைப் 407)

என்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணனுகிய கோசிகன் கூற்று இது.

அதுகேட்ட இராமன் தாடகை ஒரு பெண்ணென்பதால் அவளைக் கோறல் ஒருவாறு அறனில் செயல் என்றுலும் முனிவன் ஏவிய வழி தான் இயற்றல் கடன் என்று அவளோடு போர் செய்யத் தலைப்பட்டு இறுதியில் அவளை அம்பால் அடித்துக் கொல்கின்றுன். இதனை இராமன் தனக்கு முனிவன் 'ஈறில் நல்லறம் பார்த்து இசைத்தேன்' என்றதால் அதுபற்றிய அறனுய்வு மேற்கொள்ளவில்லை. வேள்வி காக்க வந்து

அவனிடம் வேள்விகாக்க என்ற சொல் மருது, விலங்கல் வலி கொண்டு வேள்வி நலிகின்ற, 'அவளைக் கொல்' என்று முனிவன் கூறியதும் அவளைக் கொன்று விடுகின்றான்.

இராமன் எண்ணத்தில் இது ஓர் அறக் கேடு என்று இருந்தாலும் முனிவன் அதனைப் பெருமையாகவே கொள்கின்றான். அவன் இராமனிடம் அகலிகை வரலாறு கூறியபோது,

*''மைவண்ணத்து அரக்கி போரின் மழை வண்ணத்து அண்ணலே உன்*
*கைவண்ணம் அங்குக் கண்டேன் கால்வண்ணம் இங்குக் கண்டேன்''*

(பால. அகலிகைப் 559)

என்று இராமன் கைவண்ணம் கால்வண்ணம் இரண்டையும் வியந்து குறிப்பிடுகின்றான். பின்னர் இராம இலக்குவர்களைச் சனகனிடம் அறிமுகம் செய்கின்றபோது,

*''ஈங்கு இவரால் என்வேள்விக்கு இடையூறு கடிது இயற்றும்*
*தீங்குடைய கொடியோரைக் கொல்விக்கும் சிந்தையனாய்ப்*
*பூங்கழலார்க் கொண்டு போய் வனம்புக்கேன் புகாமுன்னம்*
*தாங்கரிய பேராற்றல் தாடகையே தலைப்பட்டாள்''*

*''அலையுருவக் கடலுருவத்து ஆண்டகை தன் நீண்டுயர்ந்த*
*நிலையுருவப் புயவலியை நீஉருவ நோக்கையா*
*உலையுருவக் கனலுமிழ்கண் தாடகை தன் உரமுருவி*
*மலையுருவி மரமுருவி மண் உருவிற்று ஒருவாளி''*

(பால. குலமுறை 661-662)

என்று கூறுகின்றான்.

இவ்வாறு தாடகையுடன் செய்த போர் இராமன் விளைத்த கன்னிப் போராகும். இப்போர் மாமுனி பணித்ததற்காக இராமன் மேற்கொண்டது. இதனை,

*''வாசநாள் மலரோன் அன்ன மாமுனி பணி மருத*
*காசுலாம் கனகப் பைம்பூங்காகுத்தன் கன்னிப் போரில்*
*கூசிவாள் அரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க அஞ்சி*
*ஆசையால் உழலும் கூற்றும் சுவைசிறிது அறிந்தது*
*அன்றே''*

(பால. தாடகைவதைப் 417)

என்றும் கம்பர் குறிப்பிடுகின்ருர்.

இப்போர் முனிவன் ஏவலால் இராமன் விளைத்ததெனினும், பெண்ணேடு பொருதலோ அன்றி அவளைக் கோறலோ வீரர்க்கு மறம் இழுக்குப்படும் செயலேயாகும். மாதா, பிதா, குரு என்பவர்கள் ஏவியதை மறுத்தல் ஒருவனுக்கு அறக்கேடு. இங்கே இராமனுக்கு முனிவன் ஏவலால் நிகழும் அறக்கேடும் பெண் கொலை புரிவதால் வருகின்ற மறன் இழுக்கமும் பாவமும் ஒருசேர வந்து, இதில் செய்வது எது, தவிர்வது எது என்ற போராட்டம் நிகழ, பெண் கொலையால் வருகின்ற வீரக்கேடும் பாவமும் பழியையும் விட ஈறில் நல்லறம் பார்த்து அவளைக் கொல்லப் பணித்த முனிவன் ஆணையை நிறைவேற்றும் அறம் செய்து அதுவழி வரும் இழுக்கத்தினை ஏற்றுக் கொள்கின்ருன்.

தாடகை வதையில் இராமன் கருவியாகின்ருன். கோறலை நிறைவேற்றுவதில் தான் வினை முதலாக இருந்து இயற்றும் பாவம், கருவியாக இருந்து இயற்றும் பாவத்தினும் சிறிது என்று செய்வகை இன்றித் துணிந்து கொல்கின்ருன். இங்ஙனம் கருவியாக இருந்து, பெண்ணை வில்லால் அடித்துக் கொன்றதை வில்லறம் துறந்ததாக எண்ணுகின்ருன். இங்கு வாலியைக் கொன்றது வில்லறம் துறந்ததாக வாலி கூறிய கூற்றை இராமன் நினைந்து கூறினுனகக் கோடல் ஏற்புடையதன்று.

*''ஏவுகூர் வாளியால் எய்து நாய் அடியனேன்*
*ஆவிபோம் வேலைவாய் அறிவுதந்து அருளினய்''*

(கிட். வாலிவதைப். 4167)

என்று வாலி மெய்யறிவு தலைப்பட்டுக் கூறிய பின்னர் அவ் வறிவு தலைப்படாமல் கூறிய கூற்றினை ஈண்டுக் கோடல் அமையாது.

இராமன் தாடகையை வதைத்து வில்லறம் துறந்ததாக நினைந்து கையற்று அத்தகைய வாழ்வுடைய தனக்கு இத்தகைய மேன்மையில்லாத இல்லறத்தைப் புரிந்ததால் வந்த தீமைகள் தீருமாறு நல்லறநோன்பு பலவற்றை நாளும் நோற்றுக் கொண்டிருப்பதாகக் கூறுகின்றான்.

"'இல்லறம் துறந்தி லாதோர் இயற்கையை இழந்தும்போரின்
வில்லறம் துறந்தும் வாழ்வோற்கு இன்னனமேன்மை
இல்லாச்
சில்லறம் புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு
நல்லறம் தொடர்ந்துநோன்பின் நவையற நோற்பல் நாளும்"

(கிட். அரசியற் 4241)

இங்கு இன்னன மேன்மையில்லாச் சில்லறம் என்று அகச் சுட்டாகக் குறித்தது தாடகை வதையையே யாகும். ஏனெனில், இது பெண்ணோடு மேற்கொண்டதும், அவளைக் கொன்றது மாய வீர இழுக்குப் பட்டபோர். இது அவன் நெஞ்சில் நின்ற போர். அதில் நிகழ்ந்த அறமாவது, முனிவர்களையும் அவர்கள் இயற்றும் வேள்விகளையும் நலிந்த அரக்கியைக் கொன்று ஆண்கள் ஒழுக்க நெறி நிற்க வாய்ப்பளித்த அறமும் முனிவன் பணித்தவண்ணம் என்றது இயற்றிய அறமும் ஆம். அதனால் இது போன்ற செயல்கள் மேன்மையில்லாச் சில்லறம். இந்தச் சில்லறங்கள் புரிந்தால் தாடகையை வதைத்த பெண் கொலையால் தன்கண் புகுந்த தீமைகள் தீரா. அது தீர வேண்டின் நல்லறம் தொடர்ந்த நோன்பு மேற்கொள்ள வேண்டும். அதுதான் தாய்தந்தை பணித்த வண்ணம் பூழி வெங் கானம் நண்ணித், தாழிரும் சடைகள் தாங்கி, தாங்கரும் தவ மேற்கொண்டு இயற்றிக் கழிப்பது. அதனைத் தான் தொடர்ந்து

இயற்றுவதாகவும், அதற்காகவே ஏழிரண்டு ஆண்டுகட்குக் காடு போந்ததாகவும் அத்தவவாழ்வு முடிவு பெறு முன்னம் அரசர் வைகும் வளநகர் வைகுதல் தனக்கு இழுக்கு என்றும் கூறிக், கிட்கிந்தை வந்து தம்முடன் சிலநாள் தங்கியிருக்க அழைத்த சுக்கிரீவனுக்கு மாற்றமுரைத்தான் இராமன்.

---

## 19. இராமன் காட்டாட்சியின் காரணம்

இராமன் தான் அன்று தாடகை என்ற பெண்ணைக் கொலை புரிந்ததைப் பெரும்பாதகமாகவும், அது தனக்குப் பழி வினையாகவும், பழிச் சொல்லாகவும் நின்று உறுத்துவதைத் தானே நினைந்து கூறும் இடங்கள் பல.

காட்டிற்குவந்தபின் நீர் தேடிச் சென்ற இலக்குவனை அயோமுகி எடுத்துச் சென்றது அறியாது இராமன் தன்னை இலக்குவன் நெடும்போது கழிந்திருப்பது ஏதோ ஓர் ஏதம் பட்டதனால் தான் என்று துணிந்து அவலித்துப் புலம்பும்போது,

''கமையாளொடும் என் உயிர் காவலில் நின்று
இமையாதவன் இத்துணை தாழ்வுறுமோ
சுமையால் உலகூடு உழல் தொல்வினையேற்கு
அமையாது கொல் வாழ்வு அறியேன் ... ...''

(ஆர. அயோமுகிப். 3717)

என்கின்றான்.

இங்கு இராமன் இழைத்த தொல்வினைச் சுமையால் உலகில் உழந்து உய்திபெறாது போகக் கூடுமோ என்று தான் புரிந்த தாடகை வதையைத் தொல்வினை என்று சுட்டுவதும்

அதுபற்றித் தனக்கு நல்வாழ்வு அமையாது போகுமோ என்று நோவதும் காணலாம்.

சீதையை இராவணன் கவர்ந்து செல்லக்கண்டு அவனைத் தடுத்து அவனால் அடியுண்டு கிடந்த சடாயுவைக் கண்டு இராமன் புலம்பும்போது தான் புரிந்த தாடகை வதையால் வந்தவினை வயத்தையும், அதுவழி உலகில் பிறந்த பழிச் களையும் நீடு நினைக்கின்றான். நினைந்து,

''சொல்லுடையார் என்போல் இனி உளரோ
தொல்வினையேன்''

(ஆர. சடாயு உயிர் நீத். 3602)

என்று கூறுகின்றான்.

தான் விளைவித்த தாடகை வதை பெரும்பழி உடையது. அப்பழிக்கு எல்லையில்லை என்றும், அவ்வாறு எல்லை கணிக்க முடியாத பெண் கொலை என்ற பெரும் பாதகத்தைப் புரிந்து விட்டதை நினைந்து,

''அயிரா நெஞ்சும் ஆவியும் ஒன்றேஎனும் அச்சொல்
பயிரா எல்லைப் பாதகனேற்கும் பரிவு உண்டோ''

(யுத் பிரமாத்திரப் 8782)

என்று பேசுகின்றான். எல்லை கணிக்க முடியாத பாதகம் ஒன்று தான் செய்ததாகக் கூறியது தாடகை வதையையே அன்றி அவன் இயற்றிய செயல்களில் வேறு ஒன்றில்லை.

தாடகை வதத்தால் வந்த பாதகத்தை இங்கு நினைத்தவன், அதன் தொடர்பாகச் செய்த செயல்களையும் எண்ணி அடுத்துப் பேசுவதைக் கொண்டு எல்லைப்படாப் பாதகம் தாடகை வதையில் வந்தது என்று அவன் குறித்ததை உறுதிப் படுத்தலாம்.

> *''வேள்விக்கு ஏகி வில்லும் இறுத்து ஓர் விடம் அம்மா*
> *வாழ்விக்கும் என்று எண்ணினேன் முன்னே வருவித்தேன்*
> *சூழ்வித்து என்னைச் சுற்றினரோடும் சுடுவித்தேன்*
> *தாழ்வித்தேனே இத்தனை கேடும் தருவித்தேன் ''*
>
> (யுத். பிரம்மாத். 8783)

இங்கு இராமன் வேள்விக்கு ஏகி இத்தனை கேடும் தருவித்தேன் என்று கூறுகின்றான். இவன் வேள்விக்கு ஏகித் தருவித்த கேடு என்ன என்பதைச் சற்று விரித்துக் கண்டால் அனைத்திற்கும் தெளிவு பிறக்கும். தாடகை வதையால் வந்த பாவம் கழிக்கத் தான் காட்டிற்கு வந்ததைச் சுட்டுவதும் பாவம் கழிக்கவந்த இடத்து தனக்கு அடுத்தடுத்து வருகின்ற தீமைகளை நோக்கி ஒருபுடைத் துணிவு கொள்வதும் ஒருபுடை கையாறு கொள்ளுவதுமாக இராமன் பேசுவதைக் கொண்டு நோக்கினால் கைகேயி அவனைக் காட்டிற்கு அனுப்பிய காரணம் தெளிவாக விளங்கும்.

---

## 20. கைகேயி பிழைத்தது எங்ஙனம்

இராமன் 'பயிரா எல்லைப் பாதகம்' என்றதும் 'தொல்வினையேன்' என்றதும், 'சொல்லுடையார் இனி என்போலுளரோ' என்றதும் கொண்டு காணும் போது, கூனி இராமன் முடிபுனைய விருந்த செய்தியை அறிந்த கைகேயியிடம் சொல்லவந்த முதற் செய்தியும் இதுவே என்பது தெளிவு.

> *''ஆடவர் நகையுற ஆண்மை மாசுறத்*
> *தாடகை எனும் பெயர்த் தையலாள் படக்*
> *கோடிய வரிசிலை இராமன் கோமுடி*
> *சூடுவன் நாளை வாழ்வு இது ... ...''*
>
> (அயோ. மந்தரை சூழ்ச். 1545)

என்று கூறியது போது வில்லறம் துறந்து பெண் கொலே புரிந்த இராமன் முடிசூடல் என்பது அரசியல் வாழ்விற்கு ஆகாது என்பதும், கோமுடி பழுதுபடும் என்பதும், அதனைத் தவிர்த்தல் வேண்டும் என்பதும் அவள் நோக்கு என்பதைத் தெளிவாக அறியலாம். இராமன் தன்னை உண்டைவில்லால் அடித்ததை நினைந்து அவனிடம் ஒரு பகைமை கொண்டவள் கூனி என்பது தெளிவு. அவள் பகைமை கொண்டவளாக இருந்ததால்தான் இராமனைப் பற்றிப் பிறர் பழிபட சொல்லிய சொல் அவளுக்கு முறையானது என்று பட்டது. எனவே அதனை இராமனை வளர்த்தவளும் அவன் பால் பற்று மிக்கவளும், அவன் வாழ்வே தன் வாழ்வு என்று வாழ்பவளும் ஆய கைகேயி அறியாதிருந்தாலும் அதனை அவள் அறியும் பொருட்டுக் கூறுகின்ருள். தான் கூறிய கூற்றினைக் கொள்ளாத கைகேயிக்குப் பின்னர் உலகியலில் நின்ற பல காரணங்களைக் கூறி இராமன் முடிபுனைவதைத் தடை செய்கின்ருள். அவள் இராமன் புனையும் முடியினைப் பதினன்கு ஆண்டுகட்குத் தடை செய்ய நினைத்தாளே யன்றி முற்றிலும் அவனுக்கு நாடில்லை என்று புறக்கணிக்கத் துணியவில்லை.

இங்கு கூனி பதினன்கு ஆண்டுகள் என்று கூறியதில் உறுதியாக ஒரு பொருள் இருக்கவேண்டும். வரத்தின் வழி நாடு கேட்க வழி சொன்னவள் என்றுமே பரதனுக்கு நாடு உரியதாகவும் என்றுமே இராமன் காடு உறைவானுகவும் வரம் பெறக் கூறியிருக்கலாம். அங்ஙனம் கூருதது இராமன் பதினன்கு ஆண்டுகட்கு மட்டும் காட்டில் இருக்கவேண்டும் என்பதற்காகவே.

> *''இருவரத்தினில் ஒன்றினுல் அரசு கொண்டு இராமன்*
> *பெருவனத்திடை ஏழிரு பருவங்கள் பெயர்ந்து*
> *திரிதரச் செய்தி ... ... ... ... ...''*
>
> (அயோ மந் சூழ்ச் 1577)

என்பது தான் கூனி சொன்னது. அதனைக் கேட்ட கைகேயி,

*''நன்று சொல்லினை நம்பியை நளிர் முடி சூட்டல்
துன்று கானத்தில் இராமனைத் துரத்தல்...''*

(அயோ-மந்-சூழ் 1579)

என்று சொன்னவள், தயரதனிடம் வரம் கேட்கும்போது,

*''ஏயவரங்கள் இரண்டின் ஒன்றினால் என்
சேய் அரசாள்வது சீதை கேள்வன் ஒன்றால்
போய் வனம் ஆள்வது ... ... ... ... ...''*

(அயோ. கைகேயி சூழ் 1593)

என்று கூறுகின்றாள்.

கூனி 'திரிதரச் செய்' என்கின்றாள். கைகேயி அவளிடம் 'கானத்துத் துரத்துவேன்' என்கின்றாள். தயரதனிடம் 'கான்ஆள' என்கின்றாள். இராமனிடம் கானம் நண்ணித், தவமியற்றித் துறைபடிந்து வா என்கின்றாள். இங்குக் கூனி கூறியதும், அவளுக்குக் கைகேயி ஆண்டு சொன்னதும், பின் தயரதனிடம் வரமாகக்கேட்டதும், பின் இராமனிடம் கூறியதும் சற்று வெவ்வேறுபட்ட செய்திகளாக அமைந்துள்ளன. இதற் கெல்லாம் காரணம் இராமன் காட்டிற்கு ஏன் செல்லவேண்டும் என்பதற்குக் கூனி கூறிய காரணங்களை அறிந்த கைகேயி கூனி கூறியாங்கு இராமனிடம் அவன் புரிந்த தாடகை என்ற பெண் கொலைப் பாவம் கழிக்க வேண்டும் என்பதை மறைத்துக் காட்டிற்குச் சென்று செய்ய வேண்டியனவற்றைக் கூறுமி விளக்கிக் கூறுகின்றாள்.

இதனை இராமன் முன்னமே அறிந்ததால்தான் கைகேயி இட்ட ஆணையை விரும்பி ஏற்கின்றான். தனக்குத் தாய் செய்த நன்மையில் இதிற் சிறந்தது ஒன்று இல்லை என்று எண்ணு கின்றான். இந்த மன நிலையையுடைய இராமன், பின்னே தான் மேற்கொண்ட தவம் இயற்ற வந்த இடத்து ஏன்ற அருளாட்சி முற்றி, அயோத்தி திரும்ப நின்ற காலை சீதையை எரியிடை யிட்டுச் சோதிக்கின்றான். பிரமன், சிவன் முதலிய கடவுளர்கள்

இராமனுக்கு அவன் இன்னுன் என்ற மெய்ம்மையை உணர்த்துகின்றனர். அதுகாலை அவர்கள் வானகம் பெற்றிருந்த தயரதனை அழைத்து, சீதையினுடைய கற்புத்திறத்தை உணர்த்தி இராமன் அவளை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டி அவனைப் பூதலத்து உய்க்கின்றனர். வந்த அவன் இராமனைத் தழுவி, அன்று கைகேயி தன்னிடம் கேட்ட இரண்டு வரங்களும் தனக்கு நெஞ்சு போழ்ந்து நின்ற வேலாகி இது காறும் தன்னைக் கொன்றுங்கூட அது அகலாது கிடந்தது என்றும், அது இன்று இராமனை மீண்டும் கண்டு தழுவப் பெற்றதால் அகன்றது என்றும், கைகேயிபால் தனக்கு இருந்த வயிர்ப்புடைமையைக் குறிப்பிட்டு,

*"அன்று கேகயன் மகள் கொண்ட வரம் எனும் அயில்வேல்*
*இன்று காறும் என் இதயத்தினிடை நின்றது என்னைக்*
*கொன்றும் நீங்கலது இப்பொழுது அகன்றது உன் குலப்பூண்)*
*மன்றல் ஆகமாம் காந்த மாமணி இன்று வாங்க"*

(யுத். மீட்சிப் 10213

என்கின்ருன்.

மேலும் இராமனுல் தனக்குக் கிடைத்த வானகப் பேற்றையும் தேவர் தொழும் தகைமையையும் இராமனுக்கு உரைத்து மகிழ்ந்து அவனுக்கு இரண்டு வரம் தருவதாகக் கூறுகின்ருன். அப்பொழுது இராமன்,

*"தீயள் என்று நீ துறந்த என் தெய்வமும் மகனும்*
*தாயும் தம்பியும் ஆம் வரம் தருக . ... ..."*

(யுத். மீட்சிப் 10224)

என வேண்டுகின்ருன். அது கேட்ட தயரதன்,

*''பரதன் அன்னது பெறுக தான் முடியினைப் பறித்து இவ்*
*விரத வேடம் மற்று உதவிய பாவிமேல் விளிவு*
*சரதம் நீங்கலதாம் ... ... ... ...''*

(யுத். மீட்சிப் 10225)

என்று கூறுகின்றான்.

இராமனைக் காடுபுகச் செய்து அவன் முடியை முற்றிலும் பறித்துக்கொண்டது கைகேயி செய்த கொடுமையே என்ற எண்ணத்தினின்றும் ஒரு சிறிதும் மாறினானல்லன் தயரதன். அவள் கொண்ட வரம் என்னும் வேல் நெஞ்சிடைக் கிடந்தது இராமனைத் தழுவ இன்று நீங்கியும் கூட அவ்வேல் செய்த புண் ஆறவில்லை என்று கூறுகின்றான். அது கேட்ட இராமன் தயரதன் கைகேயிபால் கொண்ட தவற்றுணர்வை நீக்குவான் வேண்டி,

*''ஊன் பிழைக்கிலா உயிர் நெடிது அளிக்கும் நீள் அரசை*
*வான் பிழைக்கு இதுமுதல் எனது ஆள்வுற மதித்து*
*யான் பிழைத்தது அல்லால் என்னை ஈன்ற எம்பிராட்டி*
*தான் பிழைத்தது உண்டோ ... ... ... ... ...''*

(யுத் மீட்சிப் 10226)

என்கின்றான்.

இங்கு உயிரினங்களைப் புரக்கும் நீண்ட அரசினை, (தாடகைவதைபுரிந்த) தான் ஏற்பது பெரும் பிழைக்கு அடிப் படையாகுமென்று கருதாமல் அதைத் தந்தை தர, அதனை ஆள அவன் ஏவியது மறுக்க அஞ்சி ஏற்றது காரணமாகச் செய்த பிழையேயன்றித் தன் தாய் கைகேயி செய்த பிழை ஒன்று உண்டோ என்று கேட்கின்றான். முனிவன் ஏவலால் செய்ய நேர்ந்த கொலைக் குற்றத்தைத் தானே செய்ததாகக் கொள்கின்றானேயன்றி முனிவனை யாண்டும் குறித்தான் அல்லன். முடியினை இராமன் ஏற்றுக் கொள்ளுமாறு செய்ய அவனிடம் தயரதன்,

"... ... ... ... ... அரும் துயர்ப் பெரும் பரம் அரசன்
வினையின் என்வயின் வைத்தனன் எனக் கொள
வேண்டா
புனையும் மாமுடி புனைந்து இந்த நல்லறம் புரக்க
நினையல் வேண்டும் யான் நின்வயின் பெறுவது
ஈது ... ..."

(அயோ. மந்திரப் 1467)

என்று வேண்டியபோது இராமன்,

"காதல் உற்றிலன் இகழ்ந்திலன் கடன் இது என்று
உணர்ந்தும்
யாது கொற்றவன் ஏவியது அது செயல் அன்றோ
நீதி எற்கு என நினைந்தும் ... ... ... ... .."

(... ... ... ... .. 1468)

என்று கொள்கின்றான்.

இங்கு இராமன் அரச குடியில் மூத்தவனாகப் பிறந்து அரசினை ஏற்பது கடமை என்று உணர்ந்துங்கூட அதில் விருப்போ வெறுப்போ கொள்ளாதிருந்தது தாடகை என்ற பெண் கொலை புரிந்ததால் நேர்ந்த பாவம் கழியா முன்னர் முடிபுனைவது தனக்கும் அரசுக்கும் கேடு பயக்கும் என்று அஞ்சியதாலேயாம். அவ் அச்சம் இருந்துங்கூட தயரதன் பணித்ததால் அவ்வரசினை ஏற்றான். அதனால்தான் தனக்குக் கைகேயி வரத்தால் அப்பொழுது முடியில்லாது செய்தது தனக்கு மிகப்பெரிய நன்மை என்று கருதி இறும்பூது அடைகின்றான். அதனால், 'ஆள்வுற மதித்து யான் பிழைத்தது அல்லால்' என்று தாடகையைக் கொன்ற பழியிருப்ப, தான் முடிபுனைய ஏற்றதைக் குற்றமென்றே கூறுதல் காணலாம்.

இராமன் தாடகை வதை என்ற ஒரு குற்றத்தைப் புரிந்திருப்ப அதனைக் குற்றமென்று கருதாது மூத்தவன் என்ற முறைமை கருதி முடி சூட்ட முனைந்த தயரதன் செயல் இராமனுக்கும் அரசுக்கும் பழி கிடப்ப, முடிபுனைதல் ஆகாது

என்பதை, 'ஆடவர் நகையுற ஆண்மை மாசுற கோடிய வரிசிலே இராமன்' என்று ஊரவர் கூற, அது கேட்ட கூனி கைகேயி வளர்த்த மகன் இராமனுக்கு இருந்த பழிமொழியைச் சுட்டி, அன்னுன் அதுகாலே முடிபுனேதற்கு வேருகப் பரதன் முடிபுனேந்து, இராமன் பதினுன்கு ஆண்டுகள் காட்டகத்திருந்து பாவம் போக்கி வந்தபின் முடியினே ஏற்றுக்கொண்டு இனிது வாழ வகை சொன்ன கூனியும் அதனேச் செயற்படுத்திய கைகேயியும் குறைபடுமாறு எங்ஙனம்?

முடிபெறுவோன் தகுதியை மூத்தவன் என்ற ஒன்று கொண்டு அளந்தானேயன்றி வே று காரணங்கொண்டு அளக்காதது தயரதன்பால் உற்ற குறை. தன்பால் பெண் பழி இருப்ப முடிபுனேய அரசன் ஆணே வழி நிற்றல் அறமென்று கொண்டது இராமன் பால் நின்றகுறை. முறைமை பேணும் அறம் தயரதனுக்குக் குறையாயிற்று. குரவன், அரசன் என் போர் சொல் போற்றும் அறம் இராமனுக்குக் குறையாயிற்று. இவ்வாறு இராமனும் தயரதனும் செய்த அறக்குறையால் வரும் கேட்டினேத் தவிர்க்கத் தடை. ஒன்று செய்து, வழி ஒன்று காட்டிய கைகேயி பிழை செய்தது எங்ஙனம்?

---

# 21. கோசிகன் சூழ்ச்சி

மகப்பேறில்லாத தயரதனுக்கு முதல் மகனுக இராமன் பிறந்து வளர்ந்து, நாட்டுமக்கள் அனேவராலும் தயரதனுக்குப் பிறகு அரசேற்கும் அனேத்துத் தகுதிகளேயும் பெற்றவன். மூத்தோன் என்ற ஓர் பிறப்புரிமையால் மட்டும் அரசேற்கும் தகுதியைப் பெருமல், கல்வி கேள்வி ஒழுக்கம் அனேத்திலும் சிறந்து, கார் கண்டு பயிர் களிக்குமாறு மக்கட்குக் களிப் பளித்து வாழ்ந்ததால் அயோத்தி வாழ்வோர் இராமனே நோக்கி,

*''அஃது ஐய நினை எமது அரசென உடையேம்
இஃது ஒரு பொருளல எமது உயிருடன் ஏழ்
மகிதலம் முழுதையும் உறுக இம்மலரோன்
உகுபகல் அளவு ... ... ...''*

(பால. திருவவதாரம். 315)

என மகிழ்ச்சிப் பெருக்குடன் வாழ்த்துக் கூறுகின்றனர்.

இவ்வாறு இராமன் சிறுவனாக இருக்கும்போதே மக்களால் அரசன் என்று ஏற்கப் பெற்றதோடு, இவன் முடிபுனைவது என்று என்று மக்கள் காத்துக் கிடந்தனர். இந்தச் சூழ்நிலையில் இராமனுக்கு முடிபுனைவதில் தயரதனுக்கோ அன்றிக் கைகேயிக்கோ தடையேதும் நிகழ வாய்ப்பில்லை. தயரதன் இராமனை அழைத்து அரசேற்பது பற்றி அவன் கருத்தறிய வேண்டா. வழி வழி வந்த அரசினை இராமன் ஏற்பதற்குத் தயரதன் இராமனிடம் வரமாக வேண்டி ஒப்படைக்க வேண்டா. இச் சூழ்நிலையில் இராமனுக்கு வேண்டப்படும் தகுதி திருமணமே. திருமணம் நிகழ்ந்த பின் இராமன் அரசேற்கும் முழுத்தகுதியும் பெற்றுவிடுகின்றான். அதனால் தான் தயரதன் அரசினை இராமனிடம் ஒப்படைக்கக் காலத்தை எதிர் நோக்கி நிற்கின்றான்.

இச் சூழ் நிலையில் கோசிகன் வருகின்றான். வந்தவன் தயரதனிடம்,

*''தருவனத்துள் யானியற்றுந் தவவேள்விக்கு இடையூறாகத் தவம் செய்வோர்கள்
வெருவரச் சென்று அடைகாம வெகுளி என நிருதர் இடை விலக்காவண்ணம்
செருமுகத்துக் காத்தி என நின் சிறுவர் நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி .. ... ... .. ...''*

(பால. கையடைப். 327)

என்கின்றான்.

கோசிக முனிவன் தான் செய்யும் வேள்வியை அரக்கர்கள் தடுக்காவகை போர் முகத்திலிருந்து காப்பதற்காக இராமனை அழைத்ததும், தயரதனுக்கு முனிவன் சாபம் நினைவிற்கு வந்து விடுகின்றது. மகன் பிரிவால் தன் உயிர் ஓயும் என்று துணுக்குற்றுத் துளங்குகின்ருன். அந்த மன நிலையில் அரக்கர்களைத் தடுத்து நிறுத்தி வேள்வி காப்பதற்குப் படையூற்றமில்லாதவனும் சிறுவனுமாகிய இராமனைக் காட்டிலும், சம்பரனைப் போன்ற பேராற்றல் பெற்ற அரக்கர்களைக் கொன்ற பழக்கமுடைய, ஆற்றல் படைத்த தானே வந்து வேள்வி காப்பதாகக் கூறுகின்ருன்.

இங்கு முனிவனுக்கு அரக்கர்களிடத்தினின்றும் ஊறு நிகழாதவாறு தன் வேள்வி காக்கப் பெற வேண்டுமென்பது கருத்தாயின், அவன் தயரதன் வருவதாகக் கூறிய வண்ணம் அவனை அழைத்துச் சென்றிருக்க வேண்டும். அவன் ஆண்டுத் தயரதன் பால் வெகுண்டது இராமனைத் தான் விழைந்த வண்ணம் தன்னுடன் அனுப்பவில்லை என்பதாலாகும். கோசிகனுக்குத் தன் வேள்வி காப்பதற்குத் தயரதனைக் காட்டிலும் இராமன்தான் வேண்டும் என்று கருதியதில் ஒரு பொருள் இருக்கவேண்டும். வேள்வி காப்பதுஇன்றியமையாததா? அன்றி இராமன் வருவது இன்றியமையாததா? என் று பார்த்தால் படையூற்றமில்லாத, என்றும் அரக்கரைக் காணுத சிறுவனுகிய இராமனை வேண்டிப் பெற்று அழைத்துச் செல்கின்ருன் என்ருல் கருதியது ஒன்றுண்டு.

முனிவன் இராமனை அழைத்துச் சென்ற வழியில் தாடகை வரலாறு கூறுகின்ருன். அப்போது தாடகை ஆண்டு வெளிப்பட்டு, தன் கைக்கண் இருந்த வேலை எறிந்து இராமனைக் கொல்வதாகக் கூறுகின்ருள். அவள் தன்னேடு போர் செய்ய முற்பட்டுக் கொல்ல முனைந்துங்கூட அவள் பெண்ணுக இருக்கின்ருளே என்று அவளைக் கொல்லாது இராமன் காலந்தாழ்க்

கின்றான். அது கண்ட முனிவன், தாடகையின் பேராற்றல் முதலியவைகளைக் கூறி 'ஈறில் நல்லறம் பார்த்து இசைத்தேன் அவளைக் கோறி' என்று கூறி அவளைக் கொல்விக்கின்றான்.

இங்கு விசுவாமித்திர முனிவன் இராமனை அனுப்புமாறு தயரதனிடம் வேண்டியபோது, தன் வேள்விக்கு அரக்கர்கள் இடையூறு செய்கின்றார்கள் என்றும், அவர்களைச் செருமுகத்துக் காக்க வேண்டும் என்றும்தான் அழைத்தான். அந்த அவன் தாங்கரிய பேராற்றல் படைத்த தாடகை என்ற ஒருத்தி உள்ளாள் என்றும், அவளைக் கொல்ல வேண்டும் என்றும் அழைத்தானல்லன். தாடகை எதிர்ப்பட்டு வேலோச்சுவதாக வும் கொல்வதாகவும் கூறினாள். அவளை அங்ஙனம் செய்யா வகை காக்க வேண்டிய பொறுப்புடையவன் இராமன். அவன் அவள் கைக்கண் இருந்த வேலைச் சிதைத்தோ அன்றி அவளை உறுப்பறை கொண்டோ அன்றிப் பிறமுறையில் அச்சுறுத் தியோ அன்றிக் கொன்றோ எப்படியோ அவளால் முனிவனுக்கு ஊறு நேராவகை காத்தற்கு உரியன்.

இராமனிடம் அவள் பெண்ணென்று கருதி அவளைக் கொல்லாதிருப்பது குற்றமென்றும் அவளைக் கொல்வது ஈறில் நல்லறமாகும் என்றும் கூறி அவளைக் கொல்லப் பணிக்க வேண்டிய இன்றியமையாமை இந்த முனிவனுக்கு இல்லை. தாடகை பேராற்றல் படைத்தவள். அவள் ஊறு விளைப்பாள் என்று கருதினால் தன் காப்பிற்கு அழைத்த இராமனைப் பாலை நலியாவண்ணம் மந்திரம் உதவிக் காத்த முனிவன், அவளிடமிருந்து இராமனைக் காக்கத் தானே அவளைக் கொன்றி ருக்கவேண்டும்.

கோசிகன் வைத்திருந்த படைக்கலங்கள் உலகமெல்லாம் கலக்கி வெல்ல வல்லன. அத்தகைய முனிவன் தன் ஆற்றலால். தன் படைக்கலத்தால் தாடகையைக் கொன்றிருக்க வேண்டிய வன், படையூற்றமில்லாத, அதேபோது பெண்ணோடு பொரு

வதோ. கொல்வதோ வீரத்திற்கு இழுக்கென்று கருதி வாளா விருந்த இராமனே தற்பொறுப்பில் செய்வது செய்யட்டும் என்றில்லாமல் அவனையே தாடகையைக் கொல்லுமாறு ஏவுவானேன் ?

முனிவனுக்குத் தன் வேள்வி இராமனால் காக்கப்பெற வேண்டியது என்பதைக் காட்டிலும் இராமனால் தாடகை கொலையுண்ண வேண்டும் என்பதே குறிக்கோளாக இருந்தது என்பது தெளிவு. இங்கு இவன் இராமனைப் பெண்கொலை புரிய வைத்தது வேண்டுமென்றே செய்ததாகும். அதன் வழி அவன் கருதிய பெரிய காரியம் வேறு.

முனிவன் வேள்வி முடிந்த பின்னை, தான் இயற்றக் கடவ செயல் என்ன என்று கோசிகனை இராமன் கேட்டபோது அவன், 'பெரிய காரியம் உள' என்று கூறித் தன்னிடமிருந்த பேராற்றல் படைத்த படைக்கலங்களை இராமனுக்கு உதவு கின்றான். அதன் பின்னர் முனிவன் இராமனைத் தயரதனிடம் ஒப்புவிக்க வேண்டியிருப்பவும், அவனை மிதிலைக்கு அழைத்துச் சென்று சனகன் சூளுறவில் வைத்திருந்த வில்லை நாணேற்றச் செய்து சீதையை மணங்கூட்டுவிக்கின்றான்.

இத்திருமணம் முனிவனால் கூட்டப்பெற்றதன்றி இயல் பான முறையில் தயரதன் வழி நிகழ்ந்ததில்லை; நிகழவும் செய்யாது. காரணம், சனகன் கைகேயியின் தந்தையாகிய கேகயனுக்குப் பகைவன். சூளுறவில் வைத்த வில்லை இறுத்து மணங்கொள்வது மன்னர் குலத்தார்க்கு இயல்பான செயல் என்றாலும், அப்பகை காரணமாகத் தயரதன் இராமனை மிதிலைக்கு அனுப்பியிருக்க மாட்டான். கைகேயியும் தான் வளர்த்த தன் மகன் இராமனைத் தன் தந்தையின் பகைவன் மகளைச்சூளுறவு வழி மணங்கொள்ள அனுப்பியிருக்கமாட்டாள். இது முனிவனால் நிகழ்ந்தது ஆதலாலும், இராமன் சூளுறவில் சிவன் வில்லை இறுத்தான் என்ற செம்மாப்பாலும், பகையை

நினைக்காமல் உரிமை நினைந்து மணங்கொள்ளச் சனகன் அழைப்பை ஏற்றுத் தயரதன் செல்லுகின்றான். பரதன் முதலிய மக்களும், இராமன் திருமணம் நிகழும் போதே சனகன் தம்பி மகளிரை மணக்கின்றனர்.

இத்திருமணத்திற்குச் சனகன் கேகயனை அழைத்த தாகவும் காணோம்; அவன் வந்ததாகவும் தெரியவில்லை. திருமணம் முடிந்தபின் அயோத்தி சென்று தயரதன் மக்களோடு வாழ்கின்ற போது கேகயன் தன் மகன் உதா சித்தினை அனுப்பிப் பரதனைக் கேகயத்திற்கு அழைத்துவருமாறு பணிக்கின்றான். தயரதனும் கேகயன் வேண்டுகோட்கு இணங்கிப் பரதனை அனுப்பிவிடுகின்றான். சத்ருக்கனனும் உடன் செல்கின்றான். இவ்விருவர் பிரிவும் முனிவனால் ஆனது.

விசுவாமித்திர முனிவன் இராமனை மிதிலைக்கு அழைத்துச் சென்று இவ்வாறு திருமணம் கூட்டாதிருந்தால் பரதன் திருமணத்தைக் காணாத கேகயன் பரதனைக் கேகயத்திற்கு அழைத்திருக்க மாட்டான். தயரதனும் அவனை அங்கு அனுப்பிவைத்திருக்க மாட்டான். மக்கள் நால்வரும் இருக்கும் போது முடிபுனை விழாவினைத் தயரதன் மேற்கொண்டிருந்தால், கூனி ஐயுறவும் அதுவழி நிகழ்ந்த நிகழ்ச்சிகளும் நிகழ்ந்திரா.

முனிவன் இராமனைப் பெண்கொலை புரிவித்து, மணத்தையும் கூட்டிப் பரதனையும் பிரிப்பதற்கு உரியவற்றை இயற்றி இராமன் முடிசூடுவதில் தடை நிகழுமாறு செய்து விடுகின்றான். பெண்கொலையும் பரதன் இன்மையுமே தயரதன் முடிசூட விரைந்ததற்கும், கூனி சூழ்ச்சிக்கும், கைகேயி வரம் கேட்டதற்கும் காரணமாயின. இது முனிவன் கருதிய பெரிய காரியம் முடிப்பதற்குச் செய்த சூழ்ச்சியாகும்.

கோசிகன் இராமன் முடிக்க வேண்டிய பெரிய காரியம் உள என்று கூறியது இராவணவதத்தைக் குறிப்பதாகும். இராவண வதம் இறுதியென்ருலும், அவன் முடிக்க வேண்டிய பெரிய காரியங்கள் விராதன், கரன், மாரீசன், கபந்தன், மருகாந்தரத்து வாழும் அரக்கர்கள், வாலி, கும்பகருணன் இவர்களைக் கொன்று தேவர்களின் இடுக்கண் தீர்த்தலாகும். இது முடிக்க இராமன் காடு புகவேண்டும். காடு புக ஒரு காரணம் வேண்டும்.

இராவணன் முதலியோரை வதைப்பதற்கு இராமனுக்குத் தவ ஆற்றலும் படைக்கலச் சிறப்பும் அமையவேண்டும். அவற்றிற்குத்தான் கொடுத்த படைக்கலத்தோடு பரசுராமன் தவஆற்றலையும் பெற வழி வகுத்தான் கோசிகன். இவை யெல்லாம் அமைந்தாலும் இராவணன்பால் அறக்கேடு புகுதற் குரிய காரணம் வேண்டும். அது சீதை வழி நிகழ அவளை இராமனுக்கு மணங்கூட்டுவித்து, தாடகையை வதைத்த பெண் கொலைக் குற்றத்தால் கைகேயி வழி இராமனை முடி துறப்பித்து அவனைக் காட்டிற்கு மனைவியோடு அனுப்ப, ஆண்டுச் சீதையை இராவணன் நயக்கின்ருன். அது வழி அவனைக் கொல்லுதற் குரிய பிறன்மனை நயத்தல் என்ற பெருங்குற்றம் அவன்பால் ஏறவேண்டிய அடிப்படைகளையெல்லாம் செய்து விடுகின்ருன் கோசிக முனிவன்.

இவ்வாறு கோசிக முனிவனுல் இராமன் காடு புகுந்தது, அதுவழி அவன் தந்தை இறந்தது, பரதன் அல்லலுற்றது, காட்டில் இராமன் தன் மனைவியைப் பிரிந்தது, பின் அவளைத் தேடிப் போர் மேற்கொண்டது ஆகிய நிகழ்ச்சிகளையெல்லாம் இராமனே நீடு நினைந்து, போரில் இலக்குவனை இந்திரசித்து பிரம்மாத்திரத்தால் பிணிப்ப, அதனுல் உணர்வற்று வீழ்ந்து கிடந்த இலக்குவனைக் கண்டு மனம் பதறி,

''வேள்விக்கு ஏகி வில்லும் இறுத்து ஓர்விடம் அம்மா
வாழ்விக்கும் என்று எண்ணினென் முன்னே
வருவித்தேன்
சூழ்வித்து என்னைச் சுற்றினரோடும் சுடுவித்தேன்
தாழ்வித்தேனே இத்துணை கேடும் தருவித்தேன்''

(யுத் பிரம்மாத்திரம் 8783)

என்று அரற்றிப் புலம்பும்போது குறிப்பிடுகின்றான்.

இங்கு இராமன், தான் வேள்விக்கு ஏகி, பெண் கொலை புரிந்து பயிரா எல்லைப் பாதகனாகிப் பின் வில்லிறுத்துச் சீதையை மணங்கொண்டு, பின் முடி துறந்து காட்டிற்கேகிச் சீதையைப் பிரிந்து, பின் இராவணனோடு பகை கொண்டு போரும் மேற் கொண்டு அதில் இலக்குவனை இழக்க நேர்ந்த துன்பம் கண்டு உடைந்து பேசுவது காணலாம். ''வேள்விக்கேகி'' என்று கூறி நிறுத்திப் பின் வில்லிறுத்த நிகழ்ச்சியைக் கூறுகின்றான். வேள்விக்கேகிச் செய்த பெண்கொலை தானாக முனைந்து செய்யாதது. அது முனிவன் ஏவியதால் செய்தது. அதனை வெளிப்படையாகக் கூறுதல் முனிவனைக் குறை கூறுவதாகும் என்று கருதி இராமன் இதனை மறைத்தே பேசுகின்றான். முனிவன் வழி வந்த இச்செயலை இராமகாதையில் கூனியை அன்றி வேறுயாரும் வெளிப்படையாகக் கூறினர் அல்லர்.

---

# 22. புரந்தரன் செய்த பெரும் தவம்

இந்திரன் முதலிய தேவர்கள் திருமாலிடம் சென்று இராவணனும் அவனைச் சார்ந்தவர்களும் தமக்கு இழைக்கும் கொடுமைகளைக் கூறித் தங்களை உய்விக்க வேண்டிய போது,

''வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடு உடை விரிகொள் பாயலும்
இளையர்கள் என அடி பரவ ஏகி நாம்
வளை மதில் அயோத்தியில் வருதும் ... ''

(பால திருவவதா,ப் 20?)

என்று கூறிய வண்ணம் திருமால் இராமனாகப் பிறந்து, கோசிகனோடு காடுபுகுந்து, தாடகை வதம் புரிந்த பிறகு இராவண வதைக்குத் தொடராது மீண்டும் அயோத்திக்கு வரக் காரணம் ஒன்று வேண்டும்.

அங்கதன் இராவணனிடம் தூது சென்று இராமன் கேட்டு வர விடுத்ததாகப் பல வினாக்களை அவன்பால் எழுப்புகிறான் அவற்றுள் ஒன்று,

''பருந்துணப் பாட்டி யாக்கை படுத்த நாள் படைஞரோடும்
... ... .. வந்திலாதான் இனிச் செய்யும் ஆண்மை
யுண்டோ ''

(யுத் அங்க தூதுப் 7132)

என்பது.

இக்கேள்வியின்படி இராவணன் பாட்டி மடிந்ததும் பாட்டிக்காக வராதவன் இனிமேல் வந்து செய்யும் ஆண்மைச் செயல் என்ன இருக்கின்றது என்பதாகும். தாடகை வதைக்கப் பெற்றதும் இராவணன் இராமனோடு பொருதற்கு வந்திருக்க வேண்டும்.

மாரீசனை அமைச்சனாகப் பெற்ற இராவணன், அவன் இராமனால் கடலிடை உய்க்கப் பெற்றவன் என்பதும், இராமனுக்கு அஞ்சியே துறவியாகி உய்யக் கருதி இராவணன் அவையை

நீங்கி வாழ்ந்தான் என்பதும் அறியானு ? இராவணன்இதனை அறிந்தாலும் அறியாவிட்டாலும் கும்பகருணன். வீடணன், மாலியவான், மகோதரன் இவர்களும் இதனை அறியாரா? அறிந்திருந்தால் தாடகை வதம் பற்றிக் கவலா திருந்தது ஏன்? கரனைக் கொன்ற செய்தியைப் பெரிதாகப் பேசும் கும்பகருணன் முதலியவர்கள் தாடகையைக் கொன்ற செய்தியையும், சுபாகுவைக் கொன்ற செய்தியையும் பேசினுர் அல்லர். வில்லிறுத்த செய்தியைப் பேசிய வீடணன் தாடகை யையும் சுபாகுவையும் குறித்தானல்லன். இதற்குரிய காரணம் அறியப்பெற வேண்டும்.

சூர்ப்பனகை மூக்கரிந்த செய்தியின் தொடர்ச்சி இராவணன் இராமனேடு இயற்றும் போராகாது காமமாகிப் போகின்றது. அது சீதையைக் கவர்வதில் வந்து முடிய அது பின்னர் இராமன் மனைவியை மீட்கும் போராகின்றது.

இது திசை வெற்றிமேற்கொண்டவனும், மூவரை வென்ற வனும் அஃதாவது ''நாடுளதனையும் ஓடி நண்ணலர் காண்கிலாது'' பெருந் திசை யானைகளிடம் சென்றவனுமாய இராவணனிடம் பகைத்து மேற்கொண்ட போராகும்.

இராவணனிடம் இராமன் பகைத்துப் போர் மேற்கொள்ளும் பல வாய்ப்புகள் இருந்தும் அவன அது செய்தானல்லன். மாரீசனிடம் சீதையால் தான் பெற்ற காதலைப் புலப்படுத்தி அவனைப் பெறவழி கேட்டபோது அவன் முன் நிகழ்ந்த போரைக் குறிப்பிட்டு அதில் தன் தாயும் தம்பியும் இறந்ததைக் கூறுகின்ருன்.

''எம்பிக்கும் என் அன்னை தனக்கும் இறுதிக்கு ஓர்
அம்புய்க்கும் போர் வில்லி தனக்கும் அயல் நிற்கும்
தம்பிக்கும் என் ஆண்மை தவிர்ந்தே தளர்வுற்றேன்
கம்பிக்கும் என்நெஞ்சு அவன் என்றே கவலகின்றேன்''

(ஆர. மாரீசன்வதைப் 3350)

இவ்வாறு கூறிப் பல அறிவுரையும் அறவுரையும் கூறிய பின்னும் இராவணன் மாரீசனைச் சினந்து பேசுகையில்,

"என்ன உரை இத்தனையும் எத்தனையும் எண்ணிச்
சொன்னவனை ஏசின அரக்கர்பதி சொன்னான்
அன்னை உயிர் செற்றவனை அஞ்சி உறைகின்றாய்
உன்னை ஒருவற்கு ஒருவன் என்று உணர்கை நின்றே"

(ஆர. மாரீசன் வதைப் 3361)

என்று கூறுகின்றான்.

இங்கு இராவணனே தாடகையை இராமன் கொன்றதைக் குறிப்பிடுகின்றான். அதே இராவணன் அடுத்து,

"மூவுலகினுக்கு ஒரு நாயகம் முடித்தேன்
மேவலர் கிடைக்கின் இதன்மேல் இனியதுண்டோ"

(ஆர. மாரீசன் வதைப் 3363)

என்கின்றான்.

இராமன் தாடகையை வதைத்ததோ அன்றிச் சுபாகுவைக் கொன்றதோ இராவணனுக்கு ஒரு வீரச் செயலாகப்படவில்லை. கரன் மாண்டதும் சூர்ப்பனகை உறுப்பறை கொள்ளப் பெற்றதுங்கூட ஓர் வியத்தகு செயலாகப் படவில்லை. மனிதர்கள் இச்செயலுக்கு ஆவரோ என்பதே அவன் கொண்ட எண்ணம்,

சூர்ப்பனகை இராம இலக்குவர் அழகில் ஈடுபட்டுக் காமங்காரணமாக அவர்களை வியந்தாளேயன்றி மனித வெறுப்புக் காரணமாக இகழ்ந்த எண்ணமே கொண்டவள். அவள் தன் உறுப்பூறு பெற்றபின்,

"உருப்பொடியா மன்மதனை ஒத்துளரே ஆயினும் உன்
செருப்படியின் பொடியொவ்வா மானிடரைச் சீறுதியோ
நெருப்படியில் பொடிசிதற நிறைந்த மதத் திசையானை
மருப்பொடித்த பொருப்பிடிய தோள் நிமிர்த்த
வலியானே"

(ஆரண். சூர்ப்பனகைப் 2933)

என்று இராவணன் ஆற்றல்களைக் குறித்து அழைத்து ஓலமிடுகிறாள். அடுத்து,

*''மரன் ஏயும் நெடுங்கானில் மறைந்துறையும் தாபதர்கள்*
*உரனேயோ அடலரக்கர் ஒய்வேயோ உற்றெதிர்ந்தார்*
*அரனேயோ அயனேயோ அரியேயோ எனும் ஆற்றல்*
*கரனேயோ யான் பட்ட கையறவு காணுயோ''*

(... ... ... 2935)

என்பதால் இராவணன் கரன் போன்றவர்கள் இராமனை வெல்பவர் என்ற கருத்துடையவளே. இராவணனைத் தனியாக நினைத்தவள் கரனை நினைத்தவள் இருவரையும் ஒருங்கு நினைத்துப் புலம்புகின்ருள்.

*''உரன் நெரிந்து விழ என்னை உதைத்துருட்டி மூக்கரிந்த*
*நரன் இருந்து தோள் பார்க்க நான் கிடந்து புலம்புவதோ*
*கரன் இருந்த வனமன்ரு இவை படவும் கடவேனே*
*அரன் இருந்த மலை எடுத்த அண்ணுவோ அண்ணுவோ''*

(... ... ... ... ... 2937)

என்கின்ருள்.

பின் இராமனிடம் முறையிட்டுப் பேசும் போதும் தன் குலப் பெருமை விடாது பேசுகின்ருள். தன் மூக்கு முதலியவற்றை இலக்குவன் அரிந்த செய்தி தெரிந்தால் அரக்கர்கள் உலகத்தையே அழித்து விடுவார்கள் என்று கூறுகின்ருள். அப்பொழுது இராமன்,

*''நாடறியாத் துயரிழைத்த நவையரக்கி நின் அன்னை*
*தன்னை நல்கும்*
*தாடகையை உயிர் கவர்ந்த சரம் இருந்தது அன்றியும்*
*நான் தவம் மேற்கொண்டு*
*தோள் தகைய துறுமலர்த்தார் இகலரக்கர் குலந்*
*தொலைப் பான் தோன்றி நின்றேன்''*

"தரையளித்த தனி நேமித் தயரதன் தன்
புதல்வர் யாம் தாய் சொல் தாங்கி
விரையளித்த கான் புகுந்தேம் வேதியரும்
மாதவரும் வேண்ட நீண்டு
கரையளித்தற்கு அரிய படைக் கடலரக்கர்
குலம் தொலைத்துக் கண்டாய் பண்டை
வரையளித்த குலமாட நகர் புகுவோம்
இவை தெரிய மனக்கொள் — ... — — —"

(ஆர. சூர்ப்பனகை 2964)

என்றான். இங்கு இராமன் தான் ஒரு மனிதன் என்று குறித்த தோடு வந்த காரியத்தைக் குறிப்பிட்டு அரக்கர்களை ஒழிக்கக் காத்திருப்பதாகக் கூறுகின்றான்.

ஒருபுடை இராமன் அரக்கர்களை ஒழிக்க வந்ததாகக் கூற, ஒருபுடை இராவணன் மானிடர்களை ஒரு பகையாகக் கொள்ளாது தேவர் தெய்வம் முதலியோரை வென்று பகைப் பாரின்றி வாழ்கின்றான். சூர்ப்பனகையால் சீதையை அறிந்து காமுற்ற அரக்கன் அவளைத் துறவுக் கோலத்தில் வஞ்சிக்கப் போந்து உரையாடிய போது,

"— — ... ... — ... — மானிடர் அரக்கர் தம்மை
மீன் என மிளிருங்கண்ணாய்வேரற வெல்வர் என்னின்
யானையின் இனத்தையெல்லாம் இளமுயல் கொல்லும்..."

(ஆர. சடாயுஉயிர் நீத்த 3473)

என்கிறான்.

அது கேட்ட சீதை மானிடராகிய இராம இலக்குவர்களால் அழிந்த அரக்கர் கூட்டத்தையும் மாவீரர்களையும் குறிப்பிடுகின்றாள்.

"மின் திரண்டனைய பங்கி விராதனும் வெகுளி பொங்கக்
கன்றிய மனத்து வென்றிக் கரன் முதல் கணக்கிலாரும்
பொன்றிய பூசல் ஒன்றும் கேட்டிலிர் போலும்......"

(ஆர. சடாயு உயிர் நீத் 3474)

என்கின்ருள் சீதை இராவணனிடம்.

இது கேட்ட இராவணனுக்குச் சினம் வருகின்றது. இதனைக் கூறப்போந்த கம்பர்,

"... ... ... ... ... ... உருகெழு மானம் ஊன்ற
மானிடர் வலியர் என்ற மாற்றத்தால் சீற்றம்
வைத்தான்

(ஆர. சடாயு உயிர் நீத் 3476)

என்கின்ருர். அச்சீற்றச் சிறப்பில் இராவணன்,

"... ... ... ... ... ... ... அச்சிறுவலிப் புல்லியோர்கட்கு
ஈறுஒரு மனிதன் செய்தான் என்றெடுத்து இயம்பிஞயேல்
தேறுதி நாளையே இவ்விருபது திண்டோள் வாடை
வீறிய பொழுது பூளை வீ என வீவனன்றே"

(... ... ... ... ... ... ... 3477)

என்று தன் இருபது தோட் பெருமை கூறக் கேட்ட சீதை, இராவணனைச் சிறைவைத்த ஆயிரம் தோளுடைய கார்த்த வீரியனை வென்ற பரசுராமன் ஒரு மனிதன் அல்லனே என்கின்ருள்.

இது கேட்ட போது மாயவேடம் கலைந்து உண்மை வடிவத் தோடு வெளிப்படுகின்ருன் இராவணன். பின்னர்ச் சீதையைச் சாலையோடு எடுத்துச் செல்லும் இராவணன், சீதையிடம் மானிடர் தன்னைப் போரில் வென்று அவளை மீட்பது எங்ஙனம் எனப் பரிகசித்துப் பேசியபோது சீதை,

"... ... ... ... ... ... ... நீ வீரனேல் விரைவில் மற்றுன்
கூட்டமாம் அரக்கர் தம்மைக் கொன்று உங்கை
கொங்கை மூக்கும்
வாட்டிஞர் வனத்தில் உள்ளார் மானிடர் என்ற
வார்த்தை
கேட்டும் இம் மாயம் செய்தது அச்சத்தின் கிளர்ச்சி
அன்ரு"

(... ... ... ... ... 3500)

என்கின்ருள். அப்பொழுதும் இராவணன், சீதையிடம்,

"... ... ... ... ... நங்கை கேள்இது முரணில் யாக்கை
இழிதரும் மனிதரோடே யான் செரு ஏற்பல் என்ருல்
விழிதரும் நெற்றியான் தன் வெள்ளிவெற்பு எடுத்த
தோட்குப்
பழிதரும் ... ... ... ... ... ... ..."

(ஆர. சடாயு உயிர் நீத் 3501)

என்று கூறுகின்ருன்.

அசோகவனத்துச் சிறை வைத்த சீதையிடம் பேசும் போதும், அவள், கார்த்த வீரியனுல் கட்டுண்ட செய்தியைக் குறித்து அறிவுரை கூறியபோதும் காதல் அழிந்து சினம் சிறக்கின்றது. இராவணனுக்குச் சீதை காதலினும் தன் குல வீரப் பெருமையே மிக்கிருப்பதைக் காணலாம்.

"... ... ... ... ... ... ... ... ... ... ... காமத்
தின் திறத்தையும் கடந்தது சீற்றத்தின் தகைமை"

(சுந். காட்சிப் 466)

அனுமன் பொழிலிறுத்த காலை காவலர் ஓடி வனமழித்த துரைத்தபோது இராவணன்,

"... ... ... ... ... ... ... இலங்கையும் சிதைந்தது அம்மா
கோடரம் ஒன்றே நன்றிது இராக்கதர் கொற்றம் ... ..."

(சுந்தர பொழிலிறுத்த. 5486)

என்று இகழ்ந்துரைக்கின்ருன்.

மந்திரமிருந்த இராவணனிடம் வீடணன் அறிவுரை கூறிய போது,

> **"... ... ... ... ... ... ... ... ... ... என்பெரு விறலைக்**
> **கொச்சை மானிடர் வெல்குவர் என்றனை ... ..."**
> (யுத். இராவ. மந்திரப் 6298)

என்கின்றுன் இராவணன்.

இறுதியில் தன் வேலை இராமன்பால் போக்கி அது கொல்லாமை கண்ட இராவணன் தான் வென்ற அத்துணைத் தேவர்களும் அல்லர், இவன் வீடணனுல் குறிக்கப்பெற்ற வேத காரணனுகிய மூலமென்று உணர்ந்துங்கூட,

> **"யாரேனுந்தான் ஆகுக யான் என் தனி ஆண்மை**
> **பேரேன் நின்றேன் வென்றி முடிப்பென் புகழ்பெற்றேன்"**
> (யுத். இராவ. வதைப் 9979)

என்கின்றுன்.

இவ்வாறே மகோதரன், கும்பகருணன், இந்திரசித்து போன்ற அரக்க வீரர்கட்கும் மனிதர்கள் என்றுல் அவர்கள் போருக்கு ஆகும் பெற்றியர் அல்லர் என்பது ஒரு கொள்கை; அங்ஙனமே குரங்கும்.

பரசுராமன், கார்த்தவீரியன், வாலி, அனுமன் இவர்கள் மனிதராகவும் குரங்காகவும் இருந்து பெருவலி படைத்த அரக்கர்களை வென்றதுங் கூட ஏதோ வரங்காரணமாகவும், சாபங்காரணமாகவுமேயன்றி வீரங்காரணமாக அன்று என்பது அரக்கர்தம் கோட்பாடு.

வீடணன் கூட இராவணன் தோற்றதற்குக் காரணம் இராமன் பரம்பொருளாக வந்தது ஒரு காரணமெனினும், இராவணன்பால் அறக்கேடு புகுந்ததும் சாபங்கள் ஏறியதும் காரணமேயன்றி இ ரா வ ண னை வேறு வீரங்காரணமாகக் கொல்லல் ஒல்லாது என்பதை,

*"ஆயிரம் தோளினுனும் வாலியும் அரிதின் ஐய
மேயின வென்றி விண்ணோர் சாபத்தின் விளைந்த
மெய்ம்மை
தாயினும் தொழத்தக்காள்மேல் தங்கிய காதல் தன்மை
நோயும் நின் முனிவும் அல்லால் வெல்வரோ நுவலற்
பாலார்"*

(யுத். இரா. வதைப் 10053)

என்று கூறுவதால் அறியலாம்.

இப்பெற்றியுடைய இராவணன் பாட்டி தாடகை அழிந்த போதும் சுபாகு, கரன் முதலிய வீரர்கள் பட்டபோதும் அச் செய்திகளைக் கேட்டும் வராமைக்குக் காரணம், மனிதர்கள் பெற்றிருந்த வரங்காரணமாக அவர்கள் கொல்லப் பெற்றரே யன்றி வீரங்காரணமாக என்று கருதாமையேயாகும். அடுத்துத் தான் தெய்வங்களை வென்று வெற்றி கொண்டபின் நொய்ய வாழ்க்கையுடையவரும், அரக்கர்களுக்கு உணவாய் அமைபவருமாய மனிதர்களோடு போரிடுவது இழுக்கென்று கருதி ஒழிந்திருக்கின்றான்.

இராவணன் மனிதர்களை யாண்டும்பொருதற்குரிய வீரர் என்று கருதினன் அல்லன். மனிதர்களால் கொல்லப்பெற்ற வர்கள் பெருவீரர்கள் என்பதை அவன் அறிவான். ஆனல் அதே போன்று தானும் கார்த்த வீரியன் போன்ற மனிதர்கள் வழியாகக் கட்டுண்டு தோற்றதையும், வாலியால் பிணிப்புண்டு தோற்றதையும் கூறுவதைக் காணலாம்.

*"அரங்கில் ஆடுவாற்கு அன்பு பூண்டுடைவரம்
அறியேன்
இரங்கி யான்நிற்ப என்வலி அவன் வயின் எய்த
வரங்கொள் வாலிபால் தோற்றனென்..... ............"*

(யுத். இரா. மந்திரப். 6304)

இங்கு வாலியிடம் அவன் தோற்றதற்குக் காரணம் வாலி பெற்ற வரம் என்றும் அது தெரிந்திருந்தால் அவன் வாலியிடம் போருக்குப் போயிருக்க மாட்டான் என்றும், இராமன் வாலியை வெல்லக் காரணம் அவன் மறைந்து எய்ததே என்றும் கூறுகின்ருன்.

*''நீலகண்டனும்நேமியும் நேர் நின்று நேரின்*
*ஏலும் அன்னவர் உடைவலி அவன்வயின் எய்தும்*
*சாலும் நல்வரம் நினைந்து அவன் எதிர்செலல் தவிர்ந்து*
*வாலி தன்னை அம் மனிதனும் மறைந்து நின்றுஎய்தான்''*

(யுத். இரா. வதைப். 6305)

இங்கு இராவணன், இராமன் வாலியின் வரமறிந்து மறைந்து நின்று கொன்றது போன்று தானும் அவன் சூழ்ச்சி அறிந்திருந்தால் அவனுல் வெல்லப் பெருதிருக்க முடியும் என்கின்ருன்.

இவ்வளவும் கொண்டு நோக்கினுல் இராவணன் தாடகை முதல் கரன் ஈருகவுள்ள அரக்கர்கள் அழிவு கேட்டும் 'பருந் துணைப்பாட்டி யாக்கையைப் படுத்த' அன்றே இராமனேடு பொருதற்கு எழாத காரணம் அறியலாம்.

விசுவாமித்திர முனிவனேடு காட்டிற்கு வந்த இராமன் வழி இமையோர் கருத்து முற்றுப்பெறவில்லை. அப்பொழுது இராவணன் காலத்தாழ்ச்சி கொள்ளாதும், இராமனை நொய்ய வன் மனிதன் என்று இழித்து எண்ணுதும் போந்திருப்பானேயாஞல், இராமனுக்குக் கோசிகன் கொடுத்த கடவுட் படை ஒன்று தான் துணைநின்றிருக்கும். பரசுராமனிடம் பெற்ற தவம்கிடைத் திருக்காது. அகத்தியனிடம் பெற்ற வில் முதலியன கிடைத் திருக்காது. முனிவர் பலரது ஆசியும் கிடைத்திருக்காது. தனக்குத் தானே இயற்றிய தவத்தின்பலனும் சார்ந்திருக்காது இராமனுல் இராவணன் பெற்ற மெய்வரங்களை அட்டிருக்க வாய்ப்பில்லை. இராவணனிடம் பிறன் மனை நயந்தான் என்ற உய்தியில் குற்றம் சார்ந்திருக்காது. அனுமன் நட்பின்றியும்

வீடணன் துணையின்றியும் இராமனுல் இராவணனையோ அவன் சுற்றத்தையோ வென்றிருக்க வாய்ப்பில்லை. இதனை, இராமனே இந்திரசித்து இறந்த ஞான்று இலக்குவனிடம் கூறுவதாக,

*''ஆடவர் திலக நின்னுல் அன்று இகல் அனுமன் என்னும்*
*சேடனுல் அன்று வேறோர் தெய்வத்தின் சிறப்பும் அன்று*
*வீடணன் தந்த வென்றி ஈது என விளம்பி மெய்ம்மை*
*ஏடவிழ் அலங்கல் மார்பன் இருந்தனன் இனிதின் இப்பால்''*

(இந்திரசித். வதைப்படலம் 9322)

என்று கம்பர் கூறுவர்.

இராமன் இறுதியில் முடி சூடிக்கொண்டு எல்லோருக்கும் விடை கொடுத்தபோது அனுமனை நோக்கி,

*''மாருதி தன்னை ஐயன் மகிழ்ந்தினிது அருளின் நோக்கி*
*ஆர் உதவிடுதற்கு ஒத்தார் நீயலால் அன்று செய்த*
*பேருதவிக்கு யான்செய் செயல் பிறிது இல்லை பைம்பூண்*
*போருதவிய திண்தோளால் பொருந்துறப் புல்லுக...''*

(யுத். விடைகொடுத்த 10515)

என்கின்ருன்.

இங்கு இராமன் வீடணனையும் அனுமனையும் குறித்துப் பேசுகின்றபேச்சைக் கொண்டு இவர்கள் இருவரும் இல்லாது போனுல், இந்திரசித்தையும் இராவணனையும் இராமனுல் வேறல் அரிது என்பதைக் கொள்ளலாம்.

இராமகாதையின் பாலகாண்டத்துத் தாடகை வதை நிகழ்ச்சியில் இராம இராவணப் போர் தொடங்கியிருந்தால் இராவணனின் வதை நிகழ்ந்திருக்காது. விசுவாமித்திர முனிவன் வேள்வி காக்கச் சென்ற இராமன் தாடகை, சுபாகு முதலியோரை அழித்தும் இராவணன் வந்திலன். கரன், தூடணன் போன்ருேர் அழிந்தும் இராவணன் போந்திலன். இராவணன் சீதையை நயந்து தேடிவந்தானேயன்றி, இராமனைச் சினந்து போந்தான் அல்லன்.

இராவணவதை நிகழ்ந்தாலன்றி இராமாவதாரம் முற்றுப் பெறுதற்கில்லை. இ ந் தி ர ன் வேண்டுகோளால் தேவர் அவதரித்தும், மூவர் முதல்வன் இராமனாகப் பிறந்தும் பயனில்லை. இராவணனோடு இராமன் பகைகொள்ள ஒரு காரணம் வேண்டும். அதுவும் அவனைக் கோறலுக்குரிய உய்தியில் குற்றம் அவன் புரிதல் வேண்டும். இந்த நிகழ்ச்சிக்கு இராமன் காட்டிற்குச் செல்லவேண்டும். காட்டில் இராமன் தவமியற்றலும், முனிவர் ஆசிபெறலும், அகத்தியன் போன்றோரிடம் வில்லும் அம்பும் பெறலும் வேண்டும். இதோடு அனுமன் நட்பும் வீடணன் நட்பும் வேண்டும். இவற்றை இராமன் பெறக் காரணமாக இருந்தவள் கைகேயி.

கைகேயி வரம்வேண்ட, அதனைத் தயரதன் நல்கி இராமனைக் காட்டிற்கேகப் பணிப்ப, அவன் காட்டில் புகுந்து விரதம் பூண்டதும், இராமனோடு கான் போந்த சீதை உலகில் எம்மகளும் பூணாப் பேரழகு பெற்றதும், சூர்ப்பனகை ஆண்டுப் போந்து மூக்கிழக்கப்பெற்றதும் ஆய இவையெல்லாம் இந்திரன் பெற்ற தவமேயன்றி வேறில்லை. இதனை,

*''காந்தையருக்கு அணியனைய சானகியார்*
*பேரழகும் அவர்தம் கற்பும்*
*ஏந்துபுயத்து இராவணனார் காதலும்*
*அச்சூர்ப்பனகை இழந்த மூக்கும்*
*வேந்தர்பிரான் தயரதனார் பணியதனால்*
*வெங்கானில் விரதம் பூண்டு*
*போந்ததுவும் கடைமுறையே புரந்தரனார்*
*பெருந்தவமாய்ப் போயிற்று அம்மா''*

(யுத். இரா. வதைப் 10083)

என்னும் கம்பர் கூற்றால் தெளியலாம்.

இங்குக் கைகேயி எவ்வாறு புரந்தரன் தவத்திற்குக் கருவியாய்ப் பயன்பட்டு இராவணன் வதத்திற்குக் காரணமானாள் என்பது போதரும்.

கைகேயிக்குப் புரந்தரன் பெருந்தவம் உள்ளுணர்வாய் இருந்து உணர்த்தியதால், அவள் மெய்யறிவு தலைப்பட்டுப் பேசுகின்ற பேச்சை உலகியலறிவு படைத்தோரால் உணர முடியாது போயினும், கைகேயியின் உள்ளன்பையும் மனநிலையையும் வளர்ப்புப் பிள்ளையாக வாழ்ந்த இராமனால் உணர முடிந்தது. அதனால்தான் தயரதனிடம் தாரமல்லள் என்று துறந்த அத் தெய்வக் கற்பினளைத் தன் பெரும் தெய்வம் என்று கொண்ட கொள்கையில் தவிர்ந்திலன். அதோடு தயரதன் உள்ளக்கருத்து வழி ஒழுகுவதே அறம் எனக் கொண்ட இராமன், கருத்திலாது தாரம் அல்லள் என்று உரைத்தான் தயரதன் என்று கொண்டு அவனை அன்று கைகேயி வரத்தால் பிணித்துத் திருத்தி வாய்மையும் மரபும் காக்கச் செய்தது போல, இங்கும் தயரதனின் பண்பு காக்க அவனை வரத்தால் பிணித்துத் தாயைத் தாரமாகக் கொள்ளச்செய்து திருத்துவதைக் காணலாம். இவற்றையெல்லாம் கொண்டு நுணுகி நோக்கினால் தேவியின் தூய சிந்தை தெய்வச் சிந்தையால் திரிந்தது என்றால் அது தேவர் காரியம் முடிக்கவும் உலகியலில் கணவனே எனினும் மகனே எனினும் அவர்கள் சொல்வதும் செய்வதும் பிழையானால் அதனை அறத்தெய்வமாய் நின்று அவரவரை அறநெறி நிறுத்தி ஆற்றக்கடவ செயல்களைக்கடை போகச்செய்யவுமேயாம் என்று தெளியலாம்.

---

## 23. தயரதன் வியந்த காட்டாட்சி.

இராமன் தெய்வ வடிவில் வந்த தயரதனிடம் ஒரு கேள்வி கேட்கின்றான். 'என்னை ஈன்ற எம்பிராட்டி தான் பிழைத்ததுண்டோ?' என்பது அது. இவ்வாறு இராமன் கேட்டதும் தயரதனுக்குத் தெளிவு பிறக்கின்றது. அவன் உள்ளத்து கைகேயி தனக்கு வஞ்சம் செய்தாள் என்ற எண்ணம் மாறி அவளுக்குத் தான் செய்த வஞ்சம் உணர்ந்து வாய்மொழி ஒழிந்து வான்புகுகின்றான்.

அதுபோது ஆண்டிருந்த தேவர்கள், இராமன் கைகேயி யின் சொற்கடவாது மேற்கொண்ட அருளாட்சியில் ஏழிரண் டாண்டுகள் முடிவுற்றதைச் சுட்டிக்காட்டி அவனுக்காகக் காத்திருக்கும் பரதன் எரியிடைப் புகாவண்ணம் அவனிடம் சென்று தன் சொல்லைப் போற்றுமாறு இராமனிடம் கூறி அகல்கின்றனர்.

*''வஞ்சர் இல்லை இவ்வண்டத்தின் எனும்படி மடித்த*
*கஞ்ச நாள் மலர்க் கையினுய அன்னை சொல் கடவாது*
*அஞ்சொடு அஞ்சு நான்கு என்றெணும் ஆண்டுபோய்*
*முடிந்த*
*பஞ்சமிப் பெயர் படைத்துள திதி இன்று பயந்த''*

(யுத். மீட்சிப். 10235)

பின்னர் இராமன் அயோத்தி புகும் வழியில் முன்னர் ஊண்ட பரத்துவனைக் காண்கின்ருன். அவன் இராமன் அன்று கைகேயியிடம் ஏன்று வந்த அருளாட்சியை நிறைவேற்றி யதைக் குறிப்பிடும்போது,

*''விராதனும்கரனும் மானும்விறல்கெழு கவந்தன் தானும்*
*மராமரம் ஏழும் வாலி மார்பமும் மகர நீரும்*
*இராவணன் உரமும் கும்பகருணனது ஏற்றம் தானும்*
*அராவரும் பகழி ஒன்ருல் அழித்து உலகு அளித்தாய்*
*ஐய''*

(யுத். மீட்சிப். 10286)

என்று கூறி இராமன் வினைமுடித்த செய்தியைக் குறிப்பிடு கின்ருன்.

பின்னர் இராமன் பரதனை வந்து காண்கின்ருன். அதன் பின்னர் தாயரைக் காணவந்த இராமன் கைகேயிக்கு முதல் வணக்கம் இயற்றிப் பின்னர் மற்றைய இருவரையும் வணங்கு கின்ருன். பின்னர் எல்லோரும் நந்தியம்பதியினின்றும் நீங்கி அயோத்தி புகுகின்றனர். அப்பொழுது இராமன் தேரில்

வீற்றிருக்க பரதன் கோல் கொண்டு தேரினைத் தூண்ட இலக்குவன் குடைபிடிக்கச் சத்துருக்கனன் கவரி இரட்டச் செல்கின்றனர்.

"ஊழியின் இறுதி காணும் வலியினது உயர் பொன்
தேரின்
ஏழ் உயர் மதமா அன்ன இலக்குவன் கவிகை ஏந்த
பாழிய மற்றைத் தம்பி பால்நிறக் கவரி பற்ற
பூழியை அடக்கும் கண்ணீர்ப் பரதன் கோல் கொள்ளப்
போனான்"

(யுத். திருமுடி சூ டு 10456)

இக் காட்சிதான் தயரதன் மிதிலையில் கண்டு உவந்தது. இத்தகைய ஆட்சி யினைத்தான் இராமனுக்குத் தந்து உவக்கக் கருதினான் அவன். ஆண்டுத் தயரதன் கண்ட காட்சியை,

"அனையதோர் தேரினில் அருணன் நின்றெனப்
பனிவரு மலர்க் கண்நீர் பரதன் கோல் கொளக்
குனிசிலைத் தம்பி பின் கூட ஏனயன்
இனியபொற் கவரி கால் இயக்க ஏகினான்"

(பால. கடிமணப் 1317)

என்பர் கம்பர்.

தயரதன் மிதிலைக்குப் படையோடும் பிற செல்வங்களோடும் சென்று அவற்றை இராமனிடம் தந்து சேனையோடு மிதிலை நகர வீதி வழியாகச் சனகன் அரண்மனைக்குச் செல்லப் பணித்த போது,

"சான்றெனத்தகைய செங்கோலினான் உயிர்கள் தாம்
ஈன்ற நற்றாய் எனக் கருதுபேர் அருளினான்
ஆன்ற இச் செல்வம் இத்தனையும் மொய்த்து அருகுறத்
தோன்றலைக் கொண்டு முன் செல்க ......"

(பால. எதிர்கொள். 1142)

எனச் சொல்லினுன். இவ்வாறு தயரதன் செல்வத்தை அளித்தபோது அவனைப்போல் சேனை மாக்கள் அனைவரும் மகிழ்ந்த மகிழ்ச்சியை உணர்த்த முடியாதது என்பதைக் கம்பர்,

*''காதலோ அறிகிலம் கரிகளைப் பொருவினுர்*
*தீதிலா உவகையும் சிறிதரோ*
*கோதை சூழ் குஞ்சி அக் குமரர் வந்து எய்தலும்*
*தாதையோடு ஒத்தது அத்தானையின் தன்மையே''*

(.........................1143)

என்பர். இங்கும் மக்கள் சென்ற காட்சியை

*''தொழுது இரண்டு அருகும் அன்புடைத் தம்பியர் தொடர்ந்து*
*அழிவில் சிந்தையில் உகந்து ஆடல் மாமிசை வரத்*
*தழுவு சங்குடன் நெடும் பணை தழங்கிட எழுந்து*
*எழுதரும் தகையதோர் தேரின்மேல் ஏகினுன்''.*

(பால. எதிர்கொள். 1144)

என்கின்ருர் கம்பர்.

இந்தக் காட்சியைத் தயரதன் மக்கட்கு முடிபுனைவித்துக் காணக் கருதினுன். அது கோசிக முனிவன் செய்த சூழ்ச்சியாலும், இராமன் செய்த செயலாலும், கூனியின் கூற்ருலும், கைகேயியின் வரத்தாலும், தயரதனின் கடுஞ்சினத்தாலும், இமையோர் மாயையாலும், அவர் பெற்ற நல்வரத்தாலும், அல்லவர் இயற்றிய அறத்தாலும் தடையுற்று அவனுல் காண முடியாது போயிற்று.

பரதன் இராமனை அயோத்திக்கு அழைத்து வந்து இலங்கையினின்றும் வந்த வீடணன், சுக்கிரீவன், அனுமன், சாம்பன்போன்ற அனைவரோடும் மகிழ்ச்சியாக இருந்த நாளில் சுக்கிரீவன் பரதனை நோக்கிஇராமனுக்குக் காப்பு நாள் அணியும் நாள் குறிக்க வேண்டுகின்ருன். அப்பொழுது பரதன்

எழுகடல் நீரும் கொணர அனுமனை வேண்டிப் பின்னர் வசிட்டனை அழைக்கின்ருன். அதில் இராமன் அமர்ந்த பிறகு இராமன் நாட்டாட்சி மேற்கொள்ளுதற்குக் காப்பு அணியும் நாள், நாளை என்கின்ருன். வசிட்டன் இராமனுக்கு, உரிய தெய்வ நீராட்டெல்லாம் அவன் செய்கின்ருன். பின்னர்,

*''அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த*
*பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரிபற்ற*
*விரை செறி குழலி ஓங்க வெண்ணெயூர்ச் சடையன்*
*தங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்*
*மௌலி''*

(யுத். திருமுடி சூட். 10491)

என்கின்ருர் கம்பர்.

பின்னர் இராமன் தன் முடியினைப் பரதனுக்கு அளித்து அவனைச் செங்கோல் நடாத்துமாறு பணித்துத் தான் உலகியற் போகங்களில் திளைத்து வாழ்கின்ருன். இதனை,

*''விரதநூல் முனிவன் சொன்ன விதிநெறி வழாமை நோக்கி*
*வரதனும் இளைஞற்கு அங்கண் மாமணி மகுடஞ் சூட்டி*
*பரதனைத் தனது செங்கோல் நடாவுறப் பணித்து நாளும்*
*கரைதெரி விலாத போகக் களிப்பினுள் இருந்தான் மன்னே''*

(யுத். திருமுடி சூட்டு. 10495)

என்று கூறுகின்ருர் கம்பர்

இராமன் தன் அரசினைத் தான் ஏற்று நடத்தாமல் தம்பி பரதனுக்கு அளித்து இன்ப நுகர்ச்சிகளில் திளைக்கின்ருன். இங்கும் அவன் ஆட்சிப் பொறுப்பினை ஏற்பதில் ஒரு மகிழ்ச்சி உடையவனுகவோ அல்லது பற்று உடையவனுகவோ விளங்கக் காணேம். அன்று கைகேயி வரத்தினுல் இராமனைக் காட்டிற்கு அனுப்பாது இருந்திருப்பாளேயானுல் தயரதன் தந்த அரசினை ஏற்ற இராமன் அவன் ஏவலுக்குத் திறம்ப அஞ்சி ஏற்றி

ருந்தால் அரசைப் பரதனிடம் கொடுத்துத் தாடகையைக் கொன்ற பழி போக்கத் தானே தவமேற்கொண்டும் புண்ணியத் துறை படிந்தும் துறவு வாழ்க்கையே வாழ்ந்திருப்பான். இராமன் கரைதெரிவிலாத போகக் களிப்பினுள் இருக்கத் துணை செய்தவள் கூனிமொழிக்கு இசைந்த தெய்வக் கற்பினுள் கைகேயி ஆவள்.

இராமன் முடிபுனைந்து ஆட்சிப் பொறுப்பைப் பரதனிடம் ஒப்படைத்து இனிது வாழ்ந்தவன், தன்னோடு வந்தார் அனை வரையும் அவரவர் உறைவிடத்திற்கு அனுப்பிவிட்டு உலகாண்ட பெற்றியை உணர்த்தும் போது,

''அய்யனும் அவரை நீக்கி அருள் செறி துணைவரோடும்
வய்யகம் முழுதும் செங்கோல் மனுநெறி முறையில் செல்ல
செய்ய மாமகளும் மற்றச் செகதல மகளும் சற்றும்
நய்யுமாறு இன்றிக் காத்தான் நானிலப் பொறைகள்
தீர்த்தே''

''உம்பரோடு இம்பர்காணும் உலகமோர் ஏழும் ஏழும்
எம்பெருமான் என்று ஏத்தி இறைஞ்சி நின்று ஏவல் செய்ய
தம்பியரோடும் தானும் தருமமும் தரணி காத்தான்
அம்பரத்து அனந்தர் நீங்கி அயோத்தியில் வந்த வள்ளல்''
(யுத். விடைகொடுத்த. 10531&10532)

எனக் குறிப்பிடுவர் கம்பர்.

அருளும் இரக்கமும் அடிப்படையாகிக் கிடந்த அரசமா தேவி கைகேயியின் தூய சிந்தை திரிந்து தெய்வச்சிந்தையாகி உலகியலார் கூறும் அருளின்மையும் இரக்கமின்மையும் ஏற்று அழிவில் சிந்தையாகி அதனுல் அவள் இடரிலா முகமும் படைத்து விடுகின்ருள். கைகேயி இங்ஙனம் பூண்ட திரிபும் படைப்பும் இராமனின் பெரும் புகழை உலகளாவச் செய்த தோடு இன்று எல்லோரும் அவன் பரக்கும் புகழ் அமுதத்தைப் பருகி இன்புறச் செய்துள்ளன.

இச் செயலுக்கு இராவணன் முதலிய அரக்கர்கள் செய்த பாவமும், அரக்கர் அல்லாத விராதன், சபரி, வீடணன் போன்ருேர் இயற்றிய அறமும் உறுதுணையாக நின்றன. இதனைக் கம்பர்,

*''அரக்கர் பாவமும் அல்லவர் இயற்றிய அறமும்*
*துரக்க நல்அருள் துறந்தனன் தூமொழி மடமான்*
*இரக்கம் இன்மை யன்ருே இன்று இவ்வுலகங்கள் இராமன்*
*பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின்றனவே''*

(அயோ. மந். சூழ்ச். 1573)

என்று கூறுவர்.

காப்பிய முடிவினைக் கம்பர் தொடக்கத்திலே அமுதமென்று கூறி அதனை இனி வழங்க இருக்கும் தெய்வக் கற்பினுள் கைகேயியின் திறத்தைத் தொடக்கத்தே இங்ஙனம் உரைத்துப் போந்தார் என்ருல், அவர் கைகேயியைப் பற்றிக் கொண்ட மனநிலை யாதெனப் போதரும். இடையிடையே வழங்கிய வன் சொற்களெல்லாம் அவள் நல்லருள் துறந்தும் இரக்கமின்றியும் அருள் விளைக்கச்செய்த செயல் என்று காணுது உலகியல் நோக்கி யுரைத்த கூற்றுக்களாகும். தெய்வக் கற்பினுள் திறத்தை என்றும் தெளிவுடைய இராமன் கூற்ருய் 'என்பெருந் தெய்வம்' என்று அவன் வணங்கும் தெய்வம் அவனை வணங்கும் நமக்கும் தெய்வமென்று கம்பர் காட்டிப் போந்த நுட்பம் நோக்கி மகிழற்பாலது.

---

# 24. இடைப்பிறவரல்

இதுகாறும் கம்பர் கூறியாங்கு யான் காட்டிய கைகேயி யின் பண்பாட்டினைக் கண்டோர்க்கு அவள் தூயசிந்தைகுறித்து ஐயுறவு தோன்றற்கில்லை. எனினும் கம்பர் கையாண்ட சில சொற்ருெடர்களும், கைகேயி புரிந்த சில செயல்களும் அவள் பண்பாடு குறித்து மருட்கை பிறப்பிக்கும். அம்மயக்கம் போக்க வும், அவள் பண்பாட்டில் ஒரு தெளிவு கொள்ளவும் பின்வரும் தலைப்புகளின் இடைப்பட்ட செய்திகள் துணை புரியும்.

# 25· கைகேயி மகிழ்ந்து துயிலக்காரணம்

தயரதன் துறவு பூண உறுதிகொண்டு அவையோரிடம் அச்செய்தியைக் கூறி அவர் இசைவு பெறுகின்ருன். அதன் வண்ணம் தயரதன் துறப்பதென்பது உறுதி. அங்ஙனமே அவன் இராமனுக்கு நாடு தருவதாகக் கூறிய வண்ணம் கொடுப்பதும் உறுதி. தயரதன் துறவுகாரணமாகக் காட்டிற்குச் சென்ருல் இராமன் நாட்டாட்சி மேற்கொண்டு அயோத்தியில் இருப்பான். தயரதன் மகனைப்பிரிந்து புத்திரசோகத்தால் உயிர்விடுதல் உறுதி. இவ்வாறு புத்திரசோகத்தால் அஃதாவது முதியவன் சாபத்தால் உறுதியாகக் கழியும் உயிரைத் துறவு நெறி நின்று மார்க்கண்டேயனைப் போலத் தவிர்த்துக் கொள்ளக் கருதுகின்ருன். தயரதன் புத்திரசோகத் தால் உயிர் விடாதிருக்க வேண்டும். அதேபோது கூனியால் தயரதன் துறப்பதைத் தடுத்தல் ஒல்லாது. இராமன் முடிபுனை வதை முற்றிலும் தடுத்தலும் ஆகாது. தயரதனுக்குத் திடீரென ஏற்படும் புத்திரசோகத்தை இராமன் முடிபுனையாவகை ஒரு பதினன்கு ஆண்டுகட்குத் தடைசெய்து வைத்தால் அது அமையும் என்று கருதுகின்ருள்.

தயரதன் புத்திரசோகத்தால் உயிர்விடும் வாய்ப்புடைய வன் என்பதைக் கூனி அறிந்தவளாதலின் அவள் அது நிகழா வகை அரண் செய்தாள். தயரதனேடு கைகேயி வாழ்ந்த வாழ்வின் பெற்றியை நன்கு அறிந்தவள் கூனி. ''சேணுலாவிய நாளெலாம் உயிர் ஒன்றுபோல்வன செய்து வாழ்ந்தவள்'' என்பதைக் கூனி தெளிவாள். தயரதனே அவை யோரிடம் தான் துறந்து, தன்முடியை இராமனுக்குக் கொடுப்பதாகக் கூறி அம்முடிபுனைவிழாவிற்கு ஆவன செய் கின்ருன். இராமன் முடிபுனைவதும் தயரதன் துறப்பும் ஒன்ருக அமைந்த செயல்கள். தயரதன் துறவு மேற்கொண்டால் அவன் மாடுமனை மக்கள் சுற்றம் என்ற அனைத்தையும் ஒரு கணத்தில் துறந்து போய்விடலாம். அன்றி மனைவியோடு

சென்று வானப்பிரத்தம் மேற்கொண்டு துறவியாதலும் கூடும். தயரதனே இராமனை உயிரிற் பிரியாத அன்புடையவனுக வாழ்கின்ருன். கோசிக முனிவன் வேள்வி காக்க இராமனைக் காட்டிற்கழைத்தபோது தயரதன் பட்ட பாட்டினை அறிந்தவள் கூனி. அத்தகைய மனநிலை உடையவனுக்கு முனிவருடைய சாபம்வேறு ஒன்று உண்டு. இப்பொழுது தயரதன் துறந்தால் அது இராமனை விட்டுப் பிரிவதாகும். அப்பிரிவினுல் இயற்கையாகக் கொண்ட அவன் அன்பு ஒருபுடை அவனைக் கொல்லும். அதற்கு உறுதுணையாக முனிசாபமும் நிற்கும். இப்பொழுது கைகேயி யின் மங்கலநாண் காக்கப் பெறவேண்டும். கைகேயி 'ஒன்றில் காலை அன்றில்' போன்றவளாதலின் தயரதனேடு எந்த நிலை யிலும் அவள் ஒன்றி வாழவேண்டும். அங்ஙனமே இராமனேடு உயிர்ப் பிணிப்புள்ள தயரதன் இராமனைப் பிரியாது வாழ வேண்டும்.

இந்த நிகழ்ச்சி நிறைவேற்றப்பெற வேண்டுமானல் தயரதன் கருத்து முற்றுப்பெறக் கூடாது. தயரதனைக் காக்க இருக்கும் ஒரே வழி இராமனை முடிதுறக்கச் செய்வதே. இராமன் முடிதுறந்தால் அரசுக்கு ஒருவன் வேண்டும். அது காலை அவனையொத்த தகுதியுடைய பரதன் முடிபுனைய வேண் டும். பரதன் முடிபுனைந்து இராமன் காடு சென்று தயரதன் துறவறம் மேற்கொள்ளக் காடு சென்ருல், கைகேயியும் வானப் பிரத்த முறைப்படி தயரதனேடு காட்டில் வாழ்வாள். அப்போது கைகேயிக்கோ தயரதன் உயிருக்கோ எந்த ஏதமும் வாராது.' கடந்த ஞானியும் கடப்பரோ மக்கள் மேல் காதல்' என்ற கூற்றுக்கு இயையத்தயரதனும் கைகேயியும்இராமனேடு பதினன்கு ஆண்டுகள் வாழ்ந்தால், துறவற நெறி தலைப்பட்ட தயரதனுக்குப் புத்திர சோகம் காரணமாகவோ இராமன் பிரிவு காரணமாகவோ உயிர்துறக்கும் நிலை எய்தாமல், நிலையாமை மனம் வந்து ஒரு தெளிவு பிறக்கும் என்பது கூனியின் கொள்கை.

இதைத்தான் தொடக்கத்தில், 'பேரிடர் வந்தபோது உறங்குதியோ?' என்ருள். இந்தப் பேரிடர் என்பது தயரதன் துறப்பும் அதன்வழிக் கைகேயி அவன் பிரிவைத் தாளாது உயிர்விடும் கையறவையும் நினைத்தமையாகும். கூனி சொன்ன முதல் கூற்றிற்கே செவி சாய்த்துக் கேட்டிருப்பாளே யாளுல் அவள் நாடு பெறும் உரிமை முதலிய செய்திகளைப் பேசியிருக்கமாட்டாள்.

இராமனுக்கு முடிகொடுக்கக் கருதிய தயரதன் இராம னிடம் கூறிய காரணம், தான் துறந்து தவமியற்றுவது என்ப தாகும். அவ்வாறு தயரதன் முடிதுறந்து சென்ருல் இராமன் நாட்டில் முடிபுனைந்து வாழ்வான். கைகேயியும் தயரதனும் காட்டில் வானப்பிரத்தம் மேற்கொண்டு இராமனைப் பிரிந்து தனித்து வாழவேண்டும். கைகேயி இராமனைப் பிரிந்து வாழ்ந்த வளல்லள். அதனுல் அவளும் இராமனேடு இருக்கவே விரும்பு வாள். தயரதன் செல்லவிருக்கும் காட்டிற்கு இராமனை அனுப்பிவிட்டால் தானும் தயரதனும் இராமனேடு பிரியாது உடனுறையலாம். அவ்வாறு இருந்தால் தயரதனுக்குப் புத்திர சோகத்தால் வரும் இறப்பும் தவிர்க்கப் பெறும். முதியவர் இட்ட சாபம் தயரதன் மேற்கொள்ளும் தவத்தால் தணியப் பெறும். அரசாட்சிக்குத் தயரதனுக்கும் இராமனுக்கும் பிறகு இருப்பவன் பரதன். அவனைப் பிரிந்திருப்பதில் கைகேயியோ தயரதனே வருந்துவதில்லை. அந்த மகன் பிரிவில் தயரதனுக்கு இறப்பு நிகழ வாய்ப்பில்லை. இதுதான் கூனி கருதியது. அதனை நிறைவேற்றிய கைகேயியைத் தயரதன் பிறழ உணர்ந்தான். பரதனும் அங்ஙனமே கருதி அவலத்திற்கு உள்ளானுன்; ஊரவர் அல்லலுழந்தனர்.

பரதனுக்கு நாட்டாட்சியை முற்றிலும் வேண்டுமென்று கேளாமையும், இராமன் ஒரு பதினன்கு ஆண்டுகளே துறவு மேற்கொண்டு தயரதன் வாழும் காட்டில் வாழ்ந்து, தயரதன்

இராமனையும் தன்னையும் மறந்து துறப்பதற்குப் பதினான்கு ஆண்டுகள் வேண்டுமென்று விழைந்ததும், 'ஏமஞ் சான்ற மக்களோடு' தோன்றிய தயரதன் 'காமஞ் சான்ற கடைக் கோட்காலை' முனிவர் சாபத்தால் ஏற்பட்ட மகன் பாசம் அகன்று அதேபோது துறவால் இறவாமை தலைப்படும் தன்மை பெற்று உய்ய வழிவகுத்ததும் காணும்போது கூனி வழிநின்ற கைகேயி தெய்வக் கற்பினளாகித் தயரதனுக்குச் செய்த தொண்டு போதரும். இவ்வளவும் தயரதன் ஊழ்வினைப் பயனால் விளைந்ததேயன்றிக் கைகேயியின் கொடு வினையால் நேர்ந்ததன்று.

அடுத்துக் கைகேயி இலக்குவனிடம் நாட்டாட்சியை ஏற்றுக் கொள்ளாது பரதனை ஏற்றுக்கொள்ளக் கூறியதற்கும் ஒரு காரணமுண்டு. அங்ஙனமே இராமனைக் காட்டிற்குப் போக்கியதற்கும் வேறு ஒரு காரணமுண்டு.

இராமன், இலக்குவன், பரதன், சத்துருக்கனன் ஆய நால்வரும் சிறுவர்களாக இருந்து விளையாடிப் பொழுது போக்கும் போது அவரவர் பண்பினைக் கண்டவள் கைகேயி. இராமனோடு இலக்குவன் சேர்ந்து பொழுது போக்கியதை,

> **''ஐயனும் இளவலும் அணிநிலமகள்தன்**
> **செய்தவம் உடைமைகள் தெரிதர நதியும்**
> **மைதவழ் பொழில்களும் வாவியும் மருவி**
> **நெய்குழல் உறும் இழை என நிலை திரிவார்''**
>
> (பால. திருவவதாரப் 309)

என்பதால் அறியலாம். இவ்வாறு இராம இலக்குவர்கள் மைதவழும் பொழில் புகுந்து நதியாடி வாவி மருவிக் காட்டு வாழ்க்கையைப் பெரிதும் உவந்தவர்கள். காடு செல்வதில் அவர்களுக்கு உவப்பேயன்றி வெறுப்பில்லை. அவர்கள் விருப்பத்திற்குரியதைக் குறித்தாள் கூனி; அதனை உவந்து தந்தாள் கைகேயி.

அங்ஙனமே பரதனும் சத்துருக்கனனும் தேர் கடாவுதலும் குதிரை இவர்தலும் மறைநூல் ஓதுதலும் ஒழியாது இயற்றினர் என்பதை,

"பரதனும் இளவலும் ஒருநொடி பகிராது
இரதமும் இவுளியும் இவரினும் மறைநூல்
உரைதரு பொழுதினும் ஒழிகிலர் எனையாள்
வரதனும் இளவலும் என மருவினரே"

(... ... ... ... ... ... ... ... ... ... 310)

என்பதால் அறியலாம். இதனால் பரதன் மேற்கொண்ட இளமைச் செயலுக்கு ஏற்ப அவனுக்கு நாட்டாட்சியை ஒப்படைக்கின்றாள் கைகேயி. இவ்வாறு கைகேயி தான் கருதியது முடித்து அறந்தலைப்பட்டு, மங்கலம் காத்த மகிழ்ச்சியில் துயில்கின்றாள். அதனால் அவள் துயிலும் காரணம் அறியாது பிழைபடப் பேசுவது பயனற்றது.

---

# 26. பெண்கொலை புரிவதைத் தவிர்ந்தவர்

இராமாயணத்தில் தயரதன், பரதன் இராவணன் வீடணன், அனுமன் அத்துணை பேரும் தமக்குப் பெண் கொலை புரியுமாறு சினம் சிறந்த போதெல்லாம் அது செய்தல் பாவமென்று ஒழிந்துள்ளனர். பெண் கொலை புரிந்தவர்க்கு 'வரையா நிரயம்' வாய்க்கும் என்று சங்கச் சான்றோர் கூறுவர். இங்கு இராமன் தாடகையைக் கொன்று பெண் கொலை புரிந்தவன். இவன் அக்கொலைக்குப் பிறகு சீதையை மணந்து பரசுராமனைக் காண்கின்றான். இராமனை அவன்சீறிச் சினந்துப் போருக்கழைக்கின்றான். போருக்கழைத்த பரசுராமனிடம் இராமன்,

"பூதலத்து அரசை எல்லாம் பொன்றுவித்தனை
என்றாலும்
வேதவித்தாய மேலோன் மைந்தன் நீவிரதம் பூண்டாய்
ஆதலின் கொல்லல் ஆகாது"

(பால. பரசுராமப்படலம் 1384)

என்று அறம் பேசுகின்ருன். ஆனுல் அவனே இவண் தாடகை யைக் கொன்றிருக்கின்ருன். அதனுல் இராமன் நல்லது கெட்டது அறியாதவன் அல்லன். விசுவாமித்திர முனிவனுக்காகச் செய்த கொலேக்குரிய பாவத்தில் தனக்குப் பங்கில்லே என்ற கருத்தினன் என்றற்கில்லே. இங்கு இராமனே நோக்கிப் 'பரசு ராமனேக் கொல்' என்று கோசிகன் பக்கத்திலிருந்து கூறி யிருந்தால் ஒரு கால் கொன்றிருக்கவுங் கூடும். நல்லதோ கெட்டதோ குருவின் கூற்று, அவன் ஏவியது செய்தலே தனக்கு அறம் என்ற கோட்பாட்டினன் ஆதலின் செய்திருக்கலாம். ஆனுல் அது வழி வரும் பாவத்தில் முற்றிலும் பங்கில்லே என்று அவன் கருதுதற்கில்லே. அறம் மறம் இரண்டைச் சீர் தூக்கி அறப்பங்கு மிகுந்திருப்பதில் பங்கு கொண்டு மறப்பங்கில் பாகம் கொள்கின்ருன். அவன் முடிபுனேகின்ற செய்தியைக் கூனி கைகேயியிடம் கூறும்போது,

*''ஆடவர் நகையுற ஆண்மை மாசுற*
*தாடகை எனும் பெயர்த் தையலாள் படக்*
*கோடிய வரிசிலே இராமன் கோமுடி சூடுவன் நாளே''*

(அயோ. கை. சூழ் 57)

என்கின்ருள். இச்சொல் கைகேயியின் உள்ளத்தில் ஒரு மாற்றத்தை உண்டாக்குகின்றது. இராமனிடம் மகன் என்ற பற்ருல் அவனிடம் இருந்த குற்றம் உணராதிருந்தாள் கைகேயி. இப்பொழுது அவன் பெண் கொலே புரிந்தவன் என்றும் அவன் முடிபுனேகின்ருன் என்றும் கூனி கூறியதும் அவள் உள்ளத்துத் துணுக்கம் ஒன்று பிறக்கின்றது. இராமன் கொலேப் பாவம் போக்காமலும் பழி துடைக்காமலும் முடிபுனேவது முடிக்கும், குடி வழிக்கும் கேடென்று கருதுகின்ருள். இப்பாவந்துடைத்தன்றி இராமன் முடி சூடுவது பிழை என்று கருதுகின்ருள். அதனுல்தான் இராமன் முடி சூடாவகை அது காலேத் தடுத்து அவன் பூழி வெங்கானம் சென்று தாழிரும்

சடைகள் தாங்கிப் புண்ணியத் துறைகள் ஆடித் தாங்கரும் தவமேற்கொண்டு வந்தால் சுடச் சுட நோற்றுச் சுடச் சுடரும் பொன் போல் இராமன் மிளிர்வான். அதுகாலை பாவமற்ற, பழியற்ற, தவம் செய்து வரம் பெற்ற இராமன் முடிபுனைவது பெருமை தரும் என்று கருதுகின்றாள். இராமன் தவமியற்றச் சென்றால் முடிக்குரியார் யார் என்று தயரதன் தவிக்காவண்ணம் பரதனுக்கு அதனைத் தருமாறு வேண்டுகின்றாள்.

கோசலை பரதனிடம் தாய் செய்த வஞ்சனை உனக்குத் தெரியாதோ என்று கேட்டதும்,

*''குரவரை மகளிரை வாளில் கொன்றுளோன்*
*புரவலன் தன்னோடும் அமரில் புக்கு உடன்*
*விரவலர் வெரிநிடை விழிக்க மீண்டுளோன்*
*இரவலர் அருநிதி எறிந்து வெளவினோன்*

(அயோ. பள்ளி. 2289)

*.................நண்ணும் அத்*
*தீயெரி நரகத்துக் கடிது செல்க யான்*

(... ... ... 2291)

என்கின்றான் பரதன்.

மகளிரை வாளிற் கோறல் நிரயம் புகுதற்குரிய குற்றம். இதுபோல் பலவித நிரயங்களையும் அவற்றுள் புகுதற்குரி யோரையும் குறித்துள்ளான். தான் கைகேயி புரிந்த அச் சூழ்ச்சியை அறிந்து அதனைத் தடுக்கா திருந்திருந்தால் மேற் குறித்த நிரயங்களில் புகப்பெறுவேன் என்கின்றான்.

இந்திரசித்து இறந்ததுகேட்டு இராவணன் சீதை பொருட்டால் இத்தகைய கேடெல்லாம் புகுந்தது என்று கொண்டு அவளைக் கொல்லக் கருதி எழுந்தபோது மகோதரன் அவனைத் தடுத்து,

''மங்கையை குலத்துளானை தவத்தியை முனிந்து வாளால்
சங்கை ஒன்று இன்றிக் கொன்றால் குலத்துக்கே தக்கான் என்று
கங்கையம் சென்னியானும் கண்ணனும் கமலத்தோனும்
செங்கையும் கொட்டி உன்னைச் சிரிப்பரால் சிறியன் என்னா''

(இரா. சோகப். 9380)

என்று கூறுகின்றான். கூற்றையும் வென்று வட்டணை கொண்ட இந்திரசித்து மாயாசீதையை வருவித்து அவளை அனுமன் முன் வெட்டக் கருதி ''யான் இவள் ஆவி சிந்துவென்'' என்று கூறுகின்றான். அப்பொழுது அனுமன் அவனிடம் சீதையை வெட்டாது விடுமாறு கெஞ்சும் போது,

''நான் முகனுக்கு ஒரு நால்வரின் வந்தாய்
நூல்முகம் முற்றும் நுணங்க உணர்ந்தாய்
பால்முகம் உற்ற பெரும்பழி யன்றோ
மால்முகம் உற்று ஒரு மாதை வதைத்தல்

''மண் குலைகின்றது வானும் நடுங்கிக்
கண்டுலைகின்றது காணுதி கண்ணால்
என்று நெஞ்சில் இரங்கல் துறந்தாய்
பெண்கொலை செய்கை பெரும்பழியன்றோ''

(மாயா சீதை. 9006, 9007)

என்று கூறுகின்றான்.

அனுமன் இலங்கை மதிலுக்குள் புகுகின்ற போது அவனை இலங்கை மாதேவி தடுத்துப் பொருத போது அவன்,

''அடியா முன்னம் அங்கை அனைத்தும் ஒருகையால்
பிடியா என்னே பெண்இவள் கொல்லின் பிழை என்னா
ஒடியா நெஞ்சத்து ஓரடி கொண்டான் உயிரோடும்
இடியேறுண்ட மால்வரைபோல் மண்ணிடை வீழ்ந்தாள்''

(சுந். ஊர்தேடு. 186)

தயரதன் கைகேயி வரம் கேட்டுப் பிடிவாதம் செய்த போது

"பெண்ணென உட்கும் பெரும் பழிக்கு நாணும்
உள்நிறை வெப்பொடு உயிர்த்து உயிர்த்து உலாவும்
கண்ணினில் நோக்கும் அயிர்க்கும்"

(கைகே. சூழ். 1598)

"நாரியர் இல்லை இஞ்ஞாலம் எங்கும் என்ன
கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்
பூரியர் எண்ணிடை வீழ்வன் என்று பொங்கும்
வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்"

(... ... ... 1605)

"ஒறுப்பினும் அந்தரம் உண்மை ஒன்றும் ஓவா
மறுப்பினும் அந்தரம் என்று வாய்மை மன்னன்
பொறுப்பினும் அந்நிலைபோகிலாளை வாளால்
இறுப்பினும் ஆவது இறப்பது என்று எழுந்தான்"

(... ... ... 1607)

என்றெல்லாம் அஞ்சிப் புலம்புவதை நோக்கின் பெண் கொலை புரிவது என்பது எத்துணை அவலத்திற்குரியது என்பது போதரும்.

ஊழி ஊழியாக அறநூல் உரைத்தோர் உரைத்த பெண் கொலை புரிவதால் வரும் பாவத்தைச் சங்கச் சான்றோர்களும் தெளிவுபடுத்தியிருப்பதைக் காணலாம்.

"பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீயரோ அன்னை"

(குறுந்தொகை 251)

---

# 27. பதினான்கு ஆண்டுகள் என்றதேன்?

இராமனிடம் கைகேயி ஏழிரண்டாண்டு என்றது கூனி குறித்த பதினான்கு ஆண்டினை. பதினான்கு ஆண்டுகள் பரதன் நாடாளவும் பதினான்கு ஆண்டுகள் இராமன் காடாளவும் கூறியது ஒரு நுட்பம் நோக்கியே.

இங்குப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் தவமும் துறையாடுதலும் மேற்கொளப் பணிப்பானேன்? இப்பதினான்கு என்பதில் என்ன புதுமை அடங்கிற்று? இக்கேள்வியைத் தயரதன் கேட்டிருந்தால் எத்தனையோ அவல நிகழ்ச்சிகளைத் தவிர்த்திருக்க முடியும். வசிட்டன், அமைச்சர்கள், ஊர்மக்கள், இலக்குவன், கோசலை, பரதன், குகன், என்ற யாராவது கேட்டிருக்கலாம். இக்கேள்வி இராமாயணம் பயில்வோரால் கேட்கப் பெற்று உலகியற் சட்ட நுணுக்கக் காரணம் காட்டப் பெறுகின்றது. அதன் காரணத்தைக் கைகேயி அறிந்திருந்தாள். இராமன் புரிந்து கொண்டான். இராமன் கோசிக முனிவனோடு வேள்விகாக்கப் போந்து தாடகை என்ற பெண்ணைக் கொன்றுள்ளான். இது மாபாதகத்தில் ஒன்றே. முனிவன் ஏவலேனும், பெண் எனப் பெருந்தகை நினைந்துப் பின் நிகழ்த்தியது. இது கூனியால் இராமன் பண்பில் குறையாகச் சுட்டப் பெற்றது. இப் பெருங்குற்றம் புரிந்தவர், அஃதாவது, பெண் கொலை, மாதா பிதா குரு தெய்வம் இவர்களைக் கொன்றோர் போன்றவர்களுக்கு 'வரையா நிரயம்' வாய்க்கும். வரையா நிரயம் என்பது ஏழேழ் பிறப்பு எடுத்தாலும் தொலைக்க முடியாத குற்றம். பதினான்கு பிறவிகளில் தொலைக்க முடியாத பெண் கொலை புரிந்த குற்றத்தைப் பதினான்கு

பிறப்பிற்கு வேருகப் பதினுன்கு ஆண்டுகள் மேற்கொள்ளும் கடுந்தவத்தாலும் புண்ணியத் துறைபடிவதாலும் கழித்துத் தூயனுய் வரவேண்டுமென்று கருதுகின்ருள் கைகேயி. அதனுல் பதினுன்கு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று வாவென்கின்ருள்.

புண்ணியத் துறை படிந்தோர்க்குப் போகாப்பாவம் போகும் என்பதை இராமன் அறிவான். அதனுல்தான் இராவண வதம் புரிந்து, மீண்டுவரும் போது சீதைக்குச் சேதுவைக் காட்டி,

*''கங்கையொடு யமுனை கோதாவரி நருமதை காவேரி*
*பொங்குநீர் நதிகள் யாவும் படிந்தலால் புன்மை*
*போகா*
*சங்கெறி தரங்கவேலை தட்ட இச் சேதுவென்னும்*
*இங்கு இதின் எதிர்ந்தோர் புன்மை யாவையும் நீக்கு*
*மன்றே''*

(யுத். மீட்சிப்படலம் 10264)

என்கின்ருன். இது இராமன் பெற்ற அநுபவம். இதனுல் கைகேயி இராமனிடம் காடேகச் சொன்னது, அவனையும் அறியாது பகைவரால் சுட்டிக்காட்டற்குரிய கொலைப் பாவம் நீங்கி மறுவற்ருேனுய் அரசேற்க வேண்டுமென்றற்கே. ஆகவே பெண் கொலையால் புகும் வரையா நிரயத்து உய்க்க வல்ல பாவத்தையும் போக்க வல்ல நீர்த்துறை இச்சேது என்று இராமன் கூறியதால் இம்மை மறுமை வாழ்வில் மாசு புகாது காத்தவள் கைகேயி என்பது போதரும்.

உயிரினங்கள் பிறந்திறப்பதுண்டு. அப்பிறப்புக்கள் இம்மை மறுமைகளில் அமையும். அவ்வமைப்பு என்றும் எழுவகையுள் அடங்கும் என்பர்.

*''ஊர்வ பதினொன்று ஒன்பது மானிடம்*
*நீர் பறவை நாற்காலோர் பப்பத்தாம். சீரிய*
*பந்தமாந் தேவர் பதினாலு அயன் படைத்த*
*அந்தமில் தாவரம் நாலைந்து''*

(வளையாபதி)

இது இம்மையிலும் மறுமையிலும் ஆதிசேடன் போன்று ஊர்வனவும், கின்னரர், கிம்புருடர், தைத்திரியர், கந்தர்ப்பர் இயக்கர், விண்ணோர் என்ற தேவர் இனமும், மனு மாந்தாதா முசுகுந்தன் போன்ற மக்கள் இனமும், கருடன் போன்ற தெய்வப் பறவை இனமும், மச்சகன்னி போன்ற நீர் வாழினமும், காமதேனு போன்ற நாற்கால் விலங்கினமும் கற்பகத்தரு போன்ற தாவர இனமும் ஆகும். உலகம் பதினான்கு. அவை மேல் ஏழு, கீழ் ஏழு. இப்பதினான்கு உலகங்களையும் ஆண்டுக்கொரு உலக ஆட்சியாகவோ அன்றி ஒரு நாளைக்கு ஓர் உலக ஆட்சியாகவோ மேற்கொண்டு பதினான்கு ஆண்டுகளே பரதன் ஆளவேண்டுமென்பது அவள் கருத்து, அதனால் 'உலகமெல்லாம் பரதனே ஆள' என்றாள். ஆழி சூழ் உலகத்தை என்னாது உலகமெல்லாம் என்றது பலஉலகத்தைக் குறிக்கும். ''உலகம் யாவையும் தாமுள வாக்கலும்'' என்றதும் ''உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்'' என்றதும் இக் கருத்துடையனவே.

அந்தப் பதினான்கு ஆண்டுகள் பரதன் உலகாட்சி மேற் கொள்ள, இராமன் தாடகை என்ற பெண்ணைக் கொன்ற கொலைப்பாதகம் தீர்த்தற்குப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் அருளாட்சி மேற்கொண்டு ஆண்டுத் தவம் செய்து புண்ணியத் துறைகளாடிப் பூழி வெங்கானம் நண்ணிவரச் சொல்கின்றாள். பதினான்கு கதிகளிலும் பதினான்கு உலகங்களிலும் பிறந்து எண்ணிறந்த காலம் கழிக்கவேண்டிய பெண்கொலை புரிந்த பாவத்தைப் பதினான்கு ஆண்டைய கடுந்தவத்தாலும் புண்ணியத்துறை படிவதாலும் போக்கி வா என்றாள்.

# 28. கவிஞனின் உரிமை

கம்பர், கைகேயி பரதனைப் பயந்தபோது 'மாசறு கேகயன் மாது' என்று கூறி நமக்கு அறிமுகம் செய்கின்றார். அடுத்து அவள் 'தெய்வக் கற்பினாள்' என்றும் அவள் தயரதனோடு வாழ்ந்த வாழ்வை 'சேணுலாவிய நாளெலாம் உயிர் ஒன்று போல்வன செய்து வாழ்ந்தாள்' என்றும், 'தூய சிந்தையுடையவள்' என்றும் பேசுகின்றார்.

அவரே அவளைத் 'தவ்வை' 'தன்னேரிலாத் தீயவள்' 'நாகம் எனும் கொடியாள்' 'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' 'தீயடங்கிய சிந்தையாள்' 'கொடியாள்' 'எரியன்னாள்' மாகயத்தி 'பெண்டிரில் கூற்றமன்னாள்' 'பாபம் முற்றிய பேதை கள்ளக் கைகேசி' 'வன்மாயக் கைகேயி' 'கொள்ளழல் கூற்றம் என்னும் பெயரின்றிக் கொடுமை பூண்டாள்' என்றும் கூறுகின்றார்.

மேற்குறித்த கூற்றுக்களைக் கொண்டு பார்த்தால் கதையின் ஒரு பாதிக்குத் தெய்வக் கற்பினளாகவும் ஒரு பாதிக்குப் பெண்டிரிற் கூற்றமன்னாளாகவும் கைகேயி இலங்குகின்றாள் என்றால், அத்தகைய மாற்றம் இயற்கையானதா அன்றிச் செயற்கையால் ஆனதா என்பது வினா. எந்த உறுப்பினரையும் படைப்பவன் கவிஞன் என்றால் அவனுக்கு அப்படைப்பில் விருப்பு வெறுப்பு ஏற்படக் காரணம் இல்லை. இருந்த படைப்பைப் பற்றி இருந்தபடி பேசுகின்றான் என்றால் கவிஞன் தன்னியல்பில் விதந்து ஒன்று கூறல் முறையாகாது. அது முறையாக வேண்டின் அங்ஙனம் கூறும் கவிஞனுக்கு ஓர் அடிப்படை வேண்டும்.

உலகியலில் கைகேயி தெய்வக் கற்பினாள் ஆவள். காரணம், அவள் இராமனுக்கும் பரதனுக்கும் வேற்றுமை

கண்டாளல்லள். கோசலைக்கும் தனக்கும் வேற்றுமை உணர்ந்தாளல்லள். மந்தரை, இராமனுக்கும் பரதனுக்கும் வேறுபாடு கற்பித்துப் பேசியது கண்டு சினந்து,

> *''...................... .. மனுமுதல் மரபைச்*
> *செயிர் உறப் புலைச் சிந்தையால் என் சொனுய்*
> *தீயோய்''*
>
> (அயோ. மந். சூழ்ச் 1559)

என்றும்,

> *''போதி என்னெதிர் நின்று நின்புன் பொறி நாவைச்*
> *சேதியாது இது பொறுத்தனென் புறம்சிலர் அறியின்*
> *நீதியல்லவும் நெறிமுறை யல்லவும் நினைந்தாய்*
> *ஆதி ஆதலின் அறிவிலி அடங்குதி...............''*
>
> (அயோ. மந். சூழ் 1562)

என்றும் கேட்டது ஆகும்.

அவள் தயரதனேடு வாழ்ந்த காலத்தில் சம்பரத்தானவனேடு தயரதன் பொருத காலத்தில் அவன் வரம் தரும் அளவிற்கு உதவியவள். தயரதன் தன் கண்ணையும் உயிரையுங் கூடக் கைகேயிக்கு ஈயுமளவிற்கு அன்பு காட்டி வாழ்ந்தவள். சேணுலாவிய நாளெலாம் உயிர் ஒன்று போல்வன செய்து வாழ்ந்தவள். இதனுல் அவள் தயரதன் மனைவி என்ற பெருமைக்குரிய தெய்வக் கற்பினளே. இது, அவள் உலகியலில் வாழ்ந்த செம்மை கண்டு புலவன் வியந்து காரணத்தோடு கூறிய கூற்று. அதே புலவன் அவளைத் 'தவ்வை' என்று அழைக்கின்ருன். இதற்கும் அவன் காணும் உலகியற் காரணம் உண்டு.

கைகேயி தயரதனிடம் அவன் முன்னர்க் கொடுத்த வரத்தைப் பெறுதற்குக் கோலங் குலைத்துக் கொண்டிருக்க வேண்டா. வழக்கம்போல் கணவனை வரவேற்கும் முறையில்

மங்கலக் கோலத்தோடே வரவேற்று முன்னர்த் தந்த வரத்தைக் கொடுக்கக் கேட்டிருக்கலாம். அப்பொழுதும் தயரதன் பரதன் நாடாளவும் இராமன் காடாளவும் கேட்கும் வரத்தைக் கொடுக்க மனமின்றி இதுகாலை பேசியது போன்றே துன்புற்று வசைமொழி பகர்ந்திருப்பான். ஆனால் கைகேயி அப்பொழுது ஊடல் முறையில் தயரதன் இல்லாப்போது செய்த கோலமழி செயலைப் புரிந்திருக்கலாம். ஆனால், அவள் தயரதன் வருகையை எதிர்நோக்கி வார்குழல் கற்றை தாங்கிய மலர் மாலையைச் சிதைத்தது, மேகலையை அறுத்துச் சிந்தியது, அஞ்சனம் அழிதர அழுது நிலத்துக் கொடுங்கோலம் பூண்டுக் கிடந்தது ஆய இச்செயல்கள் மங்கல மகளிர் உலகியலில் செய்யத் தகாதன. அவற்றைச் செய்து கிடந்த அவள் கோலத்தைப் புலவன் ‘தவ்வையாம் எனக் கிடந்தனள்’ என்று உலகியலால் குற்றங்கண்டு கூறினான்.

தன் சேய் பரதனுக்கும் பிறள்சேய் இராமனுக்கும் வேறு பாடறியாது ‘இராமனைப் பயந்த எற்கு’ ‘என்று கூறிய அவள் இப்போது, இராமனை, உலகவர் கொள்ளும் வெளித்தோன்றும் பொருளில் ‘சீதை கேள்வன்’ என்றும் பரதனை, ‘என்சேய்’ என்றும் வேற்றுமை கொண்டதோடு உலகியல் வரன்முறை தவிர்ந்து, மனுமுதல் மரபை அழித்து மூத்தவன் இருக்க வேயும் இளையவன் அரசு பெறுதற்கு வரத்தைச் சூழ்ச்சியாகப் பயன்படுத்துவதைக் கண்ட புலவன், ‘தீயவை யாவையினும் சிறந்த தீயாள்’ என்றான். அவள் தன் மகனுக்கு அரசு வேண்டுமென்று கேட்டிருந்தால் கூட அது அவளை அத்துணைத் தீயளாக்கியிருக்க முடியாது. அவள் இராமன்பால் கொண்ட அன்பு, பாசம், பழகிய முறை அத்துணையும் போலியானவை என்று அழைக்கப்பெற்றுச் சூழ்ச்சிக்காரி, தன்னலமுடையள் என்ற பழியோடு போயிருக்கும். அவள் இராமனை வரத்தால் காடேகச் சொன்னது, உலகியலில் தீயவை யாவையினும் தீய தாகும். உலகவர் அறியுமாறு, காடேக இராமன் புரிந்த

குற்றம் யாதும் இல்லை. அவன் இங்கிருப்பதால் அவளுக்குற்ற ஊறுபாடும் ஒன்றில்லை. முறைமையோடு அரசேற்க நின்றவனை, அடாது காரணமின்றிக் காட்டிற்கனுப்ப வரத்தைப் பயன்படுத்தியது கொடுமையிற் கொடுமை. அதனால் புலவன் அவளைத், 'தீயவை யாவையினும் சிறந்த தீயாள்' என்று உலகியலால் அழைத்தான்.

அடுத்து, 'நாகம் எனும் கொடியாள்' என்று அழைக்கின்றான். நஞ்சுடைமையால் நாகம் கரந்துறையும். அதன் நஞ்சு, உயிர்க்கு ஊறு விளைப்பது; அது, மக்களை எதிர்பாரா வகையில் கடிப்பது. இங்குக் கைகேயியும் நாகத்தைப் போலத் தயரதன் அறியாவகை நஞ்சு போன்று வஞ்சக வரத்தால் உயிர்க்கு ஊறு விளைத்துவிட்டாள். தயரதன் அவள் உரங்கொள் மனத்து நின்ற வஞ்சகம் உணராது இரண்டு வரங்கள் கேட்டதும் வரையாது வழங்கத் தலைப்பட்டு இறப்புக்கு ஆளானான். கைகேயி, மன்னனை மாய்விக்கும் வஞ்சக்கருத்தை மனத்துள் கொண்டிருந்ததால் நஞ்சை நெஞ்சிடைக் கொண்ட நாகமே அவள் என்கின்றான். அதனால் அவள் புலவனால் 'நாகமெனும் கொடியாள்' என்று அழைக்கப் பெறுகின்றாள்.

நாகம் நஞ்சுடையதென்று அறிந்தவர்கள் அதனை அணுக மாட்டார்கள். கைகேயி வஞ்ச மனத்தள் என்றோ அம்மனத்தால் இராமன் முடிபுனைவைத் தகைப்பாள் என்றோ தயரதன் அறிந்திருந்தால் அவள் வரங்கேட்க வாய்ப்பளிக்காது முடிபுனைவித்திருக்கலாம். அவன் அங்ஙனம் கருதாமையால் அவள் வாய் மொழிக்கு இலக்காகி இறப்பை மேற்கொள்கின்றான். அதனால் தயரதனைப் பொறுத்த வரையில் உலகியலில் அவள் நாகத்திற் கொடியாளே. அதனைப் புலவன் தன் கூற்றாகக் குறிக்கின்றான்.

அடுத்துப் 'பாவி' என்கின்றான். கைகேயி தயரதனைப் பெருந்துயர் கொண்டு பூதலத்துப் புரளவும், நாவுலர்ந்து

உயிர் ஓடநின்று உள்ளம் புலர்ந்து உயிர்ப்படங்கவும் செய்து விடுகின்ருள். இவ்வாறு கணவனை அலமரச்செய்த மனைவி பாவ காரியம் புரிந்த பாவியேயாவள் என்பது உலகியலில் புலவன் கொண்ட கொள்கை. அதனுல் அவன் அவளை அங்ஙனம் அழைத்தான். அடுத்து இராமனைக் காடேக வரங்கேட்டது உலகியலில் காரணமின்றித் தந்த தண்டனை போன்றதாத லின் அது பாவகாரியமே. அதனுல் அச் செயல் கண்டு அவள் பாவி என்று அழைக்கப் பெற்ருள். சம்பரப்போர் நிகழ்ச்சியில் தயரதன் வரம் கொடுத்தபோது தன் வயிற்றில் பிறக்கும் மகனுக்கு அரசளிக்க வேண்டும் என்று அவள் கேட்டிருத்தல் வேண்டும். அப்பொழுது கேளாது இப்போது காடேகும் குற்றம் ஒன்றும் புரியா இராமனை அவ்வரங்களைக் கொண்டு காடேகப் பயன்படுத்திய செயல் பாவத்தோடு பட்டது ஆதலின் அதுபுரிந்தாளைப் 'பாவி' என்ருன்.

அடுத்துத் தன்னேரில்லாத் தீயவள் என்கின்ருன். தயரதன் இராமனுக்கு முடி சூடுவது பற்றி அவையோர் இசைவைப் பெற்று, இராமனிடம் அரசேற்பதை வரம் போல் வேண்டி இசைய வைத்து முடிசூட்டு விழாவிற்கு ஆவன இயற்றி முடித்தபின் அவன் செயலுக்கு அவள் மாறுபாடு விளைத்தது கண்டு பெரிதும் உழக்கின்ருன்.

தயரதன் கைகேயியின் கால்மேல் விழுந்து அவ்வரங்களைத் தவிருமாறு கேட்கின்ருன். பரதன், அவள் விரும்பிய வண்ணம் அவ்வரசை ஏற்கமாட்டான் என்றும் கூறியதோடு அவன் வரத்தால் பரதனுக்கு நாடு பெறுவது எளிது எனினும், அதனை நினையாது இராமனுக்கு, விட்டுக்கொடுத்தாள் என் ற புகழ் கிடைக்குமென்றும், வரத்தால் வற்புறுத்தி நாடு பெற்ருல் அது பழியாகுமென்றும், இராமனிருக்கப் பரதன் நாடாள்வதை உலகு ஒப்பாது என்றும் வானோர் கொள்ளார் என்றும் இராமன் அரசை வேண்டாப்போது தான் வற்புறுத்தக் கொண்டவன் என்றும் இதுகாலே அதனைப் பரதனுக்குத்தர அவள் விரும்பினுல்

இராமன் தானே கொடுத்துவிடும் இயல்பினன் என்றதோடு அவளுக்குத் தன் கண்ணையும் உயிரையும் வேண்டின் தருவேன் என்றும் தான் இராமனிடம் அரசு தருவதாகக் கூறிய வாய்மையினின்றும் பிழைத்தல் ஆகாது என்றும் அதனுல்தான் நோவுறும் வண்ணம் மீண்டும் அவ்வரத்தை அளிக்குமாறு வற்புறுத்தவேண்டா வென்றும், கேட்ட வரத்தில் மண்கொள்ளும் வரம்வேண்டின் தருவதாகவும், இராமன் காடேக வேண்டு மென்ற மற்ற வரத்தை மறக்குமாறும் பேய்கூடத் தன் பால் இரந்தால் இரந்ததை ஈயும் என்றும் அதனுல் அவளிடம் அவ்வரம்தவிர்த்தலே இரப்பதாகவும் கூறுகின்ருன்.

இவ்வளவு கூறியும் உள்ளம் சிறிதும் துளங்காது அவள்,

*''முன்னே தந்தாய் இவ்வரம் நல்காய் முனிவாயேல்*
*என்னே மன்ன யாருளர் வாய்மைக்கு இனி''*

(அயோ. கைகேயி சூழ்வினைப். 1613)

என்கின்ருள். இங்குக் கைகேயி கணவன் வேண்டுகோள் எதுவாயினும் இசைதற்குரியவள். அவன் வரங்கொடுப்பதில் உள்ள சிக்கல்களைச் சிக்கறக் கூறியும் இசையாது தான் கொண்டது விடாதும் துளங்காதும் நின்ற செயல் உலகியலில் எப்பெண்ணும் புரியவொண்ணுதது. இதனைக் கைகேயி செய்கின்ருள். அதனுல் உலகியலார்க்கு அவள் தன்னேரில்லாத் தீயவளே. கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை பெண்டிற்கியல்பு. இப்பண்பு கணவனுக்கு ஏதம் நிகழின் மாறும். ஆனுல் அவள் கொளுத்தக் கொள்ளாததோடு இறப்பு சூழ்ந்த போதும் கொண்டது விடாமல் இருந்ததால் அத்தீய இயல்புநோக்கி அவள் தன்னேரில்லாத தீயவள் என்கின்ருன் புலவன்.

அவள் கொளுத்தக் கொள்ளாததற்குக் காரணம் தயரதன் அவளுக்குத் தருவதாகக் கூறிய வரங்களைக் கேட்டபோது தருவதைத்தவிர்ந்து உழப்பது நோக்கி ஐயங்கொண்டேயாகும். அவள் அவனை எவ்வளவு ஐயுற்ருலும் உயிர் சோர்ந்த போது விட்டுக்கொடுத்திருக்க வேண்டும். முன்னர்,

*"வானோர் கொள்ளார் மன்னவர் உய்யார் இனிமற்றென்*
*ஏனோர் செய்கை யாரொடு நீ இவ்வரசாள்வாய்"*

(அயோ. கைகேயி சூழ்வினைப் 1610)

என்று கேட்ட பின் முரண்பட,

*"... ... ... ... ... ... ... ... பெறுவாயேல்*
*மண்ணே கொள்நீ மற்றையது ஒன்றும் மற"*

(அயோ, கைகேயி சூழ்வினைப் 1611)

என்கின்றான். இங்ஙனம் தயரதன் பேச்சில் முரண்பாடு கண்ட அவள் மண்கொண்டு இராமனைக் காட்டிற்கு அனுப்பாதிருந்தால் கேடு புகும் என்று கருதி எதற்கும் துளங்காமனம் படைத்துவிடுகின்றாள். இது உலகியற் பிடிவாதமாகி இகழ்ச்சியுறுகின்றது.

கைகேயியைப் புலவர் கடுமொழி வழங்கிய இடத்தில் அவள் அச்செயல் மேற்கொண்ட காரணத்தையும், அச்செயல் உலகியலில் கணவன் மனைவி என்ற உறவு முறையில் நேர்மை, முறைமை, பாவம் என்ற இயல்பில் தோன்றும் அடாமையையும் கொடுமையையும் கண்டே அவ்வாறு வழங்கியுள்ளான். தயரதன், வசிட்டன் முதலியோரை அவள் மதித்து ஏற்காமலும் அவர் கூறும் சொற்களைப் போற்றாமலும் நாடு நகரம் முதலியன தயரதன் இறப்பு கண்டு உழந்தும் தான் உழக்காமலும், பரதனோடு துன்பம் பகிர்ந்து கொள்ளாமலும் தான் எதற்கும் துளங்காமலும் இருந்த நிலை நோக்கி வழங்கிய சொற்களே அவை. புலவன் எல்லாம் அறிந்தவனே. இதனால் தெய்வக் கற்பினாள் கைகேயி என்று அழைத்ததை அழித்து முரண்படப் பேசுகின்றான் என்பதில்லை.

---

# 29. "சீதை கேள்வன்" என்றதேன்?

கைகேயி இராமனுக்கும் சீதைக்கும் நன்மையே நினைத்தாளன்றித் தீமையைக் கனவினும் கருதினாள் அல்லள் என்று

இதுகாறும் கண்டோம். ஆனல் அக்கூற்றினை மறுக்கும் வண்ணம் கைகேயியின் வாய் மொழியிற் சில அமைந் திருப்பதைக் கண்டால் முன்னைய கூற்று முடிவுடைய கூற்ருக ஆகாததுபோல் தோன்றும். தயரதனிடம் கைகேயி வரம் கேட்கின்றபோது ''என்சேய் நாடாள்வது என்றும் சீதை கேள்வன் காடாள்வது'' என்றும் கேட்கின்ருள்.

இங்கே அவள் தன்மகன் பரதனிடம் வைத்த பற்றுக் காரணமாக என் மகன் என்று அழைத்தாள்என்றும், இராம னிடம் மனமாற்றம் காரணமாக உண்டான வெறுப்பினுலும் சீதைபால் ஏற்பட்ட வெறுப்பினுலும் இராமனைச், ''சீதை கேள் வன்'' என்று பேசுகின்ருள் என்றும் நாம் உரை கொண்டால், கைகேயி இராமன்பால் பற்று உடையவள் என்றும், மாசுமறு வற்றவள் என்றும் கூறுதல் எங்ஙனம்?

தயரதனிடம் வரம் கேட்டபோது கைகேயி, ''என்சேய் நாடாள்வது சீதைகேள்வன் காடாள்வது'' என்று கேட்கின்ருள். இங்குப் பரதனைத் தன்சேய் என்று அன்பால் அழைத்துப் பின் ''சீதை கேள்வன்'' என்று இராமனைச் சீதையோடு சார்த்தி அவன் பாலுள்ள வெறுப்போடு அவனைத் தனக்கு உற வில்லான் போலக் கூறினுள் என்று கொள்வது உலகியலில் கொள்ளும் உரை.

கூனி கைகேயியிடம் இராமன் நாடாளாவகை சூழ்ச்சி செய்யும் போது,

*''சிவந்த வாய்ச் சீதையும் கரிய செம்மலும்*
*நிவந்த ஆசனத்து இனிதிருப்ப நின்மகன்*
*அவந்தனுய் வெறுநிலத்திருக்கல் ஆனபோது*
*உவந்தவாறு என் இதற்கு உறுதி யாது ... ...''*

(அயோ. மந் சூழ்ச்சி 1550)

என்று கேட்கின்ருள். மேலும்,

*"காதல் உன் பெருங்கணவனை அஞ்சி அக்கனிவாய்ச்*
*சீதை தந்தை உன் தாதையைத் தெறுகிலன் இராமன்*
*மாதுலன் அவன் உந்தைக்கு வாழ்வினியுண்டோ*
*பேதை உன் துணை யார் உளர் பழிபடப் பிறந்தார்"*

(அயோ. மந், சூழ்ச்சி 1569)

என்று கூறுவதையும் நோக்கின் கைகேயி உன்னியே இங்ஙனம் பேசியிருக்க வேண்டும் என்று கொள்ள இடமுண்டு. இவ்வாறு பரதன் அவந்தனுய் வெறுநிலத்து நிற்பதையும், சீதையின் தந்தைக்கும் கேகயனுக்கும் இருந்த பகை தயரதனுல் தடையுண்டு கிடந்தது, இராமன் ஆட்சிக்கு வந்தால் கிளைக்கும் என்றதையும் வைத்துக் கொண்டு கைகேயி சீதைபால் பகையுணர்வு கொண்டாள் என்றும் தன்சேய் இராமன் என்று வாழ்ந்தவள்இப்பொழுது ''என்சேய்'' என்று பரதனைக்கொண்டு இராமனைப் புறக்கணிப்பாள் போல அவள் மனந்திரிந்து வஞ்சம் வைத்தாள் என்றும் கூறப் பெரிதும் இடமுண்டு.

முதன்முதல் இராமன் முடிசூடுகிருன் என்னுது ''தாடகை எனும் தையலாள் படக்கோடிய வரிசிலை இராமன் கோமுடி சூடுகின்ருன்'' என்று கூனி கூறியது கேட்ட கைகேயி இதுகாறும் கண்ட இராமனுகக் காணுது பெண்கொலை புரிந்த இராமனுகவே காண்கிருள். அன்றேல் தாடகை வதையைப் பெருமையாகவும் வீரமாகவும் கருதியிருந்தால் அதனை அவள் மறுத்திருக்கவேண்டும். அதுபற்றி அவள் குறிப்பிடாது மனத்தில் குற்றமென்று கொண்டமையால் அக்குற்றப்பட்ட இராமன் கோமுடி புனைவது பழியுடையது என்று கருதி, அவனைக் காட்டிற்கு அனுப்பித் தவத்தோடு அவன் காடாள வேண்டுமென்றவள் சீதையைச் சுட்டாமல் இராமன் என்ருல் அமையும். இங்குச் ''சீதை கேள்வன்'' என்று அழைத்தது சீதைபால் வெறுப்பா அன்றி வேறு காரணமுண்டா என்று ஆய்ந்தால், இராமன் எங்குள்ளான் என்று பரதன் அவளை நோக்கிக்கேட்ட போது கைகேயி,

''தெவ்வடு சிலையினுய் தேவி தம்பி என்று
இவ் விருவரோடும் கானத்தான் ... ... —''

(அயோ, பள்ளிப்படைப். 2248)

என்று கூறுவதால் அவள் சீதையைக் குறைத்தோ, இராமனை இகழ்ந்தோ பேசினுள் அல்லள் என்பது தெளிவு.

கூனி தன்பால் நின்ற பகைமை காரணமாகக் கூறி விட்டாள்; கூனி கூறட்டும் அன்றிப் பகைவர் கூறட்டும்; '' நகையுள்ளும் இன்னுது இகழ்ச்சி '' ஆதலால், கைகேயி தன் மகன் இராமன் அப்பழிபட வாழ்வதையும் அப்பழி நிற்ப முடிபுனைவதையும் விரும்பவில்லை. அதனுல் இராமனைப் பாவம் போக்கக் காட்டிற்குப் போக்குகின்ருள். இங்குச் சீதை கேள்வன் என்றது, கணவனும் மனைவியுமாகிய இருவரும் சென்று அப்பாவம் கழிக்க வேண்டும் என்பதற்கே. சீதை கேள்வன் என்பதைச் சீதைக்குக் கேள்வன் என்ற பொருளில் இல்லாமல் சீதையும் அவள் கேள்வனும் என்ற பொருளில் உம்மைத் தொகைப்படுத்திக் கூறியுள்ளாள்.

மணம்புரிந்த இராமன் பெண்கொலை வழிநின்ற பாவம் துடைப்பது என்பது தனித்தன்று; சீதையோடு இணைந்தே கழிக்கவேண்டும். மணங்கொண்ட பின் இராமனும் சீதையும் தயரதன் கருதியாங்கு அரசேற்று இல்லறம் நடத்தியிருந்தால் அவர்கட்கு வாய்க்கும் மகப்பேறும் பழிபட்டதாகும். தக்கார் தகவிலர் என்பதை அவர் எச்சம் காட்டும். பெண்கொலை புரிந்து விட்டோமே என்ற மனநிலையில் வாழும் இராமனுக்கு வாய்க்கும் மகப்பேறும் செம்மையானதாக அமையாது. அன்றியும் அறவோர், அந்தணர், துறவோர், விருந்து என்றின்னோர் இராமன் புரியும் இல்லறப் பயனைத் துய்க்கமாட்டார். காரணம், பெண்கொலை புரிந்த பாவம் நிற்பதால் அவன் கொடையும் ஈகையும் ''உண்ணுர் கைத்து'' என்று தம்முடம்பின் ஊன் கெடினும் சான்றோர்கொள்ளார். அதனுல் இராமன் இல்லறமும்

கடைபோகாது; மகப்பேறும் செம்மையுருது; பழிநிற்ப நிகழ்த்தும் ஆட்சியும் சிறக்காது. இத்துணையும் மதித்து எண்ணிய கைகேயி இராமனேடு சீதையையும் கருமக் கழிப்பிற்குக் காட்டிற்குச் செலுத்துகின்ருள்.

கீரியைப் பிள்ளையாக வளர்த்த பார்ப்பனி கையில் ஊண் கோடல் பாவமென்று பார்ப்பனன் ஒருவன் பார்ப்பனியைக் கையுதிர்த்துச் செல்ல, அப்பழி போக்கக் கோவலன் பெரும் பொருள் கொடுத்துக் கழுவாய் செய்தது ஒரு நிகழ்ச்சி. இங்கு மனைவி செய்தது பாவமென்று கணவன் துறக்க முடிந்தது. ஆனல் கணவன் செய்த பாவங்கண்டு மனைவி கணவனைத் துறக்க முடியாது. அவளும் அவனேடு பாவம் பகிர்ந்து கழுவாய் இயற்றலே கடமை. அதனல் சீதையும் அவள் கேள்வன் இராமனும் வனமாள வேண்டுமென்று தயரதனிடம் கைகேயி அவர்களைப் பாவம் கழிக்க அனுப்பக்கருதி வரங்கேட்கின்ருள்.

இராமன் காட்டில் சீதையோடு வாழ்ந்த வாழ்வெல்லாம் துறவற வாழ்வே. இவன் மேற்கொண்ட துறவற வாழ்வில் இல்லறமும் உண்டு. காட்டில் முனிவர்கள் மனைவியர் துணை நிற்பத் தவம் மேற்கொள்வதுபோல இராமன் தவம் இயற்றத் துணைநின்றவள் சீதை. இங்குச் சீதையும் இராமனும் நடத்திய துறவற இல்லறம் உண்டு. காட்டில் வாழும் முனிவர்கள் ஒருவரையொருவர் காண நேர்ந்தபோது அத்துறவற இல்லறம் நிகழும். அதனல்தான் இராவணன் துறவுக்கோலத்தில் வந்தபோது அவனை அழைத்துச் சீதை பேணினுள். இராவணன் சிறைவைத்த போது கூட,

"விருந்து கண்டபோது என்னுறுமோ என்று விம்மும்"

என்றது துறவற இல்லறத்தைக் குறித்தது.

காட்டில் துறவியாக வாழும் இராமன்பால் விருந்தருந்தல் ''உண்ணுர் கைத்து ஆகாது''. உலகில் வாழ்ந்தால் இராமன் செய்யும் அறம் புறக்கணிக்கப் பெறும். அவன் துறவறத்தில் வாழ்ந்து செய்யும் இல்லறத்தில் வரும் விருந்து தக்காராய் அமைவதால் அவன் செய்யும் அறம் தக்கார் கைப்பட்டு வான் சிறிதாய் போர்த்து விடுகின்றது. இராமன் மேற்கொண்ட துறவற இல்லறம் பாவம் போக்கற்கென்பதை அறிந்த துறவியர் கூடஅவன் அதுவழிச் செய்யப்புகும் பெரிய காரியத்திற்கு அவன்பால் நின்ற பாவத்தை விருந்துண்டு பகிர்ந்துகொள்ளத் தயங்கவில்லை. இவற்றையெல்லாம் நுணுகி நோக்கினுல் கைகேயி ''சீதை கேள்வன்'' என்று குறிப்பிட்ட பொருள் போதரும்.

''என்சேய் நாடாள்வது'' என்ற சொற்றொடரில் தயரதனுக்குச் சோர்வு பிறந்திருக்காது. பின்னர், 'சீதை கேள்வன்'' என்ற போதுதான் 'என்' என்பதற்கே பொருள் விளங்கிக் கொள்கின்றுன் தயரதன். கைகேயி என் சேய் என்பதெல்லாம் இராமனைத்தான் குறிக்கும். மனந்திரிந்த பின் என்சேய் என்பது முன் போல் இராமனைக் குறிக்குமென்று கருதி அது குறியாவகை என் சேய் என்பதை விளக்கும் பொருட்டே சீதை கேள்வன் என்று குறிப்பிட்டது நோக்கத் தக்கது. இங்கும் கைகேயி பரதன்பால் பேரன்பும் இராமன் பால் வெறுப்பும் கொண்டு குறித்தாள் என்றற்கில்லை.

---

# 30. கூனி இழைத்த கொடுமை என்ன ?

இராமன் முடிபுனே விழாவிற்கு நகர் அலங்கரிக்கப் பெறுகிறது. நகரம்கோலம் பெற இ ர ா ம ன் முடி புனேவ தைப்பற்றி நகர மாந்தர்கொண்ட மகிழ்ச்சியும் அதுவழிப் பிறந்த கம்பலேயும் பெ ரி தா கி மகிழ்ச்சிக்கடலில் மக்கள் திளேத்துக் கிடப்பதைக் காணுகின்ருள் கூனி. இத்தனே நிகழ்ச்சி களேயும் கண்ட அவள் ஊரவரைப் போன்று மகிழ்ச்சியில் மிதக்காமல் சி ன த் து ட ன் கைகேயியின் அரண்மனேக்கு விரைகின்ருள்.

''தோன்றிய கூனியும் துடிக்கும் நெஞ்சினுள்
ஊன்றிய வெகுளியாள் உளேக்கும் உள்ளதினள்
கான்றெரி நயனத்தாள் கதிக்கும் சொல்லினுள்
மூன்று உலகினுக்கும் ஓர் இடுக்கண் மூட்டுவாள்''
(அயோ. மந். சூழ். 1535)

இவள் இங்ஙனம் கடுஞ்சினங்கொண்டு நெஞ்சுளேந்து கண் எரி கதுவ கடுஞ்சொல்லே வாயிடைக்கொண்டு முணு முணுத்துச் செல்வதற்கு ஒரு காரணங் காட்டுகின்ருர் கவி.

இராமன் சிறுவனுக இருந்தபோது அவள் கூனெலும்பைக் குறியாக்கி உண்டை வில் எய்த காலே அவட்கு அவன் விளேத்த அடாத செயலே மனத்தில் நினேந்து பண்டு மனத்து ஒளித் திருந்த ப ழ ம் பகையைத் தணித்துக் கொள்ளக் கருதி வருகின்ருள்.

இராமன் சிறுவனுக இருந்த போது கூனிக்கிழைத்த கொடுமை பெற்ருேர் அறிந்ததாயின் கண்டிக்கப் பெற்றதும்

ஆறுதல் கூறப் பெற்றுக் கழிந்ததும் ஆகும். பெற்றோர் அறியா ததேல் அதுமனத்து நின்ற பகையாகக் காரணமுண்டு. இராமன் பெற்றோர்க்கு அரும் பெறற் புதல்வன். அவனை ஒருவர் சுளித்து நோக்க அவர் பொருர். இப்பகை அப்படிக் கூனியால், ஒன்று கூற முடியாது மனத்துப் பகையாகி வயிர்த்து நின்றதாகும். இப்பகை யுடைமையை இராமன் அறிந்திருக்கின்றான். அக்கூனி அவன் உண்டை வில்லால் அடித்ததைப் பகையாகக்கொண்டு தனக்குத் தாங்கொணாத் துன்பம் தந்தாகச் சுக்கிரீவனுக்கு அரசு கொடுத்து அறிவுரை கூறும் போது கூறுகின்றான்.

"சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல் மற்று இந்
நெறி இகழ்ந்து யானோர் தீமை இழைத்தலால் உணர்ச்சி நீண்டு
குறியதாம் மேனியாய கூனியால் குவவுத் தோளாய்
வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்"

(கிட். அரசியற். 4230)

இவ்வாறு இராமன் கூனிக்குத் தான் இழைத்த கொடுமையால் அவள் தனக்கிழைத்த கொடுமையை உன்னுவானேயானல் கூனிக்கு இராமன்பால் பகை இருந்தது தெளிவாகும். அப்பகை அவன் முடி சூட்டு விழாவைத் தடை செய்யக்கூடு மென்றால் அப்பகையின் அழுத்தம் எண்ணிப் பார்க்க முடியாததாக இருக்கின்றது.

இராமனுக்கு முடிசூட்டு விழா தவிர்ந்து தயரதன் இறந்த பின் எல்லோரும் இராமனைக் காணச்செல்லும்போதும் கூனியும் கைகேயியோடு செல்கின்ருள். அப்பொழுது சத்ருக்கனன் அவளை ஒறுக்க முற்பட்டபோது பரதன் தகைக்கின்ருன்.

"'மந்தரைக் கூற்றமும் வழிச்செல்வாரொடும்
உந்தியே போதல் கண்டு இளவல் ஓடி ஆர்த்து
அந்தரத்து ஏற்றுவான் அழன்று பற்றலும்
சுந்தரத் தோளவன் விலக்கிச் சொல்லுவான்"

(அயோ. ஆறுசெல் 2385)

இங்குச் சத்ருக்கனன் இராமன் காடு புக மந்தரை காரண மானவள் என்று கொண்டு அந்தரத்து ஏற்றத் துணிந்ததைத் தகைத்துப் பரதன்,

"முன்னையர் முறை கெட முடித்த பாவியை
சின்ன பின்னம் செய்து என் சினத்தைத் தீர்வனேல்
என்னை இன்று என் ஐயன் துறக்கும் என்றலால்
அன்னை என்று உணர்ந்திலென் ஐய நான் என்றான்"

(அயோ. ஆறுசெல் 2386)

இவ்வாறு தாயைக் கொல்லாமைக்குரிய காரணத்தைக் குறித்தவன்,

"ஆதலால் முனியும் இன்று ஐயன் அந்தமில்
வேதனைக் கூனியை வெகுண்டும் என்னினும்
கோதிலா அருமறை குலவு நூல்வலாய்
போதும் நாம் என்று கொண்டு அரிதின் போயினன்"

(... ... ... ... 2387)

இங்குப் பரதனும் சத்ருக்கனனும் அறிந்த செய்தி நாடறிந்த செய்தி. முன்னம் அறியாது போயினும் சத்ருக்கனன் சினத்தாலும் பரதன் தகைப்பாலும் அனைவரும் அறிந்த செய்தி யாயிற்று. இராமன் இதனைத் தெரிந்து வைத்து இதனை அடிப்படையாக்கிச் சுக்ரீவனுக்கு அறிவுரை பகர்வானேல் இது சற்று ஆழமான நிகழ்ச்சியே. என்றாலும் கூனியால் இராமன் முடியைத் துறப்பிக்க முடியாது. அவள் கைகேயியை இதற்குத் துணையாகக் கொள்ளக் கருதியே அவ்வாறு சினந்து விரைந்

தாள். எவ்வாறு சினப்பினும் கைகேயிக்கும் இராமனுக்கும், தயரதனுக்கும் உள்ள தொடர்பின் ஊற்றத்தை அறியாதவள் அல்லள் கூனி. அவ்வாறு அறிந்தவளுக்கு உண்டை வில்லால் அடித்த பகைமையைக் காரணமாகக் காட்டினல் அச்சூழ் நிலையில் அவள் இருக்குமிடம் தெரியாது போயிருப்பாள். அதனுல் அவள் அக்காரணத்தை இராமன் முதலாயினுேரும் மற்றையோரும் மனத்துக் கொண்டிருந்து பேசினுலும் அவள் உள்ளத்துக் கருதிய காரணம் கைகேயியால் மறுக்க முடியாதது அக்காரணத்தைக் கூறி அவள் மனத்தை மாற்றம் பெறச் செய்கின்ருள். மாறிய மனம் மாறிய நிலையில் நின்றதன்றி எச் சூழ்நிலையிலும் அந்நிலையில் திரிந்திலது.

கம்பர் கைகேயியின் பொருட்டு வழங்கிய சுடு சொற்களைப் போன்ற சுடு மொழிகளை இவள் மீதும் செலுத்தத் தவிர்த்தார் அல்லர். கைகேயியின் தூயசிந்தை திரிய அரக்கர் பாவம் அல்லவர் இயற்றிய அறம் இமையோர் சூழ்ச்சி அவர் வரம் அந்தணர் இயற்றிய அறம் ஆகிய காரணங்களைக் கூறியவர் *தேவி சிந்தை திரியக் கூனி காரணம்* என்ருர் அல்லர். *கூனியும் சொன்னுள் சிந்தையும் திரிந்தது. கூனி அவள் சிந்தையைத் திரிக்கவில்லை. அதுதானே திரிந்தது.*

கைகேயியின் மனந்திரிய மேற்குறித்த ஐந்து காரணங்கள் இருந்தும் அது சுடர் விளக்காய் எரிந்து அவ்விளக்கொளியில் இவ்வுலகங்கள் இராமன் பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருக ஒரு தூண்டு கோல் வேண்டும். கைகேயி என்னும் அச்சுடர் விளக்கைத் துளக்கமற நின்று எரியச் செய்த தூண்டுகோலே கூனி எனப்படும் மந்தரையாவள். ஆனுல் எரிந்து சுடர் விட்டது கைகேயி என்ற குல்விளக்கே.

இம் மந்தரை கைகேயிக்கு உற்ற தோழியும் அடித் தொழிலாட்டியும் ஆவள். இவள் தயரதனைக் கைகேயி மணந்து புக்ககம் போந்த போது உடன் போந்து நட்புக் கடனேடு தொண்டும் புரிந்தவள்.

தயரதனுக்கு மகப்பேறில்லாதபோது வருந்திய கைகேயி யின் வருத்தத்தைப் பகிர்ந்தவள். மகப்பேறு வாய்த்தது கேட்டு மகிழ்ந்தவர்களில் அவளும் ஒருத்தியே.

கைகேயி தானீன்ற மகனைத்தன்கண் போற்றி வளர்ப்பதி லும் தயரதன் அன்பு காட்டும் இராமனிடம் தானும் தன் னன்பைப் பொழிந்து வாழக்கண்டு அது இயற்கைக்குப் புறம் பாய் நிகழ்வதற்கு நொந்தவள். இராமன் தன்னை இலக்காக்கி விற்பயிற்சி பெற்ற காலை ஊறு விளைத்ததை உள்ளத்து ஏற்றுப் பெரிதும் உளைந்தவள். தன் உறுப்புக் குறையுடைமையும் புரியும் அடித்தொழில் இயல்பும் வெளிப்படையாக உரைக்க வாய்ப்பற்றுக் கருவாய் நின்றது. இராமனுக்கு மிதிலையில் திருமணம் நடந்தகாலை தயரதன் தன் அரசியற் செல்வங்களை இராமன் முதலாயினுர்க்குப் பகிர்ந்து கொடுக்கக் கண்டவள். தயரதன் கொடுத்த அது தயரதன் இருக்க இராமன் முதல னோர்க்குப் பகிர்ந்து கொடுத்ததாகும். அது சடங்கு முறையா லானதன்று; திருமணத்திற்குச் செல்வோர்க்குப் பெருமை படுத்தக்கொடுத்தது. உண்மையான முடிக்கொடை நிகழ்ச்சி அயோத்தியில் தொடங்கிய போதுதான் அவள் அதனைத் தடை செய்ய முற்படுகின்ருள்.

இராமனிடம் தனக்கிருக்கும் பகையைத் தணித்துக் கொள்ளக் கைகேயியிடம் வந்துஅவள் உறக்கத்தை கலைக்கின் ருள். தூக்கம் கலையாது கிடந்த கைகேயியிடம்,

*''அணங்கு வாள்விட அரா அணுகும் எல்லையும் குணங்*
*கெடாது ஒளிவிரி குளிர் வெண் திங்கள் போல்*
*நிணங்குவாள் பேரிடர் பிணிக்க நண்ணவும்*
*உணங்கு வாய் அல்லை நீ உறங்குவாய் என்ருள்.*

(அயோ. மந். சூழ். 1540)

நல்ல குடிப் பிறந்த கைகேயி தன் பண்பில் என்றும் திரியாத இயல்பினள். தன்னைப் பாம்பு பற்றி விழுங்குங்

காலத்து ஒளிமதி தனக்குற்ற உயிரச்சம் நோக்கியேனும் தன்கடமை ஒழிந்திராது, விழுங்கிய எச்சத்தால் உலகுக்கு ஒளிதரும் கடமை ஆற்றுவதில் தவிர்வதில்லை. அம்மதிபோல் கைகேயி தனக்குப் பேரிடர் வந்தபோதும் அதுபற்றிக் கவலாது என்றும்போல் துளக்கமின்றிக் கிடக்கின்ருளே என்று வியந்து அதனைச் சொல்லிக்காட்டுகின்ருள். அது கேட்ட கைகேயி த ன க் கு வாய்த்த மக்கள் நால்வரும் செவ்வியர் ஆனதோடுஅவ்வவர் துறை தோறும் அறம் திறம்பலர். அங்கனமாகவும் தனக்கு இடர் வாய்க்கு மாறு எ ங் க ன ம் என்கின்ருள். இங்கு மந்தரை,

> **''வீழ்ந்தது நின் நலம் திருவும் வீழ்ந்தது**
> **வாழ்ந்தனள் கோசலை மதியினுல் என்ருள்.''**

இங்குக் கைகேயி 'வீழ்ந்தது நின் நலம் திருவும் வீழ்ந்தது' என்பது எங்ஙனம் என்று கேளாது 'வாழ்ந்தனள் கோசலை மதியினுல்' என்றதற்கு விடை கூறுகின்ருள். கோசலை மதியினுல் வாழ்ந்தவள்தான் என்று அதனை ஏற்றுக் கொண்டு அவள் மதியினுல் வாழ்ந்ததற்குக் காரணம் தயரதன்மன்னனுக விளங்கவும் பட்டத்து அரசியாக மூத்தவள் என்ற முறையில் அரசு கட்டிலில் வீற்றிருக்கவும் வாய்ப்புப் பெற்றதோடு மதியுடைமையால் தானீன்ற பிள்ளை பிறள் ஈன்ற பிள்ளை என்ற வேறுபாடற்றுப் பரதனைத் தன் மகனுகக் கொண்டதே என்றதோடு அவட்கு வாழ்வு இதற்கு மேல் என்ன இருக்கிறது என்கின்ருள். அரசு கட்டிலுக்குக் கோசலையோடு என்றும்போட்டி போடாதவள் கைகேயி. அவள்முறையறிவாள். ஆனுல் கூனி சொன்னதில் ஒரு பொருளிருக்க வேண்டுமே! உலகியல் நோக்கிப் பல கூறலாம். இங்குக் கூனி கூறியது உலகியற் சிறுமைப் பண்பு ப டை த் த த ன் று. தயரதனுக்குப் பிறந்த பிள்ளை நால்வருள் மூத்தவனுக்கு இராமனைப் பயந்த

கோசலை தன்மகனைத் தன்கண் வைத்து வளர்ப்பதற்கு வேருகக் கைகேயி பயந்த பரதனைத் தான் கொண்டு தான் பயந்த இராமனைக் கைகேயியிடம் வளர்க்க விட்டதன் மதியுடைமை அதுகாலைத் தெளிவாயிற்று அவளுக்கு. அதனுல் அவள் கோசலை வாழ்ந்தனள் என்று இறந்த காலத்தால் குறித்தாள்.

தன்மகன் என்று அவள் பரதனை வளர்க்க அவன் எல்லாப் பேறுகட்கும் உரியன் ஆனுன். ஆனுல் நீ வளர்த்த இராமன் பெண்கொலை புரிந்து வீரர்கள் நகைக்கும் வண்ணம் இழி செயல் புரிந்து விட்டான். அதோடு அப்பாவம் கழிக்கும் கழுவாய் எதுவும் இயற்ருது முடிபுனையவும் இருக்கின்ருன் என்கின்ருள். இப்பொழுதும் கைகேயி தன் மகன் இராமனிடம் குறை கருதுதற்கு வேருக நிறை கண்டு அவன் முடி சூடும் பெருமைக்குரிய செய்தியைக் கூறிய கூனிக்குச் சுடர்க்கெலாம் நாயகமனைய ஓர் மாலையை அளிக்கின்ருள். அதனை அவள் உவகையோடு வாங்காமல் தெழிப்போடும் உரப்போடும், சினக்கண் விழிப்பிடைப் பிறந்த வெய்துயிர்ப்போடும் அழுகையோடும் நிலத்திடை எறிகின்ருள். எறிந்தவள் கைகேயியைப் பேதை என்றும் பித்து என்றும் சுடு சொல் வழங்கியதோடு நின்னிடம் பிறந்த பரதனேடும் துயர்ப்படுவாயாக என்றதோடு தான் இது காறும் ஆற்றிய பணியைத் தொடர்ந்து ஆற்ற முடியாமைக்குரிய காரணத்தைக் கூறுகின்ருள். இங்குக் கூனி பேசும் பேச்செல்லாம் முற்றிலும் உலகியற் குரியனவாகும்.

தயரதன் அரசாங்கத்தில் கைகேயி பெற்றுள்ள உரிமை நாளை இராமன் முடி புனைவதால் தடைபடுமென்றும் தான் அரச ஆணைக்குரியோர் வழியொழுக நேரிட்டால் கைகேயியின் அடித்தோழி என்ற நிலை மாறிக் கோசலைக்கோ சுமித்திரைக்கோ அடித்தொழில் இயற்ற நேரும் என்றும் கைகேயிக்கன்றி பிறர் யாருக்கும் தான் அடித்தொழிலாற்றல் இழுக்கென்றும் அந்த நிலை நாளையே தனக்கு வருவதோடு கைகேயிக்கும் கேடு புகும் என்கின்ருள்.

இங்கு மாற்றவள் தாதியர் என்று அவள் குறிப்பது அரசியற் செல்வாக்கினைச் சீதை பெற அச்சீதை தன் தந்தை சனகனுக்குப் பகையாய் வாழும் கேகயன் நாட்டிலிருந்து வந்த தன்னைத் தன் தோழிகட்கு அடித்தோழியாக்கவும் கூடும். அவ்வாறு ஒரு நிலை வருவதைத் தான் ஏற்க வெறுப்பதாகக் கூறுகின்றாள்.

அடுத்துச் சீதையும் இராமனும் அரசியும் அரசருமாக அரசிருக்கையில் அமர்ந்திருக்க ஒத்த உரிமை படைத்த பரதன் ஆசனமின்றிக் கீழே நிற்பதைத் தான் காண விரும்பவில்லை என்றும் அதனைக் காண அவனை ஈன்ற கைகேயி விழைந்து அதற்கு உவந்து மாலை தந்தது எது பற்றி என்றும் வினவு கின்றாள்.

தான் வளர்த்த மகன் இராமன் தானீன்ற மகனின் மூத்தவன். மூத்தவன் அரசு பெற மற்றையோர் துணை நின்று அரசியல் நடத்துவது மரபு. அந்த முறையில் இராமன் அரசு பெற அவனோடு அரசு கட்டிலில் சீதை அமரத் தம்பியா யுள்ளோர் அவர் அருகு நின்று அவரவர்க்கு ஏற்ற தொழி லாற்றல் இயற்கை. இதில் கூனி காணும் மாறுபாடு, கைகேயி கொள்ளும் மூத்தவன் என்ற மரபு பேணும் காலம் இது அன்று என்பதால் அங்ஙனம் பேசினாள்.

அடுத்துக் கோசலை உறுதி மறக்கவில்லை என்கின்றாள். அதனால் இராமன் சிறந்த நல்திருவும் எய்தினான் என்றும், இனிமேல் பரதனும் சத்ருக்கனனும் இன்னும் இறவாமல் உயிர் பேணி வாழ்தல் எற்றிற்கு என்றும் கைகேயியின் வயிற்றில் பரதன் பிறந்ததால் அவன் உலகத்தில் பிறந்த ஒருவனாகக் கருதப் பெறாது ஒழிந்தான் என்றும் கூறுகின்றாள்.

கோசலை தயரதனை மணந்த முறையிலும் மக வீன்ற பெற்றியிலும் மூத்தவனுக்கு உரியது அரசு என்ற முறையிலும் தானீன்ற மகன் வளர்ந்தது எங்காயினும் அவன் அரசு பெற

வேண்டுமென்று கொண்டிருந்த எண்ணத்தை மறக்காது நிறைவேற்றிவிட்டாள் என்றும், பரதனைப் பெற்றும் இராமனை வளர்த்ததால் பெற்ற பிள்ளையை மறந்து அவளுக்கு வரக்கடவ செல்வத்தை வரவழைத்துக் கொள்ளாததோடு கோசலை ஈன்ற மகன் திரும்பபெறுவதைப் போற்றுவதால் பரதன் அவள் வயிற்றுப் பிறந்தும் பிறந்திலன் என்கின்ருள். கோசலை பெற்ற மகனுக்குத் தாய் ஆற்றும் கடமையை மறக்காமல் செய்யக் கைகேயி மறந்ததோடு தான் நினைவுபடுத்தியும் அதனைக் கொள்ளாமை குறித்து நொந்து, பரதன் இத்தகைய தாயிடை வந்த குறை கருதி இறக்காது வாழ்கின்ருனே என்கின்ருள்.

அடுத்துத் தயரதன் கொடுக்கும் இவ்வரசினை இராமன் இலக்குவனேடு சேர்ந்து வரம்பில் காலத்திற்கு ஆள்வான். அப்படி அவ்விருவர் எல்லையில் காலத்திற்கு அரசு பெற்று வாழ்ந்தால் பரதனும் சத்துருக்கனனும் பெறுதற்கு ஒன்றில் லாமையால் எல்லையில் காலத்திற்குத் துறவிகளாகக் காடு சென்று காலங்கழித்தல் நல்லது என்கின்ருள்.

இங்கு அவள் கொண்ட கொள்கை, தயரதன் தன் அரசினைத் தான் ஆள விருப்பமில்லாமல் கொடுத்தால் அதனை அவனீன்ற மக்கள் நால்வருக்கும் ஒப்பப் பகிர்ந்து கொடுக்க வேண்டும். அவன் அங்ஙனம் செய்யாது பரதனும் சத்ருக்கன னும் இல்லாதபோது இராமனுக்கு முடிபுனைகின்ருன் என்ருல் அவ்வரசு இராமனுக்கும் அவனைச் சார்ந்த இலக்குவனுக்குமே ஆகும். பாட்டன் வீட்டினின்றும் பரதனும் சத்ருக்கனனும் அயோத்தி வந்து காணும்போது அவர்கள் தமக்கென்று தந்தை தந்த நாடு ஒன்றில்லாமையைக் கண்டு நொந்து இரப்பர் அல்லது துறப்பர். அந்த அவலநிலையைப் பெற்ற தாய் தடுக்காமல் இருப்பது, அஃதாவது பரதனுக்குரிய பங்கைக் கேளாமல் தயரதன் விருப்பம்போல் இராமனே முடி புனையட்டும் என்றிருப்பதைக் குறையாகப் பேசுகின்ருள்.

அடுத்துப் பரதன் தயரதனுக்கு மகனாய்ப் பிறந்தும் அரசுரிமை பெறாத ஒருவனாகக் கழிவதை நோக்கினால் அவன் அரசர் எண்ணிக்கையுட்படாது வழுவிப்பிறந்தானோ? அவ் வாறாயின் அவன் இறத்தல் நன்று என்கின்றாள். இதுகாறும் பயந்த கைகேயிபால் நின்ற குறையைச் சுட்டியவள் உற்ற தாதைபால் நின்ற குறையையும் குறிப்பிடுகின்றாள்.

தயரதன் பண்டு வேள்வி வழி மகப்பெற்றான். அவ் வேள்வி வழிவந்த சுதை நிகர் பிண்டத்தை மனைவியர்க்குப் பகிர்ந்து கொடுத்ததிலும் குறை செய்தானல்லன். மகவு என்று யார் வயிற்றுப் பிறந்தாலும் அவன் அரசுக்குரியன் என்று சுதை நிகர் பிண்டம் தந்து மகவு எதிர்பார்த்தான். மூவரும் கருவுற்று நால்வரை ஈன்றனர். முதன் முதல் பிள்ளை. யாகப் பிறந்தான் என்பதால் இராமன்பால் பற்று மிக்கிருந் தான். அதனால் மற்ற மக்களை வெறுத்து வாழவில்லை. ஆனால் அரசினைப் பரதன் இல்லாப்போது தயரதன் இராமனுக்கு அளிப்பதைப் பார்த்ததால் அரசுபெறும் பரதன் பாக்கியம் புரிந்திலன் போலும்; அதனால் அவனைப் பாட்டன் வீட்டிற்கு அனுப்பி அவனில்லாப்போது இராமனுக்கு முடி புனையத் துணிந்தான். அரசுபெறும் பாக்கியமில்லாத பரதன் அக் காட்சியைக் காண்பதும் ஆகாது என்றுதான் மிகத் தொலை வான இடத்திற்கு மிக விரைவாக அனுப்பி மிக விரைவாக ஆவன புரிகின்றான். இப்பொழுதுதான் தயரதன் உள்ளக் கருத்து தனக்குத் தெளிவாயிற்று என்கின்றாள். இதுகாலை தந்தையும் கொடியன் தாயும் கொடியள். பலகால் ஆண்ட அரசினைத் தான் பயந்த மக்கள் எல்லோரும் துய்க்க வேண்டு மென்று கருத்திலாப் பெற்றோரைப் பெற்ற பரதன், எங்ஙனம் இரங்கத் தக்கான்! அந்தோ அவன் என்ன செய்வான்! என்று அவனுக்குப் பரிந்துரைக்கின்றாள்.

இதுகாறும் பரதனைப் பயந்த தாய் தந்தை இருவரும் தனித்தனியும் இணைந்தும் செய்கின்ற கொடுமைகளை நினைந்து பரதனுக்குத் தனித்து நொந்தவள் இப்பொழுது கைகேயிக்குப் பரிந்து கவல்கின்றாள்.

கேகய மன்னனுக்கு மகளாய்ப் பிறந்த கைகேயி அயோத்தி வேந்தன் தயரதனை மணந்து அரசியற் செல்வாக்கில் மகளாகவும் மனைவியாகவும் எல்லாம் பெற்றுத் துய்த்தவள். அச் செல்வாக்கைத் தாயாகவும் இருந்து துய்க்கும் இக்காலத்து மடம்பட்டு இழப்பதற்கு நோகின்றாள். அதோடு அரசு பெறக் கூறும் உரையையும் உணராமைக்கு நோகின்றாள்.

பரதன், கல்வி இளமை கணக்கிலா ஆற்றல் வில்வினை உரிமை அழகு வீரம் எல்லையற்ற குணங்கள் இவ்வளவும் பெற்றிருந்தும் அப்பண்புகளையும் ஆற்றல்களையும் புல்லிடை உகுத்த அமுத மாக்கி விட்டாள் என்று நோகின்றாள். பரதன் முடிபுனைதற்குரிய எல்லாத் தகுதிகளையும் பெற்றிருந்தும் அதனைத்தன் அறியாமையால் கெடுத்தாகக் கூறுகின்றாள்.

இத்தனையும் கேட்ட கைகேயி கடுஞ்சினங்கொண்டு கூனியை வெகுண்டு நோக்கிப் புலைச்சிந்தை படைத்துப்பலவாறு படைத்து மொழிந்ததாகக் கூறிக் கடிந்து காரணங்காட்டி அவள் கூற்றுக்களை மறுக்கின்றாள்.

சூரிய குல மரபில் வந்த அரசர்கள் என்றும் தம் உயிர் போனாலும் உரை திறம்புவதில்லை. அதோடு மயில் இனத்தில் முட்டையிட்டுக்குஞ்சு பொரிக்கும்போது முன்னம் இட்ட முட்டை முதலிலும் பின்னர் இட்ட முட்டை பின்னும் என்றில்லாது ஒரு சேரக் கூட குஞ்சுகள் முட்டை வெடித்து வெளிப்படுவதுண்டு. முட்டை இட்ட முறையில் முன்பின் அறிய முடிந்தாலும் தாயணைப்பில் குஞ்சு பொரிக்கும் போது முன்பின் அறிய முடிவதில்லை. வளர்ந்த குஞ்சுகளில் எது தோகை விரித்து முதன் முதல் ஆடுகின்றதோ அது தான் முன்னது. அது ஆடிய

பின்னர்தான் அடுத்து அடுத்துப் பிறந்த மயில்கள் ஆடத்தலைப் படும். இது மயில் முறை. இம்முறை சூரிய குலத்தாருக்கும் உண்டு. அந்த முறையில் இராமன் மூத்தவன் அரசுக்குரியன் ஆவதைப் புலேச்சிந்தை படைத்து அழித்துரைக்கத் துணிந்த தாயே கொடியாள் என்கின்ருள். கூனி கூற்று மயில் முறைக் குலம் என்பதன்று. மயில்முறைக் குலம் என்பது ஒருமயில் இட்ட முட்டையில் காண்பது. இங்கு மூவர் ஈன்ற மக்களில் மயில் முறைக் குலமில்லை என்பதே அவள் கூறுவது.

இங்குக் கூனி பரதனுக்கு அரசு வேண்டுமென்று கேளாது இருக்கின்ருள் கைகேயி என்ற கூற்றிற்கு மறுப்புரைத்துத் தானே தயரதனே பரதன் திறத்துக் கொடுமை ஒன்றும் இழைக்கவில்லை என்கின்ருள்.

கூனி கூற்றிற்கு எல்லாம் மாற்றம்கூறியதாகக் கருதிய கைகேயி முடிவாகக் கூனி தனக்கோ பரதனுக்கோ தருமத்திற்கோ அவளுக்கோ நல்லது கூருது ஏதோ ஊழ்வயத்தால் தன் மனம் மகிழ்தற்குரியது என்று கருதி 'இங்கனம் சொன்னய் போலும் அறிவிலி' என்று கடிந்துரைக்கின்ருள்.

துளக்க முடைய மனம் படைத்தவராயின் கூனி கூற்றிற்கு மகிழ்ந்து செயற்பட்டழிவர் என்றும் தான் துளக்கமில் சிந்தையுடைமையால் விழிப்போடு இருந்ததாகவும் கூறுகின்ருள்.

அடுத்துக் கூனிக்கு அறிவுரையும் கூறித் திருத்துகின்ருள். பிறந்த உயிர் இறப்பது உறுதி. அது புகழ் பெறுதல் கடமையாகவும் அதனை இழக்குமேயானல் பிறப்பின் பயன் ஒன்றுமில்லாது போகும். அதனல் பண்பு திறம்பினும் நியாயம் திறம்பினும் நெறியின் முறை திறம்பினும் செய்தவம் திறம்பினும், மறம் திறம்பினும் வரன் முறை திறம்புதல் வழக்கோ என்கின்ருள். கூ இவ்வாறு கூனியைக் கடிந்துரைத்துத் தன் எதிரில் நின்று புன்மொழி வழங்கிய அவள் நாவை

அரியாது விடுத்துப் பொறுமை பேணியதாகவும் இச் செய்தியைப் புறத்துளோர் அறிந்தால் கேடுறுவாள் என்றும் நீதிக்கும் நெறிமுறைக்கும் புறம்பான செய்தியை அறிவின்மையால் உரைத்தாள் என்றும் கூறி நாவடங்கப் பணிக்கின்ருள்.

ஆனுல் இவ்வளவு கூறியும் மந்தரை இடம் பெயர்ந்தாள் அல்லள். அவளைக் கைகேயி போகப்பணித்தும் போகாது அவளிடம் அடைக்கலம் புகுந்து அடிமிசை வீழ்ந்து அவட்கு உறுபொருள் உணர்த்த முற்படுகின்ருள்.

அரசு மூத்தவர்க்கு உரியது என்பது பொது முறைமை என்ருல் இப்பொழுது தயரதனே எல்லோருக்கும் முதியவன். அவனிருக்கும் போது இராமன் முடிபுனைய இசைந்துள்ளான். அவன் இசையும்போது அம்முடிபுனைவு பரதனை விலக்கக் காரணமென்ன என்கின்ருள்.

ஒரு குடும்பத்தில் ஒருவனுக்குப் பிறக்கும் பிள்ளைகளில் மூத்தவனுக்கு உரியது அரசு என்பது உலகவர் கொள்கை. மூத்த தயரதன் இருக்க அவனுக்கு இளையனுய இராமன் முடி புனையும்போது பரதனும் புனையலாமே என்பது கூனியின் வாதீடு.

தயரதன் தன்முடியை உயிரோடு இருக்கும்போது தானே அளிப்பதால் மக்கள் நால்வருக்கும் பகிர்ந்து கொடுத்தல் முறையே அன்றி அதனை ஒருவனுக்கே கொடுப்பது முறையன்று என்கின்ருள். தயரதன் இறந்தால் அப்பொழுது மூத்தவன் முடிபுனைதற்குரியவன் ஆவான். அவன் உயிரோடிருக்கும்போது கொடுப்பதுதான் முறையழி செயல் என்கின்ருள்.

இராமனுக்கு நாட்டாட்சியைத் தருவது என்பது கடிமணக் காலத்தில் தயரதன் இராமனுக்குத்தன் செல்வத்தை அளித்து மணமண்டபத்திற்கு அழைத்து வந்தது போல், அஃதாவது, இராமன்சிறந்த ஒரு தேரில் அமர,

*"அணையது ஓர் தேரினில் அருணன் நின்றெனப்*
*பனிவரு மலர்க்கனி அப் பரதன் கோல் கொள*
*குனிசிலைத் தம்பி பின் கூட ஏனையன்*
*இனிய பொற் கவரி கால் இயக்க ஏகினுள்*

[பால. கடிமண-1317]

இது போல் பரதனையும் சத்துருக்கனனையும் அழைத்து மக்கள் நால்வரும் அரசியலில் அவரவர் ஒரு தொடர்புடையா ராய் இருக்க முடிகொடுக்க வேண்டும் என்பது கூனி கூறுவது. பதினுன்கு ஆண்டு கழிந்து இராமன் அயோத்தி புகுந்த போதும் இவர்கள் நால்வரும் அரசியலில்,

*''ஊழியின் இறுதிகாணும் வலியினது உயர்பொற்*
*றேரில்*
*ஏழுயர் மதமாவன்ன இலக்குவன் கவிகை ஏந்த*
*பாழிய மற்றைத் தம்பி பால் நிறக் கவரி பற்ற*
*பூழியை அடக்கும் கண்ணீர்ப் பரதன் கோல் கொள்ளப்*
*போனுன்''.*

[யுத். திருமுடி. 10456]

இங்ஙனம் நால்வரும் பங்கேற்ருல் இராமன் ஆட்சியில் மற்றையோர் ஒவ்வொரு உரிமையுடையராவர்.

பரதனும் சத்ருக்கனனும் இல்லாப்போது இராமன் முடி புனைந்தால் இலக்குவன் தனக்குரிய அரசியற்றெடர்பைக் கொள்வான். மற்ற கோல்கோடல் கவரி இரட்டல் போன்ற செயல் செய்து நால்வரும் ஒருவராய் வாழ முடியாது. இராமனின் இரண்டு தம்பியர் அஃதாவது தயரதனின் இரண்டு மக்கள் புரிய வேண்டிய தொழிலை வேறு யாரோ புரிய நேரும். நேர்ந்தபின்றைப் பரதனும் சத்ருக்கனனும் வந்து காணும்போது அவர்க்குரிய இடம் பிறரால் நிரப்பப் பெற்றிருப்பது கண்டு அவர்கள் அவந்தர்களாய் வெறு நிலத்து நிற்க நேரும். அதோடு அரசியல் உரிமையும் செல்வமும் பெற்றுர் அறம் நிரம்பிய அருந்தவர்களாயினும்

பெறற்கரிய செல்வத்தைப் பெற்றபின் அதனைத் திருப்பித் தர வொல்லார். அவர் சிந்தனையும் வேறுபடும். செல்வம் பெறற் குரியோர் என்பது அறிந்தால் அவரால் ஊறு தமக்கு வருமென்று உன்னி அவர்களை வாழவிடாது ஊறுவிளைப்பர். இது உலக இயற்கை. அந்த முறையில் பரதனைத் தவிக்க விட்டாயே என்கின்ருள்.

கோசலையின் மகன் அரசுபுரிகின்ருன் ஆதலால் அது கோசலைக்கே ஆயிற்று. அது உனக்கும் உன் புதல்வற்கும் ஆகாத போது கோசலை தரும் பொருளைப் பெற்றுத்தானே நீ வாழ வேண்டும். அது ஏன் ? என்பது அவள் வினு.

தயரதனை மணந்தார் மூவரில் மூவரும் பட்டத்தரசிகளே. கோசலை மனைவியாகவும் கைகேயியும் சுமித்திரையும் காமக் கிழத்தியராகவும் வரையப் பட்டவர் அல்லர். தயரதனுக்குப் பட்டத்தரசி என்ற தகுதி பெருது அவனை மணந்த மனைவியர் அறுபதினுயிரவர். அவர்கள் அரசியலில் பங்கு பெறும் உரிமை அற்றவர்கள். மூவரைப் பட்டத்தரசி என்ற தகுதி எதுவும் குறையா வண்ணம் மகப்பேற்றிற்காக மணந்த தயரதன் மூவர்க்கும் ஒப்ப வேள்வி வழிப்பிறந்த மக்கட்குத் தன் அரசை ஒப்பப் பகிர்ந்து கொடுத்தல்தான் முறையே அன்றி ஒருத்தி ஈன்ற மகனுக்கு அரசு முழுமையும் தருவது நேர்மை அற்றது என்கிருள். தயரதனுக்கு ஒருத்தி மனைவியாக அமைந்து அவளுக்கு மக்கள் நால்வர் பிறந்தால் அவருள் மூத்தோனுக்கு அவன் அரசினைக் கொடுப்பது மரபு. அது முறை. ஆனுல் ஒத்த தகுதியுடைய மூவர் ஈன்ற மக்கள் எல்லாவகையிலும் ஒத்தவர்களே அன்றி அரசு பெற மூப்பிளமை என்பன தடையாகா. இதனைப்புரிந்து கொள்ளாத கைகேயிதயரதனுக்கு வாய்த்த மனைவியர் மூவர் என்ற வேற்றுமை இன்றி எல்லோரும் ஒருவர் போன்றும் பிறந்த மக்கள் ஒருவருக்கு வாய்த்தது போன்றும் பேசுவதைக் கடிந்துரைத்துக் கோசலையைச் சுட்டிக்காட்டி வேற்றுமை இருப்பதை உணர்த்திப் பேசுகின்ருள்.

''இராமன் அரசு பெற்றுவிட்டால் கோசலை இன்றுபோல் என்றும் அச் செல்வத்திற்கு உரியவள் ஆவாள். கேகயனே அன்றி அவன் மக்களோ ஊழ்வழி வறியராகி உன்கண் வந்து ஒன்று இரந்தால் இரந்தவர்கட்குக் கொடுக்கும் பெருஞ் செல்வத்தை அரசியற் செல்வாக்கிழந்த நீ அச் செல்வாக்கால் செல்வம் பெற்ற கோசலையிடம் இரந்து பெற்றுத் தருவாயா? அன்றேல் தனக்குரிய உடைமையைப் பெருது போனேன் என்று கவன்று மாள்வாயா? நீவாழுமாறு எங்ஙனம்?'' என்கின்ருள்.

''இதுகாறும் நீயும் பட்டத்தரசியாக இருந்ததால் உன்னைச் சார்ந்த உன் பெற்ரோர் முதலாயினோர் உரிமையோடு வந்தனர்; உவந்து தங்கினர்; உன் செல்வம் துய்த்தனர். இச்செல்வம் இராமன் பெற்ற பின் அவர்கள் பண்டு போல் இவண் போந்து செல்வம் துய்த்து வாழ்வது எங்ஙனம்?'' என்கின்ருள்.

''எல்லாவற்றிற்கும் மேலாக உன் கணவன் தயரதனுக்கு அஞ்சி உன் தந்தையிடம் சனகன் கொண்ட பகையைக் காட்டாது வாழ்ந்தவன், இராமன் முடிக்குரியன் ஆனன் என்றதும் அப்பழம் பகையை முடித்துக் கொள்ள முற்பட்டால் உன் தந்தை உயிர் உய்வது எங்ஙனம்? இவ்வாறு உனக்கும் உன் மகனுக்கும் உன் கிளைக்கும் ஊறுவிளைக்கும் ஒருத்தியாகி வாழும் உன்னைப்போல் பழிபடப் பிறந்தவர் யார்?'' என்கின்ருள்.

''அதோடு சனகனுக்குப் பகைவர் பலர் இருந்தும் அவர்கள் தயரதனுக்கு அஞ்சிக்கிடந்தார்கள். அவர்கள் அவனைத்தெற முற்பட்டால் இராமன் உன் தந்தைக்கு உதவுவது எங்ஙனம்? உன் தந்தைக்குக் கொற்ற மேது? சுற்றத்தையும் கெடுத்த ஒருத்தியாகித் துயர்க்கடல் வீழக் கருதியது எதுபற்றி?'' என்கின்ருள்.

இவ்வளவும் கூறி இறுதியாக, ''உனக்குக் கிடைத்தற்கரிய வனுய் பரதன் மகனுய்க் கிடைத்தும் அவனை வாழவிடாது கெடுத்தாய். தயரதன் அரசு இராமன் பக்கலில் இருக்கும் இலக்குவனுக்குப் பாகமாகி அவன் வழி முறையினுர்க்கும் ஆகுமேயன்றி இங்கில்லாப் பரதனுக்கும் அவனேடு வாழும் சத்ருக்கனனுக்கும் அவர் வழி முறையினுருக்கும் ஆகுமாறு எங்ஙனம்? பரதன் இல்லாதபோது அவருக்குரிய பாகத்தை கேட்டுப் பெறும் தகுதியுடைய தாய் இதுகாலைக் கேளாது ஒழியின் அவள் மகனைக் கெடுத்தவள் என்ற பெயரைப் பூண்பதன்றி மகனுக்காக வாழ்ந்தவள் என்று அழைக்கப் பெறுமாறு எங்ஙனம்?'' என்கின்ருள். இவ்வாறு கூனி தொடர்ந்து இராமன் முடிபுனைவதால் பரதனுக்கும் தனக்கும் கைகேயிக்கும் அவள் உற்ருர் உறவினர் போன்ரேருக்கும் வரும் இழப்புகளைத் தொகுத்துக் காரணங் காட்டிக் கூறியதும் மறுப்புரை இல்லாத அவள் பேச்சைக்கேட்ட கைகேயியின் தூய சிந்தை திரிகின்றது.

இது காறும் கைகேயி இராமன்பால் தயரதன் வைத்த பாசத்தால் தானும் தொடர்ந்து பாசம் வைத்து அப்பாச மயக்கில் தனக்கென்று ஒன்றில்லாது வாழ்ந்தவளுக்குக் கூனி அவள் கொண்டிருந்த இராம மயக்கத்தைப் போக்கித் தெளிவு பெறச் செய்ததும் அவள் மனம் முன்னிருந்த மயக்க *நிலையினின்றும் திரிகின்றது.* தயரதன்பாலும் இராமன் பாலும் குறை காணுது வாழ்ந்த கைகேயி குறையுண்மை காணும் பெற்றியைப் பெற வைக்கின்ருள் கூனி. அவள்கூற்றில் நேர்மையும் முறைமையும் கண்ட கைகேயி ஆண்டில்லாத மகனுக்கும் பாகம் பெற வழி கூறுமாறு வேண்டுகின்ருள்.

**எனை உவந்தனை; இனியை; என்மகனுக்கும் அனையான்**
**புனையும் நீள்முடி பெறும்படி புகலுதி**

(அயே. மந் சூழ் 1485)

இவ்வாறு கைகேயி தன் வயப்பட்டமை உணர்ந்து மகிழ்ந்து அவளைப் பாராட்டித் தன் உரையின்படிக் கேட்டொழுகினுல் பாகமென்ன தயரதன் இராமனுக்குத் தர இருந்த உலகம் ஏழு ஏழு என்னும் முழு நிலத்தையும் அவள் மகனுக்கு ஆக்குவதாக உறுதி கூறுகின்ருள். அவ்வுறுதியை நிறைவேற்ற வேண்டின் ''நீ அன்று சம்பரப்போர் நிகழ்ச்சியில் தயரதன் உவந்தளித்த வரங்கள் இரண்டையும்கேள்'' என்று கூறி அவ்வரங்களை கேட்கும் பெற்றியையும் கூறிக் காட்டுகின்ருள்.

''இரண்டு வரங்களில் ஒன்றால் தயரதன் அரசினைக் கொள் என்றும் மற்றைய வரத்தால் இராமனைப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் திரிதரச் செய்'' என்றும் கூறுகின்றாள். இவ்வாறு வரங்கேட்டால் பரதன் முழு நிலத்தையும் பெறுவான் என்கின்றாள்.

இங்குக் கூனி தயரதன் நாடு முழுவதையும் பரதன் பெற வரம் ஒன்றால் வழி வகுத்தவள் ஒரு பதினான்கு ஆண்டுகள் என்றது சிந்தனைக்குரியது. இராமன் தனக்கிழைத்த தீங்கிற்கு ஒரு தண்டனை அனுபவிக்க வேண்டும். அத்தண்டனை என்பது பதினான்கு ஆண்டுகட்கு ~~என்பதால்~~ இராமன் பதினான்கு ஆண்டுகட்கு முன் தனக்கு ஊறு விளைத்தான். அப்பதினான்கு ஆண்டுகள் அவள் அத்துன்பம் போக்க வாய்ப்பற்று நொந்தாள். இப்பொழுது இராமன் அப்பதினான்கு ஆண்டுகள் காட்டகத்து உழலவேண்டுமென்பது பகை பற்றிக் கொண்டது. ஆனால் பதினான்கு ஆண்டு என்பது எதற்கு என்று கைகேயி கேட்டால் அதற்கு விடை தனக்கிழைத்த தீங்கென்று கூறினால் அவள் அதனை ஏற்றுக் கொள்ளமாட்டாள். அதற்குத்தான் இராமன் தாடகை என்ற பெண் கொலை புரிந்த பாவம் போக்க பதினான்கு ஆண்டுகள் என்று கூறுகின்றாள். இக்கூற்று வெளிப் படையானதன்று, கைகேயி உய்த்துணர்ந்தது. இவ்வாறு பதினான்கு ஆண்டுகட்குப் பரதனுக்கு நாட்டை உரிமை யாக்குவதும் இராமன் பாவம் கழித்து வரக் காடு புகுவதும் முறை என்று கொண்ட கைகேயி கூனியைப் பாராட்டிப் பரதனைப் பயந்தவள் கூனியே என்கின்றாள்.

> *''உரைத்த கூனியை உவந்தனள் உயிர் உறத்தழுவி*
> *நிரைத்த மாமணி ஆரமும் நிதியமும் நீட்டி*
> *இரைத்த வேலை சூழ் உலகம் என் ஒருமகற்கு ஈந்தாய்*
> *தனக்கு நாயகன் தாய் இனி நீ எனத் தணியா*
>
> *நன்று சொல்லினை நம்பியை நளிர் முடி சூட்டல்*
> *துன்று கானத்தில் இராமனைத் துறத்தல் இவ்விரண்டும்*
> *அன்றதாம் எனில் அரசன் முன் ஆருயிர் துறந்து*
> *பொன்றி நீங்குதல் புரிவென்யான் போதிநீ என்றாள்."*

(அயோ. மந் சூழ் 1578, 1579)

இங்கு இருவரும் நேர்மை குன்றிய தயரதனைத் திருத்தி நேர்மையில் நிற்கச் செய்வதற்கு வேறாக அவன் செய்யத் துணிந்த அடாத செயல் எத்துணைக் கொடுமை உடையது என்பதை அவன் உணர வேண்டுமென்பது துணிந்து இச் செயலில் இறங்கினர்.

கூனி, தயரதன் கொடுத்த அரசினை இராமன் ஏற்க உடன் பட்டாள். ஆனால் இப்பொழுது அவன் நாடு தவிர்ந்திருப்பது ஒரு பதினான்கைய ஆண்டிற்கே. கூனி மனநிலையில் இராமனுக்கு அது ஒருபுடை தண்டனை என்றாலும் கைகேயி மனநிலையில் அது அங்கனமன்று. இராமன் தான் செய்த பெண் கொலைப் பாவங்கழிக்கச் செல்கின்றானேயன்றி ஒரு தண்டனை பெற்றுப் போகவில்லை. இராமன் அதனைத் தண்டனை என்று கொண்டாலும் அது பிறர்க்குப் பெரும் பயனளிப்பதால் ஏற்றுக் கழிப்பதற்குரியது என்ற கருத்தினன். கூனிக்கு ஒரு புடை இராமன் காட்டில் வாழ்வது விருப்பாயினும் இராமன் பாவக் கழிப்பிற்குப் பின் பட்டம் பெறுவதைக் கூனி மறுக்கவில்லை.

இங்குக் கூனி எழுப்பிய பழைய வினாக்கள் இன்னும் விடை பெற்றுத் தீர்ந்தன அல்ல. பதினான்கு ஆண்டுகட்குப்பின் அம் முடிக்குரியோன், கைகேயி கூனி இருவர் கூற்றுப்படி அஃதாவது தயரதன் பால் வரங்கேட்கத் துணிந்தபடி இராமன்தானே. அதன்பின் கைகேயி கோசலையிடம் கையேந்தி வாழ வேண்டாமா? சிவந்த வாய்ச் சீதையும் இராமனும் நிவந்த ஆசனத்திருப்பப் பரதன் நிலத்திடை நிற்க வேண்டாமா? இதுபோல் கூனி கேட்ட வண்ணம் அனைத்துத் தடைகளும் நீக்கப் பெற்றுவிடுமா?

ஆம்; பரதன் நாட்டாட்சிப் பொறுப்பைப் பெற்று விட்டால் அதுவும் பதினான்கு ஆண்டுகட்குப் பெற்றுவிட்டால் சனகனுக்கும் கேகயனுக்கும் இருந்த பகை சந்து செய்விக்கப் பெறும். ஆட்சிபெற இருந்த இராமனின் மாதுலனும் சீதையின் தந்தையும் தன் தாய் வழிப்பாட்டனால் நலிவிக்கப்பெறார். காரணம் பரதனுக்கும் சனகன் மாமனாவான். அப்படிச் சனகன் கேகயனோடு பொருதற்கு முற்பட்டால் அதனைப் பரதன் காணப்பொறான். அன்றியும் இராம இலக்குவர் காட்டிலிருக்கும் போது எண்ணில் குணம் பெற்ற அவன் இடங்கொடான். பரதன் அரசியற் பொறுப்பேற்று ஆண்டு விட்டால் ஆட்சிப் பொறுப்பிற்குரியன் ஆகிவிடுகின்றான். பின் அவன் இராமனுக்கு நாட்டைத் தரும்போது தனக்குரிய உரிமையை இழந்து அளிக்கப்போவதில்லை. அன்றியும் பரதன்

அளித்துப் பெறவேண்டியவனுகிய இராமன் பரதனுல் அளிக்கப் பெற்ற நாட்டுரிமையை முற்றிலும் பரதனுக்கில்லாது செய்யப் போவதில்லை. இவ்வாறு பரதன் அரசர் மாலையுட்படுவான். கைகேயியும் அரசி என்ற பெருமை இழக்கப்போவதில்லை. எல்லாம் நன்ருக முடியும். தயரதன் ஒரு மகற்கென்று கொடுத்த அரசு அவனுக்கும் அடுத்த தம்பி இலக்குவனுக்கும் ஆகிப் பரதனுக்கும் சத்துருக்கனனுக்கும் என்றும் இல்லாது போகாது. நால்வரும் பிறப்பிடை ஒத்தது போல ஆட்சியிலும் ஒத்துரிமை உடையவராய் வாழ்வர் என்று எல்லோரும் இன்புற்று வாழ வழி சொன்னவள் கூனி. இதுதான் இறுதியில் நடைபெறுகின்றது. கைகேயி பேச்சைக்கேட்டுப் பொறுமையாகத் தயரதன் இருந்திருப்பானேயானுல் இறப்பும் அவலமும் பிறந்திரா.

பரதன் நாடு பெற்று இராமனும் அவனுக்குரிய பாகம் பெற்று ஒரு சேர எல்லோரும் அயோத்தியிலிருந்தே வாழலாம் என்ருல் இராமன் இதுகாலை அரசு ஏற்க நின்ற தடை பெண் கொலையாகி அது ஆடவர் நகைப்புக்குரியதாக இருக்கும்போது அவன் முடி சூடல் ஆகாது. அவன் அப்பாவக் கழிப்புக்குரிய பதினுன்கு ஆண்டேனும் காட்டகத்து வாழவேண்டும். ஆண்டு அவன் முனிவர்கள் சேர்க்கையால் ஆசியும் தவமும் பெற்றுக் பாவங்கழித்துத் தூயனுன பின்றை முடி ஏற்கலாம் என்பது அவள் கொள்கை.

கூனி இராமனை அதுகாலை முடிசூடாது தகைத்து அவனை அயோத்தியிலேயே இருக்கச் செய்யாது காட்டிற்கு அனுப்பியதில் அவள் தீய எண்ணம்தானே புலப்படுகின்றது என்ருல் இல்லை அவள் இராமனை தனக்கிழைத்த கொடுமைக்கு ஒறுக்க வேண்டுமென்று கருதினுலும் அது ஒருமுறையோடு பட்டிருப்பதைக் காணலாம். கூனி பதினுன்கு ஆண்டுகள் என்று கூருது காலக் கணிப்பின்றிக் காட்டகத்துத் திரிதரச்செய்திருக்கலாம். காலக்கணிப்பின்றி நாடு கேட்கச் செய்திருக்கலாம். அது தவிர்ந்து ஒறுப்புக்குரிய பதினுன்கு ஆண்டிற்குப் பிறகு அவன் தனக்குரிய நாட்டுரிமையைப் பெறக் குறுக்கிட்டாள் அல்லள். இராமன் தனக்கிழைத்த கொடுமைக்குரிய ஒறுப்பினைப் பெருதே போவதும் முறையன்று. இராமன் அவளுக்கிழைத்த கொடுமை அவன் பிறப்புரிமை பெற்ற தகுதியால் ஆனது.

அது முற்பகல் செய்தது பிற்பகல் விளையாமலே போகக்கூடாது என்பதாலும், அரசுபெறுமுன் அவனை ஒறுப்பது எளிது என்பதாலும், தன்பால்புரிந்த குற்றமும் தாடகையைக் கொன்ற குற்றமும் கழிந்த பின்றை அவன் முடிபுனையட்டும் என்றும் கொண்ட கொள்கை நேரியதேயன்றிக் குறைபாடுடையாததன்று.

தயரதன் கோசலையிடம் இராமன் காடுபுக நேர்ந்த செய்தியைக் கூறும்போது,

*''வன்மாயக் கைகேயி வாக்கால் என்றன் உயிரை*
*முன் மாய்விப்பத் துணிந்தாளேனும் கூனிமொழியால்*
*தம்மா மகனும்தானும் தரணி பெறுமாறு அன்றி*
*என்மாமகனைக் கான் ஏகு என்றாள் என்றான்.''*

(அயோ. நகர். 1765)

இவ்வாறு கைகேயியை இகழ்ந்தான். அவளைத் தாரம் அல்லள் என்று துறந்தான். பரதனை மகன் அல்லன் என்று துறந்தான். இந்த நிலையை இராமன் பின்னர் மாற்றுகின்றான். ஆனால் கூனியைப்பற்றி அவன் ஒன்றும் மொழிந்திலன். அவளைப் பற்றிய பேச்சு எங்கும் எழவில்லை. சுக்கிரீவனிடம், ''குறியதாம் மேனியாய கூனியால் வெறியன எய்தி நொய்தின் வெந்துயர்க் கடலில் வீழ்ந்தேன்'' என்ற இராமன் கூனியால் இராவணன் முதலிய அரக்கரை அழித்துத் தேவர்க்கு உறுபதம் அளித்தேன் என்று பாராட்டியிருக்க வேண்டும். கூனிபேச்சைக் கேட்டுச் செயற்பட்ட கைகேயி தெய்வமானாள் என்றால் இராமனையே பரதனையும் சத்ருக்கனனையும் இன்றி அரசியல் நடாத்தக் கருதிய தாதை கருத்தை மறுத்து,

*''உம்பரோடும் இம்பர் காறும் உலகம் ஓர் ஏழும் ஏழும்*
*எம்பெருமான் என்று ஏந்தி இறைஞ்சி நின்று ஏவல்செய்ய*
*தம்பியரோடும் தானும் தருமமும் தரணி*

(யுத்த. 10532)

காக்கச் செய்து, கரை தெரிவு இலாத போகக் களிப்பினுள் இருக்கச் செய்த கூனியும் தெய்வமென்று இராமனால் போற்றற்குரியள் அல்லளோ? கூனியைக் குறிப்பிட்டுப் போற்ற இராமன் வாய்ப்பற்றான் போலும்!